# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 18

1952 நவம்பர் 30

நந்தன ஸ்ரீ
கார்த்திகை 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளின் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

நவம்பர் **28** உ முதல் தமிழ் நாடெங்கும்!



குடும்பத்துடன் கண்டு களிக்க வேண்டிய படம்

கே & கே ப்ரொடக்ஷன்ஸ்

# பசியின் கொடுமை

(தமிழ்)



டைரக்ஷன்:
**K. மோகன் ராவ்.**

---

| வசனம், பாடல் | சங்கீதம் | போட்டோகிராபி: |
|---|---|---|
| வித்வான் பா. ஆதிமூலன். | P.S. திவாகர். | F.R. கூப்பர். |
| அண்ணல் தங்கோ. | | F.R.S.A (Eng). |

இதன் மலையாளம் "விசப்பின்டே விளி". தெலுங்கு "ஆகலி" வெளியீடுகள் எல்லா இடங்களிலும் வெற்றிகரமாக நடைபெற்று வருகின்றன.

**கே & கே ப்ரொடக்ஷன்ஸ், எர்ணாகுளம்...**




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 18

# கொடிய போரைத் தடுக்கும் திட்டம்

உலகத்திலே இதுவரையில் யாரும் கண்டும் கேட்டும் இராத ஒரு கோர நாடகம் கொரியா தேசத்தில் சென்ற சில மாதங்களாக நடைபெற்று வருகிறது.

ஒருபுறம், கொரியா போரில் ஈடுபட்டுள்ள மாபெரும் வல்லரசுகளுடைய கட்சிகளின் பிரதிநிதிகள் பான்முஞ்சாம் என்ற கொரிய நகரம் ஒன்றில் சமாதான முழக்கம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

மற்றொருபுறம், அவர்களுடைய வெடிகுண்டுகளின் முழக்கம் கொரியா தேசம் முழுவதையும் அல்லோல கல்லோலப்படுத்தி வருகிறது.

கொரியா போர் ஆரம்பமாகி இரண்டு வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டன.

பெயரளவில் கொரியா போர் நின்று, சமரசப் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாகிப் பதினைந்து மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன.

சில மாதங்களுக்கு முன் கொரியாவில் சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கும் போது, திடீரென்று ஒருநாள் பத்திரிகைகளில் திடுக்கிடத்தக்க ஒரு செய்தி வெளியாயிற்று.

"நூற்றுக் கணக்கான அமெரிக்க விமானங்கள் வடகொரியாவில் உள்ள மின்சார நிலையம் போன்ற பல கேந்திரப் பிரதேசங்களின் மீது குண்டு மாரி பொழிந்தன. அவைகள் மொத்தம் ஆயிரத்து நானூறு டன் வெடி குண்டுகளை வீசின. இருபத்து மூவாயிரம் காலன் ஜ்வாலை குண்டுகளை (Napalm bomb) வீசின" என்று அச்செய்திகள் புள்ளி விவரங்களுடன் கூறின.

அன்றிலிருந்து இன்று வரையில் அமெரிக்க விமானங்கள் அடிக்கடி சீன-வட கொரியா எல்லைப் பிரதேசங்களைப் பயங்கரமாகத் தாக்கி வருகின்றன என்பதை அமெரிக்கப் பத்திரிகைகளே பெருமையாகக் குறிப்பிட்டு வருகின்றன.

கொரியா சமரசப் பேச்சு வார்த்தைகளில் அடிக்கடி முட்டுக்கட்டை ஏற்படுவதாகவும் செய்திகள் கூறுகின்றன.

ஒரு புறம் கோர யுத்தம் நிகழ்ந்து வருகையில், மற்றொரு புறம் சமரசப் பேச்சு எவ்விதம் வெற்றிகரமாக நடைபெறும் என்பதுதான் தெரியவில்லை!

இத்தகைய படுமோசமான நிலைமைக்கு யார் பரிகாரம் தேடுவது?

உலகத்தை ஆட்டி வைக்கும் மாபெரும் வல்லரசுகள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து நிற்கின்றன.

இந்த நிலைமையில் கொரியா யுத்தத்தை நிறுத்துவது எப்படி? சமரசப் பேச்சில் ஏற்பட்டுள்ள முட்டுக்கட்டையைத் தீர்ப்பது எப்படி?

மேற்படி மகத்தான பொறுப்பை ஏற்று அதற்கு ஒரு முடிவு காண இப்போது பாரத நாடு முன் வந்திருக்கிறது.

பாரத நாடு உலக வல்லரசுகளில் ஒன்றல்ல. எனினும் உலக நாடுகளிலே வல்லரசுகளுக்குள்ள மதிப்பையும் செல்வாக்கையும் இந்தியா சம்பாதித்துக் கொண்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

இந்தியாவின் அரும்பெரும் தலைவர் ஜவாஹர்லால் நேரு கையாண்டு வரும் வெளிநாட்டுக் கொள்கையே அத்தகைய சிறப்புக்கும் செல்வாக்கிற்கும் காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

சுதந்திர இந்தியா உலக நீதியை மறந்து, சுய நலத்தையே பெரிதாகக் கருதி ஏதாவதொரு வல்லரசின் கட்சியில் சேர்ந்து கொண்டிருக்கலாம். அவ்விதம் செய்திருந்தால், கொரியா யுத்தத்தில் ஈடுபட்டுள்ள வல்லரசுகளிடையே மத்தியஸ்தம் செய்து வைக்கக் கூடிய செல்வாக்கு இன்று இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்க முடியாது.

* * * *

கொரியா யுத்த சமாதானப் பேச்சில் இப்போது ஏற்பட்டுள்ள தீர்க்க முடியாத முட்டுக்கட்டைக்குக் காரணம் யுத்தக் கைதிகள் பிரச்னைதான்.

# உண்மை உருவம் எது?

(1) பிரஜா-சோஷலிஸ்டுக் கட்சி இரு பிரமுகர்களின் கலப்படமா?...



(2) குடை ராட்டின விளையாட்டா?



(4) சர்க்கஸ் வித்தையா?....



கொரியா ஜல சந்தியில் கோஜி என்ற தீவு ஒன்று இருக்கிறது. கொரியப் போரில் கைது செய்யப்பட்ட சீன, வட கொரியத் துருப்புகள் மேற்படி தீவில் வைக்கப்பட்டிருக்கின்றனர்.

அவர்களை வட கொரியாவுக்கும் சீனவுக்கும் திருப்பி அனுப்பி விடவேண்டும் என்று சீனப் பிரதிநிதிகள் கூறுகின்றனர். தங்களிடம் உள்ள யுத்தக் கைதிகள் திரும்பிச் செல்ல விரும்பாததால் அவர்களைத் திருப்பி அனுப்ப முடியாது என்று அமெரிக்கர்கள் மறுக்கிறார்கள்.

தாங்கள் அவ்வாறு மறுப்பதற்கு அமெரிக்கர்கள் கூறும் காரணம் இதுதான்.

"ஒன்றரை லட்சத்துக்கு மேற்பட்ட மேற்படி துருப்புகளில் பலர் கம்யூனிஸ்டு ஆட்சிக்கு உட்பட்ட பிரதேசங்களுக்குத் தாங்கள் திரும்பிச் செல்ல விரும்பவில்லை என்று கூறுகின்றனர். தங்களை அந்தப் பிரதேசங்களுக்குத் திருப்பி அனுப்புவதால் தங்களுடைய உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்றும் அவர்கள் பயப்படுகிறார்கள். எனவே, அவ்விதம் திரும்பிச் செல்ல விரும்பாதவர்களை வற்புறுத்தித் திருப்பி அனுப்புவது ஜீவகாருண்ய மற்ற செய்கையாக முடியும்" என்று அமெரிக்க சர்க்கார் கருதுகின்றனர்.

"மேற்படி" கைதிகள் திரும்பிவர விரும்புவதாகவும், ஆனால் அவர்களைத் திருப்பி அனுப்பாமல் சீனவுக்கு எதிராகப் படைகள் சேர்க்க அமெரிக்கா சூழ்ச்சி செய்வதாகவும் சீன சர்க்கார் குற்றம் சாட்டுகின்றனர்.

இந்தப் பிரச்னையை உடனே தீர்க்காமல் கொரியா யுத்தத்தை நீடிக்க விட்டால், அது உலக யுத்தமாக மாறிவிடக்கூடும் அல்லவா!

எனவே அந்த முட்டுக் கட்டையைத் தீர்த்து, கொரியா யுத்தத்துக்கு ஒரு முடிவு காண்பதற்காக இந்தியா ஒரு திட்டத்தைத் தயாரித்து

## காங்கிரஸ் கமிட்டிகளும்

சிதம்பரத்தில் காங்கிரஸ் தொண்டு நல்ல முறையில் நடந்து வருகிறது என்று தெரிந்து கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது பற்றித் திருப்தி அடைகிறோம். சிதம்பரம் நகர காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் எழுதியுள்ள கடிதத்தின் முக்கியமான பகுதியை இங்கே மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்:—

"கல்கி 16—11—52 இதழில் இன்னூர் காங்கிரஸ் தலைவர் எழுதிய செய்தியைப் பிரசுரித்துள்ளீர்கள். மிகவும் சந்தோஷம். ஆனால் சரிவர இந் நகர காங்கிரஸ் கமிட்டியின் வேலைகளைப் பற்றி விசாரித்து அறிந்து கொள்ளாமல் பிரசுரித்தது பற்றித் தலைவர் என்ற முறையில் எனக்கும், எனக்கு உறுதுணையாக உள்ள உறுப்பினர்கட்கும் என்னை இன்று வரை ஆதரித்து வரும் காங்கிரஸ் அபிமானிகட்கும் மிக்க வருத்தத்தை உண்டாக்கியுள்ளது.

"சென்ற வருஷம் நடந்த சட்டசபைத் தேர்தல்களிலும் சமீபத்தில் நடந்த நகரசபைத் தேர்தல்களிலும் இங்கே காங்கிரஸ் அடைந்த வெற்றிகள் எங்கள் நகர — தாலுக்கா காங்கிரஸ் கமிட்டிகளின் வேலைத் திறமையைக் காட்டும். நாங்கள் இரண்டு தேர்தல்களிலும் கடுமையான எதிர்ப்புக்களிடையே இராப்பகலாகத் தீவிரமான வேலை செய்துதான் இந்த வெற்றியைக் கண்டோம். எங்களில் பலர் நீண்ட நாளாகக் காங்கிரஸில் பூரண

ஐக்கிய நாடுகள் சபையின் பரிசீலனைக்குக் கொண்டு வந்திருக்கிறது.

கொரியா யுத்தத்தில் சம்பந்தப்படாத ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாந்து, போலந்து, செக்கோஸ்லவேகியா முதலிய நாடுகளோ, அல்லது வேறு ஏதாவது நாலு நாடுகளோ அடங்கிய ஒரு கமிஷனை நியமிக்க வேண்டும். யுத்தக் கைதிகளை ஏதாவதொரு நடுநிலைமைப் பிரதேசத்துக்குக் கொண்டு வர வேண்டும். அந்தக் கைதிகளில் யார் யார் வட கொரியாவுக்கோ, சீனுவுக்கோ திரும்பிச் செல்ல விரும்புகிருர்களோ, அவர்களை மாத்திரம் திருப்பி அனுப்பிவிட வேண்டும். — இவைதான் இந்தியத் திட்டத்தின் முக்கிய ஷரத்துகள்.

மேற்படி இந்தியத் திட்டத்தை முதலில் அமெரிக்கா ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டது. எனினும் அதற்குப் பிரிட்டன் பூரண ஆதரவு அளிக்க முற்பட்டதால், அவ்விஷயமாக அமெரிக்காவிலும் ஆதரவு ஏற்பட்டுவருகிறது. கொரியா யுத்தத்தில் நேரடியாக ஈடுபட்டுள்ள பெரும்பாலான நாடுகளும் இந்தியாவின் சமரசத் திட்டத்தை ஆதரிக்கின்றன என்று தெரிகிறது.

ஆனல் ருஷ்யா வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ விஷின்ஸ்கி மேற்படி திட்டத்தை ஏற்க முடியாது என்று கூறியிருக்கிருர்.

தற்போதுள்ள உலக அரசியல் கொந்தளிப்பில், எல்லா வல்லரசுகளுக்கும் பூரண திருப்தி அளிக்கக் கூடிய திட்டத்தை யாராலும் தயாரிக்க முடியாது.

எனவே, பெரும்பாலான நாடுகளின் ஆதரவைப் பெற்றுள்ள இந்தியாவின் திட்டத்தை வல்லரசுகள் ஏகோபித்து ஒத்துக் கொண்டாலன்றி, கொரியா யுத்தம் நிற்பதற்கு வழியில்லை.

யுத்தக் கைதிகள் பிரச்னைக்காகத் தினசரி நூற்றுக்கணக்கான உயிர்களைப் பலிகொடுக்கும் யுத்தத்தை நீடிக்க விடுவது எவ்வளவு அக்கிரமம்!

# இளைஞர் முன்னணியும்

தொண்டு ஆற்றி வருபவர்கள். அவர்கட்குப் பொது வேலையே முக்கியம். மாதத்தில் பதினைந்து தினங்களாவது வேலை செய்து வருகிருர்கள். நாங்கள் கமிட்டியின் சார்பிலும் தனிப்பட்ட முறையிலும் தக்க சமயங்களில் உகந்த முறையில் பல பொதுக் கூட்டங்கள் போட்டு நடத்தி வந்தோமே தவிர வக்கற்றுச் சும்மா இருந்துவிடவில்லை......"

மேற் கண்டதைப் படித்த பிறகு, சிதம்பரம் நகர காங்கிரஸ் கமிட்டியைப் போல் தமிழ் நாட்டில் எல்லா இடங்களிலும் காங்கிரஸ் கமிட்டிகள் விழிப்புடனிருந்து வேலை செய்தால் எவ்வளவு நன்ருயிருக்கும் என்று சொல்லத் தோன்றுகிறது.

மேற்படி கடிதத்தின் பிற்பகுதியில் சிதம்பரம் இளைஞர் காங்கிரஸைப் பற்றிப் பல குறைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஒரேவிதமான தவறை இரு முறை செய்ய வேண்டாம் என்று அந்தப் பகுதியை இங்கே வெளியிடவில்லை.

தேசத் தொண்டு செய்வதில் ஓரளவு போட்டியிருந்தால் அது விரும்பத் தக்கதேயாகும். ஆனல் ஒருவரை யொருவர் குறை கூறுவது அவசியமும் இல்லை; விரும்பத்தக்கதுமல்ல.

காங்கிரஸ் கமிட்டிகள் நன்ருக வேலை செய்து கொண்டிருக்கும் இடங்களிலும் சரி, தூங்கிக் கொண்டிருக்கும் இடங்களிலும் சரி, தேசிய இளை









ஞர் முன்னணி அமைப்புக்கள் ஏற்பட்டு வேலை செய்வது வரவேற்கத் தக்கதாகும். காங்கிரஸ் கமிட்டிகள் நன்றாக வேலை செய்யுமிடங்களில் காங்கிரஸ் கமிட்டிகளுடன் பூரணமாக ஒத்துழைத்து இளைஞர் முன்னணிகள் வேலை செய்ய வேண்டும்.

காங்கிரஸ் கமிட்டிகள் நன்கு இயங்கி வேலை செய்யாத இடங்களில் அவற்றின் வேலையை இளைஞர் முன்னணிகள் செய்ய வேண்டியதுதான்.

ஆனால் குறை கூற வேண்டிய அவசியமும் இல்லை குறை கூறுவது அவசியமும் இல்லை.

நமது நாட்டின் இப்போதைய நிலையில் தேசியப் பணியிலும் சமூகத் தொண்டிலும் எல்லாரும் ஈடுபடுவதற்கு அவசியமிருக்கிறது; எல்லாருக்கும் இடமிருக்கிறது. போட்டி யிட்டுக் கொண்டு பணி செய்தாலும், குறை கூறி விரோத பாவத்தை வளர்க்காமலிருப்பது மிக்க அவசியம்.

# மல்யுத்தம் – ஒரு விளையாட்டா?

நமது மதிப்புக்குரிய சகோதரி ஒருவர் பின் வருமாறு எழுதியிருக்கிறார் :—

"கலையிலாகட்டும், அரசியலிலாகட்டும், மற்றும் பொது விஷயங்களிலாகட்டும், தங்கள் கருத்துக்களும் அபிப்பிராயங்களும் உன்னதமாகவும், மக்களுக்கு வழி காட்டியாகவும் அறிவூட்டுவனவாகவும் இருந்து வருகின்றன. பல பத்திரிகைகள், வாசகர்கள் மனத்தைக் கவர்ச்சிப்பதற்காக என்னென்னவோ உபாயங்களைத் தேடுகின்றன. போட்டிப் பந்தயம் முதல் குதிரைப் பந்தயம் வரை மனிதர்களுடைய பேராசை முதலிய கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டும் விஷயங்களைக் கொடுத்து வருகிறார்கள். ஆனால் 'கல்கி' அந்த வித முறைகளுக்கு இதுவரை போகாமலே வாசகர்களை மகிழ்வித்திருக்கிறது. ஆகையால் 'கல்கி'யில் ஏதாவது சிறிது தரம் குறைவதாகத் தோன்றினாலும் அது பெரிதும் வேதனை தருகிறது.

நான் குறிப்பிடுவது சென்ற 23உ 'கல்கி'யில் வெளி வந்துள்ள மல் யுத்த விமரிசனம்தான். மல் யுத்தம் புராதன மகிமை வாய்ந்ததாக இருக்கலாம். பீமன், கடோத்கஜன் முதலியவர்கள் புகழ் பெற்ற வித்தையாக இருக்கலாம். அந்தக் காலத்து மல் யுத்தம் எப்படியோ நமக்குத் தெரியாது. ஆனால் இப்போது சென்னையில் ஆயிரக்கணக்கான ஜனங்களை ஆகர்ஷிக்கும் மல் யுத்தம் ஒரு "விளையாட்டு" என்று கூறுவது வேடிக்கைதான்!

ஒரு தடி மனிதனை மற்றொரு மாமிச மலை தன் முழு பலத்தால் தாக்கி ஏறி, மிதித்து, வதைத்து, கடித்து, மூக்கில் விரல் விட்டு ஆட்டி, வாயில் கையை விட்டுக் கிழித்து, தலையைத் தேங்காய் உடைப்பது போல் உடைத்து, கழுத்தை நெரித்து, காலால் உதைத்து, நகத்தால் பிறாண்டி, இன்னும் சித்திரவதைகள் எத்தனையுண்டோ, அத்தனையும் கையாளுகிறான். இந்த மிருகத்தனமான நடவடிக்கையை "ஒரு விளையாட்டு" என்று கருதுவது எந்த நாகரிகத்துக்குப் பொருத்தம் என்று எனக்குப் புரியவில்லை. இந்த அருவருக்கத் தக்க கோரக் காட்சியைக் காண மனோதிடமுள்ள ஆண் சிங்கங்கள் போவது கூட அவ்வளவு அதிசயமில்லை. சேலை கட்டிய பெண் புலிகள் நூற்றுக் கணக்காகப் போய், ஆண்களோடு சரிநிகர் சமானமாக, கூச்சலிட்டு, எக்காளம் போட்டுக் குதிக்கிறார்களே, இந்த நாகரிகத்தைப் பற்றி எங்கே போய்ச் சொல்லி அழுவது!

இத்தகைய அநாகரிகமான, ராக்ஷஸ 'விளையாட்டையும்' அதைப் பார்க்கப்போன ரஸிக சிகாமணிகளையும் கண்டிப்பதை விட்டுத் தங்கள் பத்திரிகையில் அதைப் போற்றி ஒரு விமரிசனம் வந்திருப்பது விசனத்துடன் வியக்க வேண்டியிருக்கிறது. சினிமாவில், டப்பா கீதத்தையும், கபந்த பிண்டத்தையும் சகிக்காத தாங்கள் எப்படி இந்தக் கீழ்த்தரமான மிருக விளையாட்டைப் பாராட்ட முடியும் என்பது விளங்கவில்லை......"

மேற்கண்ட கடிதத்திலுள்ள கருத்துக்களை நமது நேயர்களில் பலரும் ஆமோதிக்கக் கூடும். வேறு பலர் ஆட்சேபிக்கவும் கூடும். பதினாயிரக் கணக்கான மக்கள் 'மல் யுத்தம்—ஒரு விளையாட்டு' என்று எண்ணிப் பணம் கொடுத்துப் போய்ப் பார்க்கிறார்கள் அல்லவா!

நம்மைப் பொறுத்தவரையில் மல் யுத்தம் ஒரு விளையாட்டா யிருந்தாலும் சரி, வினையாகவே இருந்தாலும் சரி, அது நமது நாட்டில் புராதன காலத்திலிருந்து வழி வழியாக வந்தது என்ற காரணத்தினால் அதற்குக் கொஞ்சம் சலுகை காட்டவே விரும்புகிறோம்.

இராமர் முதலிய அவதார புருஷர்கள் 'மல்லார்ந்த தோளினாய்' என்று கவிஞர்களின் புகழுரையைப் பெற்றிருக்கிறார்கள்.

சிவபெருமான் அர்ச்சுனனோடு விளையாட்டாக மல் யுத்தம் செய்த கதை "கிராதார்ஜுனீயம்" என்னும் காவியமாக வரையப்பட்டிருக்கிறது.

சரித்திர காலத்தில், புகழ் பெற்ற காஞ்சி நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தி நாட்டிலுள்ள மல்லர்களையெல்லாம் தோற்கடித்து 'மாமல்லன்' என்று விருதுப் பெயரைப் பெற்றிருக்கிறார்.

* * *

மல் யுத்த விளையாட்டைப் பெண்களும் பார்த்துக் களிப்பது பற்றி நம் சகோதரி அருவருப்புடன் குறிப்பிட்டிருக்கிறார் அல்லவா!

ஆனால் பரமசிவனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த மல் யுத்தத்தைப் பார்வதி தேவி கண்டு களித்ததாகக் காவியத்தில் படிக்கிறோம்.

ஏன்! இடும்பனுக்கும் வீமனுக்கும் நடந்த மற்போரை இடும்பனுடைய சகோதரியான இடும்பி பார்த்துக் கொண்டிருந்து, அதன் காரணமாகவே வீமன் பேரில் காதல் கொண்டு மாலையிட்டதாகவும் அறிகிறோம். (இந்தக் காட்சியையே நமது இந்த இதழ் அட்டையில் சித்திரித்திருக்கிறது.)

நமது நாளிலும் சில இடும்பி சகோதரிகள் மல் யுத்தத்தைப் பார்த்துக் களிக்க முன்வந்தால் அதைப்பற்றி நாம் ஏன் வியப்படைய வேண்டும்!

* * *

பல நூறு ஆண்டு காலம் அன்னிய ஆட்சியில் இருந்த காரணத்தினால் இந்த நாட்டு மக்களின் மனோதிடமும் தேக வலிமையும் குன்றியிருக்கின்றன. இந் நாட்டு ஆண் மக்கள் அவற்றைத் திரும்பப் பெற வேண்டியது அவசியம் என்பதைப் பற்றி இருவித அபிப்பிராயம் இருக்க முடியாது.

"ஒரு மோட்டார் பஸ்ஸில் இருபத்தைந்து பிரயாணிகள் வந்தார்கள்! மூன்று திருடர்கள் அவர்களை வழி மறித்து நிறுத்தினார்கள்; பிரயாணிகளிடமிருந்த பொருள்களைப் பறித்துக் கொண்டு ஓடிப் போனார்கள்" என்பது போன்ற செய்தி

களைப் படிக்கும்போதெல்லாம் இந்த நாட்டில் பிறந்தவர்கள் யாரும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டே தீர வேண்டும்.

ஆளுக்கு ஆள் எதிர்த்து நின்று அநியாயங்களையும் அக்கிரமங்களையும் தடுப்பதற்குத் தேக திடமும் மனோதைரியமும் இந் நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் பெற வேண்டியது அவசியம்.

அதற்கு இத்தகைய மல் யுத்த 'விளையாட்டு' களைப் பார்ப்பது ஓரளவு உதவியாயிருக்கக் கூடும் என்று நம்புகிறோம்.

# சண்டமாருதம் பரவுகிறது!

**ப**ல ஆண்டுகளுக்கு முன் துருக்கியில் தொடங்கிய அரசியல் சண்டமாருதம் ஆப்கானிஸ்தானம், பாலஸ்தீன், சிரியா, எகிப்து, ஈரான் முதலிய நாடுகளில் அடித்துவிட்டு இப்போது ஈராக் நாட்டுக்கு வந்திருக்கிறது! மேற்படி சண்டமாருதம் சில நாடுகளில் முடியரசை வீழ்த்தியது. மற்ற நாடுகளின் அரசியலை அடியோடு மாற்றியது. அது இன்னும் சிறிது காலத்தில் மத்திய கேந்திரத்தில் மீதியுள்ள நாடுகளுக்குப் பரவி, அங்குள்ள முடியரசுகளுக்கு உலைவைத்தாலும் அதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

அன்னியரின் ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டுக் கிடந்த மற்ற நாடுகளைப்போல் ஈராக் நாடும் சுதந்திரத்துக்காக வெகு பாடுபட்டது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் அன்னிய சாம்ராஜ்யங்களிடம் அடிமைப் பட்டு அல்லலுற்ற ஒரு நாடு இந்த உலகத்திலே உண்டு எனில், அது ஈராக் தேசம்தான்!

*1919*-ம் வருஷத்திலிருந்துதான் ஈராக் மக்கள் சுதந்திரப் போரில் தீவிரமாக ஈடுபட்டனர். அப்போது அங்கு கடைசியாக பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்பட்டிருந்தது. அந்த ஆதிக்கத்தைத் தகர்ப்பதற்காக ஈராக் மக்கள் முற்பட்டபோது, பயங்கரமான அடக்கு முறைகளுக்கு அவர்கள் இலக்காக நேர்ந்தது.

இறுதியில் பிரிட்டிஷார் அங்கு முடியரசை ஸ்தாபித்து நிலைநிறுத்த முயன்றனர். எனினும் ஈராக் மக்களின் இடைவிடாத புரட்சியின் பலனாக அங்கு முடியரசின் கீழ் அவர்களுக்கு ஓரளவு சுதந்திரம் கிடைத்ததெனினும், அவர்கள் ஜனநாயக அடிப்படையில் பூரண சுதந்திரம் பெறவில்லை.

தற்போது அந்நாட்டில் அரசியல் சீர்திருத்தங்களைக் கோரியே மக்கள் புரட்சியில் ஈடுபட்டிருக்கின்றனர் என்று தெரிகிறது. ஈரான் முதலிய நாடுகளைப் போல ஈராக் தேசமும் எண்ணெய்ச் செல்வம் படைத்திருப்பதால், அங்கு பொருளாதாரத் துறையில் அன்னியரின் ஆதிக்கம் இருந்து வருகிறது. பதினேழு வயதுள்ள ஈராக் மன்னரும் ஈராக் சர்க்காரும் அன்னியரின் ஆதிக்கத்துக்கு அடிபணிவதாக ஜனங்களிடையே அபிப்பிராயம் நிலவுகிறது. எனவே, அவர்கள் புரட்சியை ஆரம்பித்து, பிரிட்டிஷ், அமெரிக்கக் காரியாலயங்களுக்கெல்லாம் தீ வைத்து விட்டார்கள்.

அடுத்துள்ள ஈரான் மக்கள் தங்கள் நாட்டில் உள்ள எண்ணெய்ச் செல்வத்தைத் தங்கள் சொந்த உடைமையாக்கிக் கொள்ளப் பெருமுயற்சி செய்து, அதில் ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறார்கள். எனவே, அதைப் பின் பற்றி ஈராக் மக்களும் தங்கள் நாட்டின் எண்ணெய்ச் செல்வத்தைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ள முயற்சிக்கின்றனர்.

ஈராக் மக்களின் பலாத்காரப் புரட்சியைச் சமாளிக்கும் பொறுப்பை ஈராக் இராணுவம் ஏற்றுக் கொண்டிருப்பதிலிருந்து, அங்கு பீறிட்டெழுந்துள்ள புரட்சியின் வேகத்தை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

ஈராக்கில் புதிய மந்திரி சபையை அமைக்கும்படி ஈராக் இராணுவ நிர்வாகத் தலைவரான ஜெனரல் முகமது கேட்டுக் கொள்ளப் பட்டிருக்கிறார். எகிப்து இராணுவத் தலைவரான ஜெனரல் நாஜிபைப்போல் ஜெனரல் முகமது ராஜ தந்திரத்துடன் நடந்து கொள்வாராயின், ஈராக்கில் கொந்தளிப்பு அடங்கி, மக்களின் நியாயமான அபிலாஷைகள் நிறைவேறலாம்.

# ஐந்து முட்டை தாங்க முடியாது!

**டெ**ல்ட்டாப் பிரதேச ஜில்லாக்களில் சர்க்கார் இந்த வருஷம் கைக்கொள்ளப்போகும் 'லெவி' கொள்முதல் திட்டம் வெளியாயிருக்கிறது.

தீவிரக் கட்டாயக் கொள்முதலைக் காட்டிலும் 'லெவி' கொள்முதல் முறை விவசாயிகளுக்கு எவ்வளவோ சாதகமானது என்பதில் சந்தேகமில்லை.

தீவிரக் கட்டாயக் கொள்முதலில் சில்லறை அதிகாரிகளின் அட்டூழியங்களுக்கு வசதி அதிகம். ஒவ்வொரு விவசாயியும் சர்க்காருக்கு விற்க வேண்டிய தானிய அளவுக்கு அதிகாரிகளின் இஷ்டமே சட்டம். கேட்ட அளவு கொடுக்கா விட்டால், பூட்டை உடைத்தல், வீட்டுக்குள் புகுதல், பறிமுதல் செய்தல் முதலிய அதிக்கிரமங்களுக்கெல்லாம் அதில் இடம் உண்டு. பெரிய மனிதர்களுக்குப் பட்சபாதம் காட்டவும் சாதாரண விவசாயிகளைத் தொல்லைப்படுத்தவும் வசதி உண்டு.

'லெவி' கொள்முதல் முறையில் இந்தத் தொல்லைகள் ஒன்றுமில்லை. பெரிய மிராசுதார், சிறிய பட்டாதார் எல்லாரும் ஏக்கருக்கு இவ்வளவு நெல் என்று கொடுத்துவிட வேண்டியது. கொடுத்து விட்டால் (விலைக்குத்தான்!) தொல்லை ஒன்றும் கிடையாது. மிச்சமிருக்கும் நெல்லைப் பயமின்றி விவசாயி இஷ்டப்படி விநியோகித்துக் கொள்ளலாம். பெரிய மிராசுதார் — சின்னப் பட்டாதார் என்ற பட்சபாதம் காட்ட முடியாது. அதிகார அட்டூழியங்களுக்கு இடமே இல்லை.

ஆகையால், 'லெவி' கொள்முதல் அமுலுக்கு வரப்போகும் ஜில்லாக்களிலுள்ள விவசாயிகள்

அதைப் பொதுவாக வரவேற்பார்கள். "ஆனால் ஏக்கருக்கு ஐந்து மூட்டை நெல்" என்று அறிந்ததும், "ஐயோ! சிவனே!" என்று தலையில் கை வைத்துக் கொள்வார்கள். 'லெவி' கொள் முதல் மூலமாக ஏற்படும் அனுகூலங்களை யெல்லாம் இந்த 'ஐந்து மூட்டை விகிதம்' அடித்து விடுகிறது என்று முறையிடுவார்கள்.

தஞ்சை ஜில்லாவைப் பொறுத்த வரையில் ஏக்கருக்கு ஐந்து மூட்டை மிக அதிகம் என்பதில் ஐயமில்லை. மூவாயிரம் ஆண்டுகளாகப் பயிரிட்டு நிலச் சத்து குன்றி யிருக்கும் ஜில்லாவில் சாதாரணமாகவே மற்ற ஜில்லாக்களை விட சராசரி விளைவு குறைவு. இந்த வருஷம் களா காலத்தில் தண்ணீர் வராதபடியால், விளைவு ஒன்றுக்கு முக்கால் வந்தால் பெரிய காரியம். அதோடு, புதிய விவசாய மசோதாவின்படி விளைச்சலில் நிலச் சொந்தக்காரர்களின் பங்கும் குறைந்து விடுகிறது. எல்லாம் போக, நிலச் சொந்தக்காரனுக்கு மிஞ்சக் கூடியது ஏக்கராவுக்கு ஆறு மூட்டை; அதில் ஐந்து மூட்டை சர்க்காருக்கு விற்றுவிட வேண்டுமென்பது விவசாயிகளுக்கு எரிச்சலை உண்டாக்கக் கூடியது.

"முதல் ஐந்து ஏக்கராவுக்குக் கொள் முதல் இல்லை" என்பதை, "பத்து ஏக்கராவுக்கு இல்லை" என்று நிர்ணயித்து, ஏக்கராவுக்கு ஐந்து மூட்டைக்குப் பதில் நாலு மூட்டை என்றும் நிர்ணயித்தால் ஒருவாறு விவசாயிகள் தாங்கக் கூடிய பாரமா யிருக்கலாம். ஐந்து மூட்டை பாரம் நிச்சயமாகத் தாங்க முடியாது!

# விவசாயத் துறையில் அநாதைகள் யார்?

புதிய விவசாயத் தொழிலாளர் பாதுகாப்பு மசோதா ஸெலக்ட் கமிட்டியிலிருந்து வெளிவந்து விட்டது. கீழ்ச் சட்ட சபையில் விவாதிக்கப்பட்டு வருகிறது. (இந்தக் கட்டுரை வெளியாவதற்குள் மசோதா நிறைவேறி விடலாம்.)

நாம் அஞ்சியபடியே ஸெலக்ட் கமிட்டி விவாதத்தின்மூலம் அந்த மசோதா பட்டாதார் நோக்கிலிருந்து மேலும் பிரதிகூலமாகி யிருக்கிறது.

இரண்டு உதாரணங்களை மட்டும் குறிப்பிடலாம். சர்க்கார் வெளியிட்ட மசோதாவில் கோடையில் விதைக்கும் பயறு - உளுந்து தானியத்தில் நிலச் சொந்தக்காரருக்கு ஐந்தில் இரண்டு பங்கு என்று குறிப்பிட்டிருந்தார்கள். ஸெலக்ட் கமிட்டியில் அது ஐந்தில் ஒரு பங்கு என்று தீர்மானிக்கப்பட்டது.

பண்ணை ஆள் வேலையிலிருந்து நீக்கப்பட்டால் நஷ்ட ஈடு ரூபாய் நூற்றைம்பது என்று அசல் மசோதாவில் கண்டிருந்தது. ஸெலக்ட் கமிட்டியில் நஷ்ட ஈடு இரட்டிப்பு ஆகி ரூபாய் முந்நூறு என்று நிர்ணயிக்கப்பட்டது.

இந்த நஷ்ட ஈடு விகிதம் சொற்ப நிலக்காரர்களையும் நடுத்தரப் பட்டாதார்களையும் மிகவும் பாதிக்கக் கூடியது. ஏன்! விவசாயத்தையே பாதித்துக் குழப்பத்தை வளர்க்கக் கூடியது என்றும் கூறலாம்.

சாதாரணமாக, பத்து ஏக்கராவுக்கு மேலும் நாற்பது ஐம்பது ஏக்கராவுக்கு உள்ளும் வைத்திருக்கும் விவசாயிகள்தான் விவசாயத்தைச் சரியான முறையில் நடத்தக்கூடும் என்று எல்லாரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

இம்மாதிரி நிலம் வைத்திருக்கக் கூடிய அளவை நிர்ணயிக்கச் சட்டம் செய்ய வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது.

ஆனால் தற்சமயம் இத்தகைய நடுத்தர விவசாயிகள்தான் எந்தப் பக்கமும் ஆதரவில்லாத அநாதைகளாக இருந்து வருகிறார்கள்.

விவசாயத் தொழிலாளிகளுடைய கட்சியைப் பேசவும் கிளர்ச்சி செய்யவும் கலகமே தொழிலாக உடையவர்கள் இருக்கவே இருக்கிறார்கள். மற்றும், காங்கிரஸ் ஊழியர்கள் — சர்வோதய ஊழியர்கள் எல்லாரும் இருக்கிறார்கள்.

பெரிய மிராசுதார்கள் சர்க்கார் அதிகாரிகளிடமும் அரசியல் வாதிகளிடமும் தங்களுடைய செல்வாக்கை உபயோகித்து ஒருவாறு புதிய நிலைமையைச் சமாளித்துக் கொள்வார்கள்.

ஆனால் சொற்ப நிலம் படைத்த விவசாயிகள் தான் அநாதைகளாகிறார்கள். கீழே அவர்களுக்குக் கம்யூனிஸ்ட் கிளர்ச்சிக்காரர்களின் தொல்லை; மேலே அதிகாரிகளின் மிரட்டல்.

இந்த நிலைமையில் உள்ளவர்களுக்கு விவசாயச் சட்டத்தின் புதிய நஷ்ட ஈடு திட்டம் மேலும் பிரதிகூலம் விளைத்து விவசாயத்தையும் பாதிக்கக் கூடியதாகிறது.

பதினைந்து ஏக்கரா நிலம் படைத்த விவசாயி தானே பாடுபடக் கூடியவனாயிருந்தாலும் அதிகப்படியாக மூன்று ஆள் வைத்துக் கொண்டே தீர வேண்டும்.

முந்நூறு ரூபாய் நஷ்ட ஈடு என்று ஏற்பட்ட பிறகு, பண்ணை ஆட்கள் அந்தத் தொகையைப் பெறுவதிலேயே கண்ணா யிருப்பார்கள். கிளர்ச்சிக்காரர்கள் அவர்களைத் தூண்டிவிட்டுக் கொண்டே யிருப்பார்கள். "முந்நூறு ரூபாயை முழுதும் வாங்கிக்கொண்டு கிளம்பு. பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம்" என்பார்கள். அதில் ஒரு பகுதியை அவர்களும் பெற்றுக் கொள்வார்கள்.

பதினைந்து ஏக்கரா நிலமுள்ள விவசாயி மூன்று பண்ணையாட்களுக்கு 900 ரூபாய் நஷ்ட ஈடு கொடுக்க நேர்ந்தால் அவன் கதி அதோகதிதான். கடன் பட்டுத்தான் கொடுக்க வேண்டும். பிறகு அந்த வருஷத்தில் விவசாயமும் சரிவர நடைபெறாது.

சுயராஜ்ய முயற்சியிலும் தேசிய இயக்கங்களிலும் எப்போதும் முன்னணியில் நின்று வந்திருக்கும் சிறிய நிலச் சொந்தக்காரர்களுக்கு இத்தகைய இக்கட்டான நிலைமை ஏற்பட்டிருப்பது குறித்து நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

"இடுக்கண் வருங்கால் நகுக!" என்ற வள்ளுவர் வாக்கைக் கடைப்பிடித்து, தேசத்தின் பொது நன்மையைக் கருதி அவர்கள் தங்கள் கடமையை ஆற்றி வருவார்களாக.

அத்துடன் விவசாயத்தைத் தவிர வேறு துறைகளிலும் அவர்கள் தங்கள் அறிவாற்றல்களைச் செலுத்த முற்பட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.




அத்தியாயம் 19

## சிரிப்பும் நெருப்பும்

**பூ**ங்குழலி தன்னைப் படகுடன் சேர்த்துக் கட்டியிருந்த கட்டுக்களை அவிழ்க்க அவசர அவசரமாக முயன்றாள். அது அவ்வளவு இலகுவான காரியமாக இல்லை. சண்டாளப் பாவிகள்! கயிற்றைத் தாறுமாறாக விட்டு முடிச்சுக்கு மேல் முடிச்சாகப் போட்டிருந்தார்கள். பூங்குழலியின் சிறிய கத்தி படகின் அடியில் கிடந்தது. ஒரு கரத்துக்காவது விடுதலை கிடைத்தால் கத்தியை எடுத்துக் கட்டுக்களை அறுத்து எறியலாம். ஆனால் பாவிகள் மணிக் கட்டுகளைச் சேர்த்துத்தான் பலமாகப் பின்புறத்தில் கட்டி யிருந்தார்கள். பூங்குழலி மிகவும் கஷ்டப்பட்டுக் குனிந்து பற்களினால் கத்தியின் பிடியைக் கௌவி எடுத்துக் கொண்டாள். பற்களினால் கௌவிய வண்ணமே கத்தியைப் பிடித்துக் கொண்டு கயிற்றை ஓரிடத்தில் அறுத்தாள். கைகளின் கட்டுச் சிறிது தளர்ந்தது. ஒரு கையை மிகவும் பிரயாசையின் பேரில் கட்டிலிருந்து விடுதலை செய்து கொண்டாள். பிறகு கயிறுகளை அறுப்பது சிறிது எளிதாயிற்று.

கட்டுக்களி லிருந்து முழுதும் விடுவித்துக் கொள்வதற்கு ஏறக்குறைய ஒரு நாழிகை நேரம் ஆகிவிட்டது.

இந்தச் சமயத்தில் ஓடைக் கரை மீது காலடிச் சத்தம் கேட்டது. பிறகு ஒரு நிழல் தெரிந்தது. தன்னைக் கட்டிப் போட்டவர்களில் ஒருவன்தான் திரும்பி வருகிறான் போலும்! அல்லது தான் கட்டுக்களை அவிழ்த்துக் கொண்டு தப்பி வந்து விடாமல் பார்த்துக் கொள்வதற்காக ஒருவனைப் பின்னால் விட்டு வைத்துச் சென்றிருக்கிறார்கள் போலும்! அவன் தன் கண் முன்னால் தெரிந்ததும் கையிலிருந்த கத்தியை அவன் மீது எறிந்து கொன்று விடுவது என்று பூங்குழலி தீர்மானித்துக்கொண்டு அதற்கு ஆயத்தமாகக் கத்தியைப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் எத்தகைய ஏமாற்றம்?

"பூங்குழலி! பூங்குழலி!" என்று சேந்தன் அமுதனுடைய குரல் கேட்டது.

அடுத்த விநாடி அமுதனுடைய பயப் பிராந்தியுற்ற முகம் ஓடைக் கரையின் மேலிருந்து எட்டிப் பார்த்தது.

பூங்குழலி கத்தியை இடுப்பில் செருகிக் கொண்டாள்.

அமுதனும் அவளைப் பார்த்து விட்டான். "பூங்குழலி! நீ உயிரோடு இருக்கிறாயா?" என்று சொல்லிக் கொண்டே பாய்ந்து ஓடி வந்தான்.

"நான் உயிரோ டிருப்பது உனக்குக் கஷ்டமா யிருக்கிறதாக்கும்! வேண்டுமானால் உன் கையாலேயே கொன்று

விட்டுப் போய் விடு! ஆனால் அவ்வளவு தைரியம் உனக்கு எங்கிருந்து வரப் போகிறது?'' என்றாள் பூங்குழலி.

''சிவ சிவா! எவ்வளவு கொடூரமான வார்த்தைகளைக் கூறுகிறாய்? நான் எதற்காக உன்னைக் கொல்லப் போகிறேன்? நீதான் உன் வார்த்தைகளினால் என்னைக் கொல்லுகிறாய்!'' என்றான் அமுதன்.

''பின்னே, சற்று முன்னாலேயே ஏன் வந்திருக்கக் கூடாது? கட்டுக்களை நானாக அறுத்து விடுவித்துக் கொள்ளுவதற்கு எவ்வளவு கஷ்டப்பட்டுப் போனேன், தெரியுமா?'' என்று சொல்லிக் கொண்டே பூங்குழலி எழுந்து நிற்க முயன்றாள். கால்கள் கயிறுகளில் தாறுமாறாகச் சிக்கிக் கொண்டிருந்த படியால் தடுமாறி விழப் பார்த்தாள்.

அமுதன் அலறிப் புடைத்துக்கொண்டு அவளைப் பிடித்து விழாமல் தடுத்தான்.

''ஐயையோ! இப்படியா பாவிகள் உன்னைக் கட்டிப் போட்டு விட்டுப் போனார்கள்? உடம்பெல்லாம் தடித்துப் போயிருக்கிறதே!'' என்றான்.

''இப்போது இவ்வளவு கரிசனப்படுகிறாயே? சற்று முன்னாலேயே வருவதற்கு என்ன?''

''மறுபடியும் அப்படியே கேட்கிறாயே? உனக்கு இப்பேர்ப்பட்ட ஆபத்து வந்திருக்கிறது என்று நான் என்ன கண்டேன்! நீ என்னைப் 'போ' 'போ' என்று விரட்டினாய். நான் போய்க் கொண்டிருந்தேன்......''

''பின், எதற்காகத் திரும்பி வந்தாய்? ஒரு வேளை நான் செத்துப் போயிருந்தால் என் உடலைத் தகனம் செய்து விட்டுப் போகலாம் என்பதற்காகவா?''

''சிவபெருமான் தொண்டையில் விஷத்தை வைத்துக் கொண்டார்; நீ நாக்கிலேயே வைத்துக் கொண்டிருக்கிறாய். உனக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருக்கலாம் என்று உன் அண்ணி சொன்னதைக் கேட்டு ஓடோடியும் வந்தேன். அதற்கு நல்ல பரிசு கிடைத்தது!''

இதற்குள் படகிலிருந்து ஓடைக் கரையில் இறங்கியிருந்தாள் பூங்குழலி.

''இந்தக் கத்தியை உன்மீது எறியலாம் என்றிருந்தேன். நீ தப்பித்தாய். இதே கத்தியினால் என் அண்ணியை முதலில் குத்திக் கொன்றுவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கப் போகிறேன். அந்தச் சண்டாளி எங்கே இருக்கிறாள்?''

''என்னை விட்டுவிட்டு உன் அண்ணியின் பேரில் எதற்காகப் பாய்கிறாய்? அவள் பேரில் எதற்காக இத்தனை கோபம்? உன்னைப்பற்றி எனக்கு அவள் சொன்னது குற்றமா?......''

''அவள்தான் என் அத்தையைக் காட்டிக் கொடுத்தவள். புதர் மறைவில் அவள் யாருடனோ இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்ததை நீ கூடத்தான் பார்த்தாயே?'' என்றாள் பூங்குழலி.

''நீ நினைப்பது தவறு! உன் அண்ணி, யாருடன் என்ன இரகசியம் பேசிக் கொண்டிருந்தாளோ, என்னமோ? உன் அத்தையை அவள் காட்டிக் கொடுக்கவில்லை என்பது நிச்சயம். உன் அத்தையைப் பலாத்காரமாகப் பிடித்துக் கொண்டு போனவர்கள் உன் அண்ணியையும் மரத்தோடு சேர்த்துக் கட்டி விட்டுப் போய் விட்டார்கள். அவளுடைய தலையில் அடித்துக் காயப்படுத்தி விட்டும் போய் விட்டார்கள்...''

''இது என்ன வேடிக்கை? நம்புவதற்கு முடியவில்லையே? உன்னை அவள் ஏமாற்றி விட்டிருக்கிறாள்! நல்லது; நீ ஏன் திரும்பி வந்தாய், அண்ணியை எவ்விடத்தில் பார்த்தாய், — எல்லாம் விவரமாகச் சொல்லு!'' என்று பரபரப்புடன் பூங்குழலி கேட்டாள்.

சேந்தன் அமுதன் அவ்வாறே விவரமாகக் கூறினான். அவன் தஞ்சாவூர் செல்லும் சாலையில் போய்க் கொண்டிருந்தான். பூங்குழலியைப் பிரிந்து போக மனமின்றித் தயக்கத்துடனே தான் போய்க் கொண்டிருந்தான். அப்போது பக்கத்துக் காட்டிலிருந்து ஏதோ கூச்சலும் அலறும் குரலும் கேட்டன. பலர் விரைந்து நடந்து வரும் சத்தமும் கேட்டது. சேந்தன் அமுதன் சாலை ஓரத்து மரம் ஒன்றின் பின்னால் மறைந்து கொண்டான். கையில் வேல் பிடித்த வீரர்கள் ஏழெட்டுப் பேர் காட்டு வழியாகத் திடுதிடுவென்று நடந்து வந்து இராஜ பாட்டையில் பிரவேசித்தார்கள். அவர்களுக்கு மத்தியில் ஒரு பெண் பிள்ளை இருப்பது போலத் தோன்றியது. மனிதர்களிடையில் சற்று இடைவெளி தெரிந்தபோது மத்தியில் இருந்தவள் பூங்குழலியின் அத்தை மாதிரி தோன்றினாள். அவள் அத்தையாக இருக்க முடியாது, அது தன்னுடைய மனப்பிரமை என்று சேந்தன் அமுதன் எண்ணிக் கொண்டான்.

அந்த வீரர் கூட்டம் சென்ற பிறகும் காட்டிற்குள்ளே யிருந்து ஒரு பெண் பிள்ளையின் கூக்குரல் கேட்டுக் கொண் டிருந்தது. சேந்தன் அமுதன் முதலில் 'நமக்கு என்னத்திற்கு வம்பு? நம் வழியே நாம் போய் விடலாமா?' என்று நினைத் தான். ஆனாலும் மனது கேட்கவில்லை. யார் அலறுவது என்று பார்த்து, தன் னால் ஏதேனும் உதவி செய்யக் கூடு மானால் செய்யலாம் என்று எண்ணிக் கூக்குரல் வந்த திசையை நோக்கிப் போனான். அங்கே ராக்கம்மாள் மரத் தில் கட்டப்பட்டிருந்ததைக் கண்டான். அவள் தலையிலிருந்து இரத்தம் வழிந்து முகமெல்லாம் ஒரே கோரமாயிருந்தது. அமுதனுக்கு அருகில் நெருங்கவே பயமா யிருந்தது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சென்று கட்டுக்களை அவிழ்த்து விட்டான். அவிழ்க்கும்போதே 'இந்த அக்கிரமம் யார் செய்தது? எதற்காகச் செய்தார்கள்? சற்று முன் சாலையில் வந்து ஏறின மனிதர்கள் யார்? அவர்கள் மத்தியில் ஒரு பெண் பிள்ளையும் போனது போலிருந்ததே? அவள் யார்?' என்றெல்லாம் கேட்டான். 'ஆம், தம்பி! அவர்கள் உன் பெரியம்மாவைக் கட்டி இழுத்துக் கொண்டு போகிறார்கள். அதைத் தடுப்பதற்கு நான் முயன்றேன். அதற்காகத்தான் என்னை இப்படி அடித் துக் கட்டிவிட்டுப் போனார்கள். உன் மாமன் மகளும் பெரியம்மாவும் படகி லேறிப் போய்க் கொண்டிருந்தார்கள். படகிலிருந்துதான் பெரியம்மாவைக் கட்டி இழுத்து வந்தார்கள். பூங்குழலி யின் கதி என்ன ஆயிற்றோ தெரிய வில்லை. ஓடிப் போய்ப் பார்!' என்றாள். சேந்தன் அமுதன் திடுக்கிட்டுப் பூங் குழலியைத் தேடிக்கொண்டு புறப்பட் டான். அச்சமயம் ராக்கம்மாள், 'கொஞ் சம் பொறு, தம்பி! பூங்குழலியும் அந்த ஊமைப் பிசாசும் படகில் ஏறி எங்கே புறப்பட்டார்கள்? உனக்குத் தெரியுமா? உன்னை ஏன் விட்டுவிட்டுப் போனார்கள்? நீ எங்கே தனியாகக் கிளம்பினாய்?' என்று கேட்டாள். இப்படி அவள் கேட்டது, முக்கியமாக 'ஊமைப் பிசாசு' என்று சொன்னது, சேந்தன் அமுதனுக் குப் பிடிக்கவில்லை. 'எல்லாம் அப்புறம் சொல்லுகிறேன்' என்று கூறிவிட்டு, கால்வாயை நோக்கி ஓடிவந்தான். பூங் குழலியையும் அந்த மனிதர்கள் அடித் துப் போட்டிருப்பார்களோ, ஒருவேளை கொன்றே இருப்பார்களோ என்ற பதை பதைப்புடனே வந்தான். பூங்குழலி உயிரோடிருப்பதையும் இரத்தக் காய மில்லாமலிருப்பதையும் பார்த்ததும் அவ னுக்கு ஆறுதல் உண்டாயிற்று......

இந்த விவரங்களைக் கூறி விட்டு, "பூங்குழலி! இப்போது என்ன சொல்லு கிறாய்? உன் அண்ணியின் பேரில் நீ கோபித்துக் கொண்டது தவறுதான் அல்லவா?" என்று சேந்தன் அமுதன் கேட்டான்.

"நீ சொல்லுவதைக் கேட்டால் அப் படித்தான் தோன்றுகிறது. அவளை எந்த இடத்தில் விட்டு விட்டு வந்தாய்? அங்கே போய்ப் பார்க்கலாம், வா!" என்றாள் பூங்குழலி.

"அவள் அங்கேயே இருப்பாள் என்பது என்ன நிச்சயம்?"

"அங்கே இல்லாவிட்டால் அக்கம் பக்கத்தில் இருப்பாள். இல்லாவிடில் நம்மைத் தேடிக் கொண்டு வருவாள். அமுதா! நானும் என் அத்தையும் படகில் ஏறி எங்கே புறப்பட்டோம் என்று அண்ணி கேட்டாள் அல்லவா?"

"ஆம், கேட்டாள்."

"நீ அதற்கு மறுமொழி சொல்ல வில்லையே? நிச்சயந்தானே?"

"நிச்சயந்தான். 'ஊமைப் பிசாசு' என்று அவள் சொன்னதும் எனக்கு உண்டான அருவருப்பினால் மறுமொழி சொல்லாமலே வந்து விட்டேன்."

"இனிமேல் நல்ல வார்த்தையாகக் கேட்டாலும் சொல்லாதே! நாங்கள் எங்கே புறப்பட்டோம் என்பதை அவள் ஏன் தெரிந்துகொள்ள விரும்புகிறாள்? அதற்கு ஏதோ காரணம் இருக்க வேண் டும் அல்லவா? அமுதா! அத்தையைப் பிடித்துக் கொண்டு போனவர்களுக்கும் அண்ணிக்கும் தொடர்பு இல்லை என்று நிச்சயமாகச் சொல்லமுடியாது. அண்ணி யின் மூலமாக அவர்கள் உளவறிந்து கொண்டு, தங்கள் காரியம் முடிந்ததும், அவளை அடித்துக் கட்டிப் போட்டு விட்டுப் போயிருக்கலாம். அப்படியில்லா விட்டாலும், அண்ணி வேறு ஏதோ துர்நோக்கத்துடனேதான் எங்களைத் தொடர்ந்து வந்திருக்க வேண்டும். ஆகை யால் அவளுடன் ஜாக்கிரதையாகவே நடந்து கொள்! முழுதும் அவளை நம்பி மோசம் போய் விடாதே!......"

"பூங்குழலி! உன் அண்ணியின் சந்நி தானத்தில் உன் அண்ணன் ஊமையாக இருந்து விடுவான் என்று சொல்லியிருக் கிறாய் அல்லவா? அதுபோலவே நானும்

இருந்து விடுகிறேன். பேச வேண்டியதையெல்லாம் நீயே பேசிக்கொள்!..."

இதைக் கேட்ட பூங்குழலி சிரித்தாள்.

"உன் சிரிப்பு என் செவிகளுக்கு இன்னமுதமாயிருக்கிறது. திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகத்தைப் போல் இனிக்கிறது" என்றான் அமுதன்.

"ஏதோ தவறிச் சிரித்து விட்டேன். அதைக் கேட்டு ஏமாந்து விடாதே! என் உள்ளத்தில் அனல் பொங்குகிறது. நெஞ்சில் நெருப்புப்பற்றி எரிகிறது!"

"நெஞ்சின் தாபத்தைத் தணிப்பதற்கு இறைவனுடைய கருணை வெள்ளத்தைக் காட்டிலும் சிறந்த உபாயம் வேறு இல்லை!" என்றான் சேந்தன் அமுதன்.

அத்தியாயம் 20

# மீண்டும் வைத்தியர் மகன்

சிறிது நேரம் பூங்குழலியும் அவளுடைய அத்தை மகனும் காட்டு வழியில் மௌனமாக நடந்து சென்றார்கள்.

பூங்குழலி ஒரு நெடு மூச்சு விட்டு, "அமுதா! உனக்கும் எனக்கும் ஏதோ ஜன்மாந்தரத் தொடர்பு இருக்குமென்று தோன்றுகிறது" என்றாள்.

"பூர்வ ஜன்மங்களைப் பற்றி இப்போது யாருக்கு என்ன கவலை? இந்த ஜன்மத்தைப் பற்றி ஏதாவது நல்ல செய்தி இருந்தால் சொல்லு!" என்றான் சேந்தன் அமுதன்.

"முந்தைப் பிறவிகளின் தொந்தம் இந்தப் பிறவியிலும் தொடரும் என்று சொல்லுகிறார்கள் அல்லவா? அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். இன்று உச்சி வேளையில் உன்னைப் பிரிந்தபோது இனி உன்னைப் பார்க்கப் போவதே இல்லை என்று எண்ணினேன். இரண்டு நாழிகைக்குள்ளாக உன்னை மறுபடி பார்க்கும்படி நேர்ந்தது......"

"அதற்காக வருத்தப்பட வேண்டாம். இந்தக் காட்டு வழியைக் கடந்து தஞ்சாவூர் சாலையை அடைந்ததும் நான் என் வழியே செல்வேன். நீ உன் இஷ்டம் போல் போகலாம்......"

"உன்னை நான் அப்படித் தனியே விட்டுவிடப் போவதில்லை. அண்ணியைக் கண்டு பேசிய பிறகு உன்னுடன் நான் தஞ்சாவூருக்கு வரப் போகிறேன். என் அத்தைக்கு நேர்ந்த துன்பத்துக்குப் பரிகாரம் தேடப் போகிறேன். சோழ சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் சென்று முறையிடப் போகிறேன்......"

"பூங்குழலி! சக்கரவர்த்தியின் சந்நிதானத்தை அடைவது அவ்வளவு எளிது என்று கருதுகிறாயா? நம்போன்றவர்கள் தஞ்சாவூர்க் கோட்டைக்குள்ளேயே பிரவேசிக்க முடியாதே?"

"ஏன் முடியாது? கோட்டைக் கதவு திறக்கா விட்டால் கதவை உடைத்துத் திறப்பேன். அது முடியாவிட்டால் மதின் சுவரில் ஏறிக் குதித்துப் போவேன்..."

"அரண்மனை வாசலில் காவலிருக்கும் சேவகர்களை என்ன செய்வாய்?"

"நான் போடுகிற கூச்சலைக் கேட்டு அவர்கள் மிரண்டுபோய் என்னைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப்போவார்கள்..."

"சின்னப் பழுவேட்டரையரை அப்படியெல்லாம் மிரட்டிவிட முடியாது. அவருடைய அநுமதியில்லாமல் யமன் கூடச் சக்கரவர்த்தியை அணுக முடியாது என்று தஞ்சாவூர்ப் பக்கங்களில் ஜனங்கள் பேசிக் கொள்வது வழக்கம். அதனாலேதான் சக்கரவர்த்தி இன்னும் உயிரோடிருக்கிறார் என்று சிலர் சொல்லுவதையும் கேட்டிருக்கிறேன்..."

"சக்கரவர்த்தியைப் பார்க்க முடியா விட்டால், பழுவேட்டரையர்களையே பார்த்து இந்த அக்கிரமத்துக்குப் பரிகாரம் உண்டா, இல்லையா என்று கேட்பேன்! அவர்கள் தக்க பரிகாரம் செய்யாவிட்டால், முதன் மந்திரி பிரம்மராயரிடம் போவேன். அதிலும் பயனில்லாவிட்டால், பழையாறையிலுள்ள ராணிகளிடம் போய் முறையிடுவேன். என் அத்தையின் கதி என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்ளும் வரையில் ஓரிடத்தில் தங்கமாட்டேன். அவளுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பரிகாரம் கிடைக்கும் வரையில் இரவு பகல் தூங்கமாட்டேன். அண்ணி என் அத்தையை 'ஊமைப் பிசாசு' என்று சொன்னாள் அல்லவா? நானும் ஒரு பிசாசாக மாறி நாடு நகரமெல்லாம் சுற்றி அலைவேன். 'நீதி!' 'நீதி!' என்று அலறிக் கொண்டு அலைந்து திரிவேன். அமுதா! நீயும் என்னோடு வருவாயா......?"

"நிச்சயமாய் வருவேன், பூங்குழலி! நீ விரும்பினால் வருவேன். ஆனால் ஏன் நீ உன் மனத்தை இப்படியெல்லாம் குழம்ப விடுகிறாய்? எங்கெல்லாமோ வெகு தூரத்துக்குப் போய் விட்டாயே? முதலில், உன் அத்தையைக் கண்டு பிடித்துக் காப்பாற்ற வேண்டியதல்லவா முக்கியமான காரியம்? அவளைப் பிடித்துக் கொண்டு போன துஷ்டர்களிடமிருந்து அவளை விடுதலை செய்ய வேண்டாமா? உன் தந்தை, அண்ணன் முதலியவர்களிடம் சொல்ல வேண்டாமா......?"

"அமுதா! என் அத்தை தெய்வீக சக்தி உள்ளவள். அவளுக்கு யாரும் எந்தவிதமான கெடுதலும் செய்ய முடியாது. தமயந்தி வேடனை எரித்தது போல் கண் பார்வையினாலேயே எரித்து விடுவாள். ஆகையால் அவளைப் பற்றிக் கூட எனக்கு அவ்வளவு கவலையில்லை. ஆனால் இந்தச் சோழ ராஜ்யத்தில் பட்டப் பகலில் இவ்வளவு பெரிய அக்கிரமம் நடக்கிறதே?—இதற்குப் பரிகாரம் தேடுவதே என் முக்கியமான வேலை! பராந்தக சக்கரவர்த்தியின் காலத்திலிருந்து இந்த நாட்டில் தர்மராஜ்யம் நடப்பதாகச் சொல்கிறார்கள். மகா சிவ பக்தராகிய கண்டராதித்த மன்னர் அரசு புரிந்த நாட்டில் பசுவும் புலியும் ஒரு துறையில் தண்ணீர் குடித்தது என்று பெருமை பேசிக் கொள்கிறார்கள். சுந்தர சோழரின் அரசாட்சியின் கீழ் சோழநாட்டில் எந்தச் சிறு பெண்ணும் இரவு பகல் எந்த நேரத்திலும் பயமின்றிப் பிரயாணம் செய்யலாம் என்று பறை யறைந்து கொண்டிருக்கிறார்கள். அப்படியெல்லாம் புகழ் பெற்ற இராஜ்யத்தில், ஒரு மூதாட்டியை, — காது கேளாத பேசத் தெரியாத ஒரு பேதை ஸ்திரீயை,—பட்டப் பகலில் துஷ்டர்கள் பிடித்துக் கொண்டு போவதென்றால், அது எப்படிப்பட்ட அக்கிரமம்? என் அத்தையைப் பற்றிக் கூட எனக்கு அவ்வளவு கவலை இல்லை. இன்றைக்கு என் அத்தைக்கு நேர்ந்தது நாளைக்கு எனக்கு நேரலாம் அல்லவா? இன்னும் இந்த நாட்டிலுள்ள கன்னிப் பெண்கள் பலருக்கும் நேரலாம் அல்லவா?"

சேந்தன் அமுதன் இப்போது குறுக்கிட்டு, "ஆமாம்; அத்தகைய அபாயம் இந்த நாட்டில் இப்போது இருக்கத்தான் இருக்கிறது. சுந்தர சோழர் நோயாளியாகிப் படுத்ததிலிருந்து சோழ நாட்டில் தர்மம் தலைகீழாகி விட்டது. கட்டுக்காவல் அற்றுப் போய்விட்டது. கன்னிப் பெண்களுக்கு அபாயம் எங்கே என்று காத்திருக்கிறது. ஆகையால் கன்னிப் பெண்களெல்லாம் கூடிய சீக்கிரம் கலியாணம் செய்து கொண்டு விடுவது தான் நல்லது!" என்றான்.

பூங்குழலி கல கல வென்று சிரித்தாள். "அமுதா! ஒரு கன்னிப் பெண் உன்னைக் கலியாணம் செய்து கொண்டால், அவளை உன்னால் காப்பாற்ற முடியுமா? உனக்குக் கத்தி எடுத்துப் போர் செய்யத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"மலர் எடுத்து மாலை தொடுக்கவும் பதிகம் பாடிப் பரமனைத் துதிக்கவுந்தான் நான் கற்றிருக்கிறேன். கத்தி எடுத்து யுத்தம் செய்ய நான் கற்கவில்லை. அதனால் என்ன? துடுப்புப் பிடித்துப் படகு தள்ள நீ எனக்குக் கற்றுக் கொடுத்து விடவில்லையா? அதுபோல் வாள் எடுத்துப் போர் செய்யவும் கற்றுக் கொண்டு விடுகிறேன். மதுராந்தகத்தேவர் சிங்காதனம் ஏறி இராஜ்யம் ஆள ஆசைப்படும்போது, நான் கத்திச் சண்டை கற்றுக் கொள்வதுதானா முடியாத காரியம்?" என்றான் சேந்தன் அமுதன்.

இதற்குள் பூங்குழலியின் அண்ணியைக் கட்டிப் போட்டிருந்த மரத்தடிக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அங்கே அந்த மாதரசியைக் காணவில்லை. அவளுடைய மண்டையில் பட்ட காயத்திலிருந்து தரையில் சிந்தியிருந்த இரத்தத் துளிகளைச் சேந்தன் அமுதன் பூங்குழலிக்குச் சுட்டிக் காட்டினான்.

"நன்றாக அடித்து விட்டிருக்கிறார்கள். அத்தையைப் பிடித்துக்கொண்டு போனவர்களுக்கு அண்ணி உளவு சொல்லவில்லை யென்பது நிச்சயமாகிறது. ஆனால் அவள் வேறு யாருக்காக என்ன உளவு பார்த்துக் கொண்டிருந்தாள் என்பதை எப்படியாவது கண்டு பிடிக்க வேண்டும்!" என்றாள் பூங்குழலி.

"மாமன் மகளே! இதைக் கேள்! இங்கே நடந்திருப்பதெல்லாம் காரணம் தெரியாத மர்மமான காரியங்களாயிருக்கின்றன. இரகசியத்துக்குள் இரகசியமாகவும் சுழலுக்குள் சுழலாகவும் இருக்கின்றன. எல்லாம் இராஜாங்கத்தோடும் இராஜ வம்சத்தாரோடும் சம்பந்தப்பட்ட சிக்கல்களாக இருக்கின்றன. இவற்றைக் குறித்து நீயும் நானும் ஏன் கவலைப் படவேண்டும்?



நம்மை நாமே ஏன் சங்கடத்துக்கு உள்ளாக்கிக் கொள்ள வேண்டும்?''

''அமுதா! எவ்வளவு பெரிய இராஜாங்க விஷயமாயிருந்தால் என்ன? எத்தகைய மர்மமாக இருந்தால்தான் என்ன? என் அத்தை சம்பந்தப்பட்ட காரியத்தில் நான் கவலை எடுத்துப் பாடுபடாமலிருக்க முடியுமா? உன் பெரியம்மாவின் கதியைப் பற்றி நீ சிந்திக்காமலிருக்க முடியுமா?''

''என் மனதில் பட்டதை நான் சொல்கிறேன், பூங்குழலி! நான் பார்த்த ஏழெட்டு மனிதர்களுக்கு நடுவில் ஒரு பெண் பிள்ளையும் சென்றாள் என்று சொன்னேன் அல்லவா? அவள் என் பெரியம்மாவாக இருக்கக் கூடும் என்றும் சொன்னேன் அல்லவா? அவள் நடந்து போன விதத்தைப் பார்த்தால், கட்டாயப் படுத்தி அவளை அழைத்துப் போனதாகத் தோன்றவில்லை. தன் இஷ்டத்துடனே யதேச்சையாகச் சென்றவள் போலவே காணப்பட்டது......''

''இருக்கலாம், அமுதா! அப்படியும் இருக்கலாம். என் அத்தையின் இயல்பே அப்படி! எங்கேதான் அழைத்துப் போகிறார்கள் என்று தெரிந்து கொள்வதற்காக அவளே இஷ்டப் பட்டுப் போயிருக்கலாம். அவளுக்கு விருப்பமில்லா விட்டால், ஆயிரம் பேருக்கு நடுவிலிருந்தும் அவள் தப்பிச் சென்று விடுவாள். கோட்டை கொத்தளங்களும் பாதாளச் சிறைகளும் கூட அவளைப் பத்திரப் படுத்தி வைக்க முடியாது. ஆகையினால்தான், அத்தைக்கு நேர்ந்த ஆபத்தைப் பற்றி நான் அவ்வளவு கவலைப் படவில்லை யென்று சொன்னேன். அத்தைக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பரிகாரம் தேடுவதே என் முக்கிய நோக்கம். அந்த அநீதி இன்றைக்கு இழைக்கப் பட்டதன்று; இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் செய்யப்பட்ட கொடும் அநீதி! அதற்குப் பரிகாரம் கிடைக்கும் வரையில் எனக்கு நிம்மதி இல்லை'' என்றாள் பூங்குழலி.

''கடவுளே! எவ்வளவு அசாத்தியமான காரியத்தில் உன் மனத்தைப் பிரவேசிக்க விட்டிருக்கிறாய்?'' என்று சேந்தன் அமுதன் கூறி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

சற்றுத் தூரத்தில் பேச்சுக் குரல் கேட்டது. ஒரு குரல் பெண் குரலாகத் தோன்றியது. பேசியவர்களைத் தஞ்சாவூர் இராஜ பாட்டை சந்திப்பில் அமுதனும் பூங்குழலியும் கண்டார்கள்.

அண்ணி ராக்கம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தவன் பழையாறை வைத்தியர் மகன் என்று அறிந்ததும் பூங்குழலியின் முகத்தில் அருவருப்பின் அறிகுறி காணப்பட்டது.

ராக்கம்மாள் பூங்குழலியைப் பார்த்ததும் "அடி பெண்ணே! பிழைத்து வந்தாயா! உன்னைக் கொன்று போட்டிருப்பார்களோ என்று பயந்து போனேன். இதோ பார்! உன் அத்தையைக் காப்பாற்ற முயன்றதில் என் மண்டையில் எவ்வளவு பெரிய காயம்? வைத்தியர் மகனிடம் காயத்துக்கு மருந்து ஏதேனும் இருக்கிறதா என்று கேட்டுக் கொண்டிருந்தேன்" என்றாள்.

"கரையர் மகளுக்கு ஏதேனும் காயம் பட்டிருந்தாலும் மருந்து போட்டுக் குணப்படுத்துகிறேன்" என்றான் வைத்தியர் மகன்.

பூங்குழலி அவனுக்கு மறுமொழி சொல்லாமல், "அண்ணி! அத்தையைப் பிடித்துக் கொண்டு போனவர்கள் எந்தப் பக்கம் போனார்கள்? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"நான் பார்க்கவில்லை. தஞ்சாவூர்ச் சாலையோடு போனதாக இந்த வைத்தியர் மகன் சொல்லுகிறான்......"

"அண்ணி! நானும் அமுதனும் அத்தையைத் தொடர்ந்து போகிறோம். அப்பாவிடம் சொல்லிவிடு! வா. அமுதா!" என்று பூங்குழலி அங்கிருந்து உடனே போகத் தொடங்கினாள்.

அப்போது வைத்தியர் மகன் "பூங்குழலி! சற்று நில்! உங்களால் அவர்களைத் தொடர்ந்து போக முடியாது. இங்கிருந்து சற்றுத் தூரத்தில் காத்திருந்த குதிரைகள் மீதேறி அவர்கள் போகிறார்கள். என்னிடம் குதிரை இருக்கிறது. நான் வாயுவேக மனோவேகமாய்க் குதிரையை விட்டுக் கொண்டு சென்று அவர்கள் போய்ச் சேரும் இடத்தைக் கண்டு பிடித்து உங்களுக்குச் சொல்வேன். அதற்குப் பிரதியாக நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். நீயும் உன் அத்தையும் படகில் ஏறிக் கொண்டு எங்கே போவதற்குக் கிளம்பினீர்கள்? அதை மட்டும் சொல்லிவிடு!" என்றான்.

பூங்குழலி, "அண்ணி! இவருடைய உதவி எங்களுக்குத் தேவையில்லை! நாங்கள் போகிறோம். அப்பாவிடம் மட்டும் சொல்லிவிடு!" என்றாள்.

வைத்தியர் மகன் அப்போதும் விடவில்லை. "ஆகா! கரையர் மகளின் கர்வத்தைப் பார்! என் உதவி தேவை இல்லையாம்! பெண்ணே! உனக்கு ஏன் என் பேரில் இத்தனை கோபம்? நீ அரசகுமாரனைக் கலியாணம் செய்து கொள்வதை நானா குறுக்கே நின்று தடுத்தேன்? என்னை வஞ்சித்து ஏமாற்றி விட்டுப் படகில் ஏற்றிக் கொண்டு போனாயே? அந்த வாணர்குலத்து வந்தியத் தேவனல்லவா உன் ஆசைக்குகந்த இராஜகுமாரனை நடுக்கடலில் தள்ளிக் கொன்று விட்டான்? என் பேரில் கோபித்து என்ன பயன்?" என்று சொல்லிவிட்டு 'ஹா ஹா ஹா' என்று பேய்ச் சிரிப்புச் சிரித்தான்.

பூங்குழலி கண்களில் தீப்பொறி பறக்க அவனை ஒரு தடவை விழித்துப் பார்த்துவிட்டு, அமுதனுடைய கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு சாலையோடு மேலே சென்றாள்.

கொஞ்ச தூரம் போனதும், "அமுதா! நீ கத்தி எடுத்துப் போர் செய்யக் கற்றுக் கொண்டதும் முதலில் இந்தத் தூர்த்தனாகிய வைத்தியர் மகனின் உயிரை வாங்க வேண்டும். உன் கத்திக்கு முதல் பலி இவன்தான்!" என்றாள்.

* * *

இரவும் பகலும் வழி நடந்து பூங்குழலியும் சேந்தன் அமுதனும் தஞ்சாவூரை



நோக்கிச் சென்றார்கள். ஏழெட்டுக் குதிரை வீரர்கள் ஒரு பெண்மணியை அழைத்துச் சென்றதைக் குறித்து வழியில் விசாரித்துக் கொண்டு போனார்கள். பாதி வழி வரையில் கொஞ்சம் தகவல் கிடைத்தது. அப்புறம் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆயினும் தஞ்சாவூர் வரையிலும் போய்த் தேடிப் பார்த்து விடுவது என்று போனார்கள்.

சேந்தன் அமுதனுக்கு இந்தப் பிரயாணம் வெகு உற்சாகமாயிருந்தது. பூங்குழலியுடன் பேசிக்கொண்டு சென்றது உற்சாகத்துக்கு ஒரு காரணம்; கத்திப் பயிற்சி கற்றுக்கொண்டே போனது மற்றொரு காரணம். கோடிக் கரைக்கு அருகிலேயே பூங்குழலிக்குத் தெரிந்த ஒரு கொல்லுப் பட்டறையில் அவன் ஒரு கத்தி வாங்கிக் கொண்டிருந்தான். போகும்போதெல்லாம் அதைச் சுழற்றிக் கொண்டே போனான். சில சமயம் எதிரில் பகைவன் வருவதாகவும் அவனுடன் சண்டை போடுவதாகவும் எண்ணிக் கொண்டு கத்தியைத் தாறுமாறாக வீசினான். அவ்வப்போது பூங்குழலி அவனுக்குக் கத்தியை இப்படிப் பிடித்துக் கொள்ள வேண்டும், இப்படிச் சுழற்ற வேண்டும் என்று கற்பித்துக் கொடுத்துக் கொண்டு வந்தாள்.

இதனால் இரண்டு பேருக்குமே பிரயாணம் உற்சாகமாயிருந்தது.

தஞ்சாவூர்க் கோட்டை கண்ணெதிரே தென்பட்ட போது தான் வந்த காரியத்தை எப்படிச் சாதிப்பது என்ற கவலை பூங்குழலிக்கு ஏற்பட்டது. அவளுடைய கவலையைச் சேந்தன் அமுதனும் சேர்ந்து பகிர்ந்து கொண்டான்.

கோட்டைக்குள் பிரவேசிப்பதே பிரம்மப் பிரயத்தனமான காரியமாயிற்றே? பூங்குழலி எண்ணியுள்ள காரியங்களையெல்லாம் எப்படி நிறைவேற்றுவது?

வந்தியத் தேவனுடைய அகட விக சாமர்த்தியங்களெல்லாம் சேந்தன் அமுதனுக்கு நினைவு வந்தன. அவனுடைய சாமர்த்தியங்களில் பத்தில் ஒரு பங்கு தனக்கு இருக்கக் கூடாதா? அல்லது அந்த வந்தியத் தேவனே இந்தச் சமயம் இங்கே வரக்கூடாதா!......

வந்தியத்தேவனாயிருந்தால் இந்தச் சந்தர்ப்பத்தில் எப்படி நடந்து கொள்வான் என்று சேந்தன் அமுதன் சிந்திக்கத் தொடங்கினான்.

அச்சமயத்தில் சாலையில் மூடு பல்லக்கு ஒன்று வந்தது. சூரியன் மேற்குத் திசையில் மறைந்து இருள் சூழ்ந்துவந்த நேரம். மூடு பல்லக்கின் மேல் திரையில் பனைமரச் சித்திரங்கள் காணப்பட்டன.

"ஆகா! பழுவூர் இளைய ராணியின் பல்லக்குப் போலல்லவா காண்கிறது? கோட்டைக்கு வெளியிலேயே பழுவூர் இராணியைச் சந்தித்து முத்திரை மோதிர இலச்சினையைப் பெற முடியுமானால் எவ்வளவு சௌகரியமாயிருக்கும்?" என்று அமுதன் எண்ணினான். இதைப் பூங்குழலியிடமும் வெளியிட்டான். அவளும் அது நல்ல யோசனை தான் என்று சொன்னாள்.

ஆனால் மூடுபல்லக்கின் உள்ளே இருக்கும் ராணியை எப்படிப் பார்ப்பது?

சிவிகைக்கு முன்னும் பின்னும் காவலர்கள் போகிறார்களே?

பல்லக்கின் அருகில் போக முயன்றாலே அவர்கள் தடுப்பார்கள் அல்லவா?

"அமுதா! கவலைப்படாதே! தஞ்சாவூர்க் கோட்டை இன்னும் அரைக்காதம் இருக்கிறது. அதற்குள் நமக்கு ஏதேனும் சந்தர்ப்பம் கிட்டாமற் போகாது!" என்றாள் பூங்குழலி.

எதிர்பாராத விதத்தில் அச்சந்தர்ப்பம் அவர்களுக்குக் கிட்டியது. (தொடரும்)

GREATEST ARTISTS

FINEST RECORDING




புதிய வெளியீடு!

The Hallmark of Quality



வி. ஆர். தனம்

N. 95044

மாஞ்சோலையிலே

காதல் வாழ்வையே

★



டி. எம். சௌந்தரராஜன்

N. 95046

தனையன் எனது வினையகல

— கல்யாணி

(2 பாகங்கள்)

★



நாராயணன் & கம்பெனி

"தாய் உள்ளம்" பாட்டுகள்

ஆர். சாரதா

N. 65094

கதையை கேளடா

கோயில் முழுதும் கண்டேன்

★

"எச். எம். வி." குழந்தைகள் பார்ட்டி

N. 95047

(குழந்தைகள் ரிக்கார்டு)

பட்டவர்க்கு பலன்

புத்திசாலி ஸாஸா

★

பி. எஸ். திவாகர்

N. 98010

(ஸெக்ஸோபோன்)

அனுராக பூ நிலவில் (அரவிண்ட் புரொடக்ஷன்ஸ் "ப்ரேமலேகா" மெட்டு.)

ஆரிராரோ ( ,, ,, )

தி கிராமபோன் கம்பெனி லிட்., கல்கத்தா, பம்பாய், மதராஸ், டில்லி

"HIS MASTER'S VOICE"

# ஓவியத் திருவிழா



"இயற்கைக் காட்சி" —டி. பி. பிள்ளை

முற்போக்கு ஓவியர் சங்கத்தார் சென்ற ஒன்பது வருஷங்களாக ஆண்டுதோறும் ஓவியக் கண்காட்சி நடத்தி வருகிறார்கள். இந்த வருஷம் சென்னை சித்திர வேலை வித்தியா சாலைப் பள்ளிக்கூடத்தில் சென்ற எட்டாம் தேதி முதல் பதினைந்தாம் தேதி வரையில் மேற்படி கழகத்தார் ஓவியக் கண்காட்சி வைத்திருந்தார்கள். இந்தக் கண் காட்சியை நமது முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் திறந்து வைத்துத் தம்முடைய அருமையான சொற் சித்திரத்தின் மூலம் சித்திரக்காரர்களை அழகு நிறைந்த புது உலகத்துக்கு அழைத்துச் சென்று மகிழ்வித்தார். ஏராளமான மக்கள் ஓவியக் கண் காட்சியைப் பார்த்து வியந்து மகிழ்ந்தார்கள். கண் காட்சியில் கலந்துகொள்ள முடியாதவர்கள், "அடாடா! இந்த அருமையான கண்காட்சியைப் பார்த்து அனுபவிக்க முடியாமல் போய் விட்டதே" என்று பெரிதும் ஏங்கினார்கள்.



"ஊஞ்சல்" —பி. சீனிவாசன்

இந்த ஓவியக் கண் காட்சியில் பாரத நாட்டின் பண்பு நிறைந்த ஓவியங்களும், மேல் நாட்டு முறைகளைத் தழுவி எழுதிய வாட்டர் கலர், ஆயில் கலர் சித்திரங்களும் இன்னும் பல சிறப்பட்ட அருமையான ஓவியங்களுமாகச் சுமார் மூன்றூற்று ஐம்பது சித்திரங்கள் வைக்கப் பட்டிருந்தன. சின்னஞ் சிறு வயதுடைய பாலகர்களிலிருந்து மிகப் பிரபலமான சித்திரக்காரர்கள் வரை பங்கெடுத்துக் கொண்டு தங்கள் கைத் திறமையைக் காண்பித்திருந்தனர். ஒவ்வொரு படமும் ஒவ்வொரு துறையில் மிகச் சிறந்து விளங்கின. சிற்சில படங்கள் நம்மை எங்கோ கொண்டு சென்று மகிழ்வூட்டின. இத்துடன் மகாத்மா காந்தி பிரார்த்தனையில் அமர்ந்திருப்பது போன்ற முழு உருவச் சிலை ஒன்றும் வைத்திருந்தார்கள். இந்தத் திருஉருவச் சிலையை அமைத்தவர் ஓவியர் தனபால் என்று அறிந்தேன். இன்னும் சிற்ப வேலைப்பாடுகளும், கலை நயமும் நிறைந்து விளங்கும் மரத்தில் செதுக்கிய சிற்பங்கள் சிலவற்றையும் சேகரித்து வைத்திருந்தார். இந்தச் சித்திரங்களை எல்லாம் பலப்பல பகுதிகளாகப் பிரித்து ஒழுங்கு படுத்தி வைத்திருந்த விதமும் கண் காட்சியைக் காண வந்த மக்களை வரவேற்று அழைத்துச் சென்று காட்டிய விதமும் ஒரு கலையாக இருந்தது. விதம் விதமான வர்ணச் சித்திரங்கள் நிறைந்த அந்த ஓவிய மண்டபத்தில் இருந்தபோது எங்கேயோ கவலையற்ற உலகில் இருப்பது போலிருந்தது. இந்த அற்புதமான ஓவியக் கண் காட்சியை நடத்தி வரும் முற்போக்கு ஓவியர் சங்கத்தாரையும், அதன் தலைவர் ஸ்ரீ கே. சி. எஸ். பணிக்கர், காரியதரிசிகளான ஸ்ரீ ஏ. பாலகிருஷ்ணன், ஸ்ரீ ஆர். கிருஷ்ண ராவ் முதலியவர்களையும் எவ்வளவு தூரம் பாராட்டினாலும் தகும். —**பகீரதன்**

"விதானச் சித்திரம்" —ஆர். சாரங்கன்



அப்பொழுது இரவு சுமார் பன்னிரண்டு மணி யிருக்கும். சீதாபதியின் வீட்டில் அவரும் அவர் மனைவி சாரதாம்பாளும் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கி யிருந்தனர். தாயாரருகில் படுத்திருந்த ஏழு வயதுச் சிறுமி ஹேமாவுக்கு மட்டும் அன்று ஏனோ தூக்கம் வர மறுத்தது. இப்படியும் அப்படியுமாகப் புரண்டு கொண்டிருந்தாள். திடீரென்று மாடி யறையில் யாரோ மெதுவாக நடமாடும் காலடிச் சப்தம் கேட்டது!

ஹேமா இயற்கையிலேயே தைரியசாலி! அதனால் அந்த நடுச் சாமத்தில் மாடியில் யார் நடக்கிறார்கள் என்று பார்க்க அவளுக்கு ஆவலா யிருந்தது. அப்பா, அம்மாவை எழுப்பலாமா வென்று ஒரு கணம் யோசித்தாள். ஆனால் அவர்களுடைய சோர்ந்த முகங்களையும் கெடு நித்திரையையும் கண்டு, அவர்களைத் தொந்தரவு செய்யாமல் தானே போய்ப் பார்ப்பதென்று நிச்சயித்தாள்.

மெதுவாக அடிமேல் அடி வைத்து மாடிப் படியிலேறிச் சப்தம் வரும் அறையை அடைந்தாள். அது அவள் தந்தையின் ஆபீஸ் அறை. இருட்டில் யாரோ ஒருவன் அப்பாவின் மேஜையைக் குடைந்து கொண்டிருந்தது மங்கலாகத் தெரிந்தது.

அறையின் கதவினருகிலிருந்த மின்சார விளக்கின் பொத்தானைச் 'சட்'டென்று அமுக்கினாள் ஹேமா. அறை உடனே பிரகாசமடைந்தது. மேஜையருகில் நின்று கொண்டிருந்த மனிதன் திடுக்கிட்டுத் திரும்பினான். அந்நேரத்தில் தன்னந் தனியாகத் தன் முன் தோன்றிய சிறுமி ஹேமாவைக் கண்டவுடன் அவனடைந்த பிரமிப்பு அவன் முகத்தில் பிரதிபலித்தது! திறந்த வாய் மூடாது. அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டு நின்றான். அவனுடம்பு பயத்தினால் நடுங்கிக் கொண்டிருந்தது.

அம்மனிதனுக்குச் சுமார் முப்பத்தைந்து வயதிருக்கும். தலையில் வாரப்படாத அடர்த்தியான மயிர். முகத்தில் பல நாள் க்ஷவரத்தை அறியாத மீசை தாடி. உடம்பில் ஒரு கிழிந்த வேஷ்டியையும், அழுக்கடைந்த சட்டையையும் அணிந்திருந்தான். அவன் கையில் சீதாபதியின் 'மணி பர்ஸ்' திறந்தபடி யிருந்தது!

"ஏ, மாமா! நீ யாரு? எங்கப்பா அறையிலே என்ன பண்ணறே?" என்ற ஹேமாவின் பிஞ்சிளங் குரல் அவனை மறுபடி அதிரச் செய்தது.

அவன் ஒரு தரம் மென்று விழுங்கினான்.

"குழந்தே, நான் உண்மையைச் சொல்லி விடறேன். நான்......திருடத்தான் வந்தேன்."

"திருட வந்தியா! ஏன்? நீ ஒரு திருடனா?"

"நான் இதுவரை திருடியதே இல்லை, அம்மா! ஆனால் இன்னிக்கு அதுக்



கும் துணியும் படியா நேரிட்டு விட்டது. என் வீட்டிலே உன் மாதிரி ஒரு பாப்பா பதினைந்து நாளா ரொம்பச் சுரமாகப் படுத்திருக்கு. அதுக்கு நாளைக்குள்ளே ஊசி போடாட்ட, பிழைக்காதுன்னு டாக்டர் சொல்லி விட்டார். ஊசி போட ஏழு ரூபாய் வேணும். நான் ஏழை. இருந்த வேலையும் போய் பல மாசமா வேலையில்லாமல் திண்டாடுகிறேன். கஞ்சி - குடிக்கிறதுக்கே வழியில்லே. ஏழு ரூபாவுக்கு நான் எங்கே போவேன்? கடைசியில் என் குழந்தை பிழைக்கணுமே என்றுதான் திருடக் கூடத் துணிஞ்சுட்டேன். இப் பக்கம் வந்து கொண்டிருந்த நான் உங்க வீட்டுக் கதவைச் சரியாகத் தாப்பாள் போடாததைக் கவனித்தேன். அதனால் மிக தைரியமா உள்ளே நுழைஞ்சுட்டேன்.



"குழந்தே! சத்தம் போட்டு என்னைப் பிடிச்சு அப்பா கையிலே கொடுத்திடுவாயா? அப்போதுஎன்னைப் பிடித்து ஜெயில்லே போட்டிடுவாங்க! என் குழந்தையும் செத்துப் போய் விடும்!" என்றான். அவன் குரலில் குழைவும் ஏக்கமும் தொனித்தன. அவன் கண்களில் நீர்த் திவலைகள் துளித்தன.

ஹேமா விரிந்த கண்களுடன் அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். திருடன் வந்திருக்கிறானென்றே அவளுக்கு மறந்து போய்விட்டது. அவள் மனக் கண்முன், தன்னைப்போல ஒரு சிறு பெண் வியாதியால் மெலிந்து கடும் சுரவேகத்தில் வேதனைப் படுவதுதான் தென்பட்டது. அவள் ஒரு முடிவுக்கு வந்தாள்.

"மாமா, இங்கே பாரு! நீ அழாதே! உன்னைப் பிடிச்சுக் கொடுக்க மாட்டேன். அப்பா பர்ஸிலிருந்து நீ ஏழு ரூபாய் எடுத்திண்டு போ. உங்க வீட்டுப் பெண்ணுக்கு இஞ்செக்ஷன் பண்ணிவிடு. பாவம், அவள் பிழைக்கட்டும்!" என்றாள் ஹேமா.

"நிசமாவா குழந்தே! நீ தெய்வப் பிறவி தாம்மா! நீ செய்த இந்த உதவியை நான் ஒருநாளும் மறக்க மாட்டேன்" என்று ஹேமாவின் கைகளையெடுத்துத் தன் கண்களில் ஒத்திக் கொண்டான் அம்மனிதன்.

வாசற் கதவு வரை அவனுடன் வந்தஹேமா கடைசியாக இன்னும் இரண்டு கேள்விகளைக் கேட்டாள்.

"ஆமாம், உங்க பேரு என்ன, மாமா?"

"குப்புசாமி, அம்மா!"

"உங்க பொண்ணு பேரு?"

"லட்சுமி."

"லட்சுமியா? எனக்குக் கூட லட்சுமின்னு ஒரு அக்கா இருந்தா... ஆனால் அவள் இப்போ இல்லே. பாவம், உங்காத்து லட்சுமியாவது பிழைக்கட்டும்."

ஒரே திகைப்பில் ஆழ்ந்திருந்தான் குப்புசாமி. ஆகா, இந்த உலகில் இச் சிறு குழந்தையின் மாசற்ற கருணை உள்ளம் போல் அனைவருக்குமிருந்தால்......?

★

ஹேமா விளக்கை அணைத்து விட்டுத் தன் இடத்தில் போய்ப் படுத்துக்கொண்டாள். அவள் உள்ளத்தில் எழுந்த பிரச்னையெல்லாம் 'லட்சுமி பிழைத்துக் கொள்வாளா?' என்பதுதான்!

மறுநாள் காலை தினப்படிக் கணக்கு எழுதிக் கொண்டிருந்த சீதாபதி கையிருப்பில் ஏழு ரூபாய் குறைவா யிருப்பதைக் கண்டு தன் மனைவியிடம் அவள் ஏதாவது பணம் எடுத்தாளா என்று கேட்டார். அப்பொழுது ஹேமா ஓடி வந்து முதல் நாளிரவு நடந்த அத்தனை விஷயங்களையும் ஒன்று விடாமல் சொன்னாள். சீதாபதியும் சாரதாம்பாளும் வியப்பில் ஆழ்ந்தனர். கூடவே சாரதாம்பாளுக்கு விவரிக்க முடியாத திகிலும் உண்டாயிற்று.

"ஏண்டி ஹேமா! என்னையாவது அப்பாவையாவது எழுப்பக் கூடாதோ? நல்ல பெண்ணடி நீ! அவன் உன் கழுத்தைத் திருகிப் போட்டிருந்தால் என்ன பண்ணுவே நீ?" என்று கேட்டாள்.

"போம்மா, அந்த மாமா வந்து ரொம்பவும் சாதுமாதிரி இருந்தாரம்மா. பாவம்,

அவர் பெண் லட்சுமிக்கு இப்போ எப்படியிருக்கோ!" என்றாள் ஹேமா.

"போடி பைத்தியம். மாமாவாம், மருமகளாம்! நீ எங்கே சத்தம் போட்டு அவனைக் காட்டிக் கொடுத்து விடுவியோன்னு அவன் ஒரு கதை கட்டியிருக்கான். ஏதோ இந்த மட்டும் ஏழு ரூபாயோடு போச்சே. அந்த ஏழுமலையான்தான் உன்னைக் காப்பாற்றினான்" என்று சந்தோஷப்பட்டார் சீதாபதி.

★

சில நாட்கள் சென்றன. ஒரு நாள் மாலை மணி ஏழாகியும் ஹேமா பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வராததைக் கண்டு சாரதாம்பாள் கவலையடைந்தாள். தினமும் மாலை ஐந்து மணிக்குள் குழந்தை வீட்டுக்கு வந்துவிடுவது வழக்கம். ஏழரை மணிக்குச் சீதாபதி காரியாலயத்திலிருந்து வந்தார். விஷயத்தைக் கேள்விப்பட்டுப் பள்ளிக்கூடத்திற்குக் காரில் பறந்தார். ஆனால் அங்கு ஹேமா வழக்கம்போல் நாலரை மணிக்கே வீட்டுக்குக் கிளம்பி விட்டாள் என்று தெரிந்தது!

மனத் திகிலுடன் இரவு பத்து மணிவரைப் பல இடங்களில் மகளைத் தேடிச் சுற்றி அலைந்தார் சீதாபதி. ஆனால் குழந்தை கிடைக்கவில்லை. முடிவில் போலீஸில் எழுதி வைத்து விட்டுத் தாங்க முடியாத துயரத்துடன் விடு வந்து சேர்ந்தார்.

சோகமே உருவாயிருந்த சாரதாம்பாள் ஏமாற்றமும் துயரமும் நிறைந்த சீதாபதியின் முகத்தைக் கண்டவுடன் 'ஹோ' வென்று அலறிவிட்டாள். "ஐயோ! இன்றைக்குத் தை வெள்ளிக்கிழமை யென்று குழந்தைக்கு, அவளுக்குச் செய்த அத்தனை நகைகளையும் போட்டு அனுப்பினேனே. அதுவே என் கண்மணிக்கு எமனாக முடிந்ததோ, என்னவோ? பிரபோ, வேங்கடாசலபதே! என் செல்வத்தை நான் மறுபடியும் காண்பேனா?" என்று அரற்றினாள்.



தகப்பனார்:—கிட்டு, பள்ளிக் கூடத்துக்குப் போகா விட்டால் புஸ்தகத்தையாவது வைத்துக் கொண்டு படியேண்டா!

கிட்டு:—இல்லே, அப்பா! நான் பள்ளிக் கூடத்துக்கே போய் விடுகிறேன்!

சீதாபதியும் மனமிடிந்து சோபாவில் சாய்ந்து விட்டார். பாவம்! அவர்களுக்குப் பிறந்த இரண்டு பெண்களில் மூத்தவளை ஏற்கெனவே பறிகொடுத்து விட்டிருந்தார்கள். இப்பொழுது இளையவளையும் காணோமென்றதும், அவர்களுக்கு விளைந்த துயரத்தை யாராலாகிலும் அளவிட்டுக் கூற முடியுமா?

நேரம் சென்று கொண்டிருந்தது. இரவு மணி ஒன்றடித்தது. சாரதாம்பாள் தரையில் அயர்ந்து கிடந்தாள். சீதாபதி சோபாவிலேயே முடங்கிக் கிடந்தார். இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு வாசற் கதவை யாரோ பலமாகத் தட்டுவது கேட்டது. சீதாபதி கண் விழித்து, விளக்கைப் போட்டுத் தள்ளாடியபடியே எழுந்திருந்து போய்க் கதவைத் திறந்தார்.

அவர் கண்ட காட்சி அவரைப் பிரமிக்க வைத்தது. மீசையும் தாடியுமாய் நின்று கொண்டிருந்தான் ஒரு மனிதன். அவன் தோள்மேல் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள் அவர் செல்வப்புதல்வி ஹேமாவதி!

கண்களைக் கசக்கிக்கொண்டு மறுபடியும் பார்த்தார் சீதாபதி. காண்பது கனவல்ல உண்மைதானென்று தெளிந்தார். உடனே "சாரதா! இங்கே வா. இந்த அற்புதத்தைப் பார்!" என்று அளவில்லாத மகிழ்ச்சியுடன் தம் மனைவியைக் கூவி அழைத்தார்.

சாரதாம்பாள் ஓடோடியும் வந்து ஹேமாவை அந்த மனிதன் கையிலிருந்து வாங்கிக் கொண்டு, அப்படியே தன்னுடைய விம்மும் மார்போடு அணைத்துக் கொண்டாள். அவள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் ஆறாகப் பெருகிற்று!

இதற்குள் ஹேமா விழித்துக் கொண்டாள். தாய் தந்தையரைக் கண்டவுடன் மட்டற்ற மகிழ்ச்சியில் குதித்தாள். பிறகு, "அப்பா, இந்த மாமா இல்லாவிட்டா நான் இன்னிக்குச் செத்தே போயிருப்பேன், தெரியுமா. இவர்தான் என்னை அந்தத் திருடனிடமிருந்து காப்பாத்தி நம்ம வீட்டுக்கு அழைச்சிண்டு வந்தார். நான் 'ஸ்கூலி'லேருந்து வந்து கொண்டிருக்கச்சே அந்தத் திருடன் வேடிக்கை காட்டறேன்னு சொல்லி ரொம்ப தூரம் இழுத்துண்டு போய்விட்டான். அப்புறம் இருட்டினவுடனே என் நகை யெல்லாத்தையும் பிடுங்கிக் கொண்டு பக்கத்திலிருந்த குளத்திலேயே என்னைத் தள்ளிடப் பார்த்தான். அப்பத்தான் எனக்குத் தெரிஞ்ச இந்த மாமா அந்தப் பக்கம் வந்து கொண்டிருந்தார். நான் பலமாக 'மாமா!' என்று கத்தினேன். இவர் ஓட்டமா ஓடிவந்து அந்தத் திருடனை நன்றாக உதைச்சு என் நகைளை அவனிடமிருந்து பிடுங்கி எனக்கு மறுபடியும் போட்டு, என்னை இத்தனை தூரம் தூக்கிக்கொண்டு வந்தார். பாவம், அவர் கை ரொம்ப வலிக்கப்போயிருக்கும்" என்று கூறி முடித்தாள் ஹேமா!

சீதாபதியும் சாரதாம்பாளும் உணர்ச்சி வசப்பட்டவர்களாய் அந்த மனிதனுக்குக்

தங்களுடைய மனமார்ந்த நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டார்கள்.

"ஐயா, நீங்கள்தான் எங்களுடைய பெற்ற வயிற்றில் பாலை வார்த்தீர்கள். அந்த வேங் கடாசலபதி தான் சரியான சமயத்திற்கு உங்களை அனுப்பி எங்கள் செல்வத்தைக் காப்பாற்றினன். ஆமாம், ஹேமா, இந்த மாமாவை உனக்கு முன்பே தெரியு மென் றுயே அது எப்படி?" என்று குரலில் ஆவல் தொனிக்கக் கேட்டார் சீதாபதி.

இதற்குள் அந்த மனிதன் குறுக்கிட்டான்.

"ஐயா, நீங்கள் என்னை மன்னிக்க வேண் டும். அன்றைக்கு ஒரு நாள் இரவில் உங்கள் வீட்டில் திருடப் புகுந்து ஹேமாவினல் கண்டு பிடிக்கப்பட்டு, அவளிடமிருந்து ஏழு ரூபாய் வாங்கிச் சென்றவன் நான்தான். உண் மையில் நான் திருடனல்ல. என் பெண் லட்சுமியின் பரிதாபகரமான நிலைமையும் பணமில்லாக் கொடுமையுமே என்னை அன் றைக்கு நெறி தவறி நடக்கச் செய்தன. நான் படித்து உத்தியோகத்தி லிருந்தவன் தான். ஆனல் சில மாதங்களுக்கு முன்பு வேலை போய்விட்டது. எவ்வளவு முயற்சி செய்தும் மறு வேலை கிடைக்காததால் வறு மையில் உழலுகிறேன். உண்மையில் உங்கள் பெண்தான் தக்க சமயத்தில் பண உதவி செய்து என் லட்சுமிக்கு உயிர்ப் பிச்சை யளித்தாள். அந்தப் பேருதவிக்குச் சிறு ஈடாக நான் இன்றைக்கு ஹேமாவைக் காப்பாற்ற முடிந்ததே என்று சந்தோஷப்படுகிறேன்" என்று முடித்தான் குப்புசாமி.

"குப்புசாமி! எல்லாம் அவன் செயல். நீ அன்றைக்கு என் வீட்டில் நுழைந்ததால் தான் இன்றைக்கு ஹேமாவை மீட்டவுடன் நேரே இங்கு அழைத்து வர முடிந்தது! இனி நீ கவலைப்படாதே, உனக்கு என் காரி யாலயத்திலேயே தகுந்த வேலை யொன்றை வாங்கித் தருகிறேன். இனி உன்னையும் உன் குடும்பத்தையும் காப்பாற்றுவது என் கடமை" என்று மனமுருகி நாத் தழுதழுக்கச் சொன்னர் சீதாபதி.

இப்போது குப்புசாமியின் குதூகலத்திற் குக் கேட்கவும் வேண்டுமோ?

ஆடல் பாடல்

# வந்தாரே நந்தனர்!

ஒரு வழியாக நந்தனருக்கும் நந்தனர் கதை காலட்சேபம் நாடகம் ஆகியவற்றுக் கும் விடை கொடுத்து அனுப்பி விட்டதாக நம்பிக்கை கொண்டிருந்தோம் அல்லவா? அந்த நம்பிக்கை பொய்த்து விடும் என்று தோன்றுகிறது. நந்தனர் நம்மை விடமாட் டார், — நந்தனர் நாடகமும் தமிழ் நாட்டில் நீடித்திருக்கும் என்று தோன்றுகிறது.

பாருங்கள்; நந்தன் சரித்திரத்தின் சூழ் நிலை இப்போது அடியோடு மாறிவிட்டது. தீண்டாமை போய் விட்டது. ஹரிஜனங்கள் தாராளமாக ஆலயங்களுக்குள் போகலாம். ஆனல் அவர்கள் போவதில்லை. கம்யூனிஸ்ட் பிரசாரத்தின் காரணமாக ஹரிஜனங்களில் பெரும்பாலோர் மாஸ்கோவையே தில்லையம் பலம் என்றும், பெங்கிங்கைத் திருப்பங்கூர் என்றும் கருதத் தொடங்கி யிருக்கிறார்கள். வழிமறித்திருக்கும் நந்தி காங்கிரஸ் என்றும் அவர்களுக்குப் போதிக்கப்பட்டிருக்கிறது.

பண்ணையாள் மிராசுதாரிடம் போய் விடை கேட்கும் காலமும் போய்விட்டது. மிராசு தார் பண்ணையாளிடம் சென்று "வயலுக்கு வா, அப்பனே!" என்று கெஞ்சுமணியம் செய்யவேண்டி யிருக்கிறது.

இத்தகைய சூழ்நிலையில் நந்தன் கதையில் கவர்ச்சிகரம் என்ன இருக்கப் போகிறது?

அல்லாமலும், நந்தன் சரித்திரம் மூன்று தடவை ஸினிமாக் காட்சியில் வந்து விட்டது. மூன்று முறை ஸினிமா எடுக்கப்பட்ட பின்ன ரும் ஒரு கதைக்கோ, நாடகத்துக்கோ உயிர் இருக்கும் என்பது நம்பக் கூடியதில்லை.

இப்படியெல்லா மிருந்தும், ஸ்ரீ கோபால கிருஷ்ணபாரதியார் இயற்றிய நந்தன் சரித் திரக் கீர்த்தனை என்னும் நாடக நூலின் பெருமை அதற்கு இன்னும் உயிர் அளித்து வருவது மட்டும் அல்ல; பூரண ஜீவசக்தி யுடன் விளங்கும்படி செய்திருக்கிறது.

'அமர காவியம்', 'சிரஞ்சீவி இலக்கியம்' என்றெல்லாம் சொல்கிறார்களே, அதன் உண்மை என்ன என்பது, சென்ற 16-11-52-ல் மியூஸியம் தியேட்டரில் நடை பெற்ற "நந்தனர் நாடக"த்தைப் பார்க்க வந்திருந்த பெருந் திரளான ரஸிகர்களுக்கு நன்றாய் விளங்கி யிருக்கும்.

இரண்டு வருஷங்களுக்கு முன்னல் தெருத் தெருவாகவும் வீடு வீடாகவும் அடிபட்ட ஸினிமா டப்பா பாட்டுக்கள் இப்போது எங்கே போயின, எந்தச் சந்து பொந்து களில் போய் மறைந்தன என்பதை எண் ணிப் பார்த்துவிட்டு, நந்தன் சரித்திரக் கீர்த் தனைகளை இத்தனை ஆயிரம் தடவை கேட்ட பிறகும், சூழ் நிலை அடியோடு மாறிய பிறகும், எவ்வளவு ஜீவ சக்தியுடன் அவை விளங்குகின்றன என்பதையும் எண்ணிப் பார்த்தால், நமது கர்நாடக சங்கீதத்தின் பெருமை என்ன, அமர காவிய சாஹித்தி யத்தின் மேன்மை என்ன என்பவற்றை நன்கு அறியலாம்.

மேலே குறிப்பிட்டபடி மியூஸியம் தியேட்டரில் நடந்த நந்தனர் நாடகத்தை எழும்பூர் நாடக சபை (Egmore Dramatic Society) யைச் சேர்ந்தவர்கள் நடித்தார்கள்.

முக்கிய வேஷங்கள் இரண்டும் தரித்து நடித்தவர்கள் இரண்டு பிரபல இளம் சங்கீத வித்வான்கள். வேதியராக ஸ்ரீ களக்காடு ராமநாராயணன் அவர்களும், நந்தன் வேஷத்தில் ஸ்ரீ மணக்கால் ரங்கராஜனும் தோன்றி நடித்தார்கள். இரண்டு பேருக்கும் வேஷப் பொருத்தம் மிக நன்று யிருந்தது. நந்தன் நாடகம் முக்கியமாக இசை நாடகமாதலாலும், முக்கிய பாத்திரங்களாக நடித்தவர்கள் இசைக் கலையில் தேர்ந்தவர்களாதலாலும், நாடகம் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் ரஸிக்கக் கூடியதாக இருந்தது.

நாடகம் பார்த்த சபையோருக்கு இடையிடையே சில சமயம் கவலை உண்டாகி விட்டது. இந்த நந்தன் நாடகம் வழக்கம் போல் முடியுமா, அல்லது புது விதமான முடிவு பெற்றுவிடுமா என்பதுதான் கவலை.

நந்தன் ஆரம்ப நாட்களில் சிதம்பரம் போக வேதியரிடம் உத்தாரம் கேட்கும்போதெல்லாம், வேதியர் அவனுடைய சங்கீதத்தில் மயங்கிப் போய், "அப்பனே! திவ்யமாகத் தில்லைச் சிதம்பரத்துக்குப் போ! இப்படியே பாடிக்கொண்டு புறப்படு! நானும் தாளம் போட்டுக் கொண்டு உன்னுடன் வந்து விடுகிறேன்!" என்று சொல்லிக் கிளம்பி விடுவாரோ என்று சபையோர் கவலை கொண்டனர். நந்தன் பாடும்போது வேதியர் சில சமயம் கைவிரலால் தாளம் போட்டுக் கொண்டிருந்ததும் அவர் முகத்திலே தோன்றிய 'சபாஷ்' அறிகுறியும் சபையோரின் கவலையை அதிகமாக்கின.

வேதியர் நந்தனைப் பார்த்துச் "சிதம்பரம் போவதை மறந்துவிடு!" என்று பாடிய போதெல்லாம், வேறொரு வகை பீதி உண்டாயிற்று. "ஐயா! வேதியரே! நல்லவரே! பெரியவரே! அபூர்வமான பாடகரே! இப்போது பாடிய கானடா ராக ஆலாபனையைப் போல் இன்னும் சில ராகங்களையும் ஆலாபனை செய்யுங்கள்! நான் சிதம்பரத்தையும் நடராஜாவையும் மறந்து தங்கள் சங்கீதத்தையே கேட்டுக் கொண்டு இருந்து விடுகிறேன்!" என்று நந்தன் சொல்லிவிடுவானோ — அவன் சிதம்பரம் போகாமலே நாடகம் முடிந்து விடுமோ என்று தோன்றியது.

இரண்டு வித்வான்களும் போட்டி போட்டுக் கொண்டு நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளை நல்ல முறையில் பாடினார்கள். அவ்வப்போது வெளியாக வேண்டிய உணர்ச்சி பாவங்களுக்கு ஏற்பவும் பாடினார்கள்.

இம்மாதிரி ஒரு சிறந்த இசை நாடகத்தில் வேஷம் தரித்து நடித்துப் பாடுவதால் இரு வித்வான்களின் சங்கீதமும் மேன்மை அடையும் என்று நம்புகிறேன்.

முக்கியமாக மணக்கால் ரங்கராஜனுக்கு இது மிகவும் உபயோகமான பயிற்சியாயிருக்கும். ஸ்ரீ ரங்கராஜன் நல்ல சாரீர வசதி உடையவர். சாதகமும் அபாரமாகச் செய்திருக்கிறார். அபரிமிதமான பிர்க்காப் பொழிவு உள்ள துரிதகால சங்கீத பாணி அவருடையது. கச்சேரிகளில் மேளம் கட்டுவதற்குத் துரிதகால உருப்படிகளும் அவசியந்தான்; பிர்க்காக்களும் அவசியந்தான். ஆனால் அவையே பிரதானமாக மேலோங்கி நிற்குமானால் உயர்தர சங்கீதத்தில் எதிர்பார்க்கப்படும் ராக பாவமும் உணர்ச்சி பாவமும் ஸாஹித்யத் தெளிவும் இல்லாமற் போய் விடுகின்றன.

இம்மாதிரி நாடகத்தில் வேடம் தரித்து மேடையில் வந்து நடிப்பதன் மூலம் ஸ்ரீ ரங்கராஜனுடைய சங்கீத பாணி நிறைவு பெற்று மேன்மையுறும் என்பதில் சந்தேகமில்லை.

களக்காடு ஸ்ரீ ராமநாராயணன் கேட்போரின் செவி குளிரச் செய்யும் இனிய சங்கீத பாணியை உடையவர். நாடகத்தில் நடிப்பதன் மூலம் அவருடைய சங்கீதமானது கேட்பவர்களுடைய நெஞ்சில் பதிந்து நிலைத்து இன்பந்தரக்கூடிய சிறப்பை அடையும் என்று எதிர்பார்க்கிறேன்.

பாத்திரத்துக்குப் பொருத்தமான இரண்டு சங்கீத வித்வான்களை இழுத்துப் போட்டு நடிக்கச் செய்து 'நந்தனார்' நாடகத்துக்குப் புத்துயிர் தந்த எழும்பூர் நாடக சபையினரைப் பாராட்டுகிறேன். — "கர்நாடகம்"



"கார் ரொம்ப வேகமாக ஓடி வந்து ஒரு ஆசாமியைத் தள்ளிவிட்டது என்கிறீரே! காரின் நம்பரைப் பார்த்துக் குறித்துக் கொண்டீரா? நம்பர் தெரிந்து கொண்டிருந்தால் போலீஸில் ரிப்போர்ட் பண்ணலாம்!"

"நம்பரைப் பார்க்க எங்கே அவகாசம் இருந்தது? காரை ஓட்டிக்கொண்டு வந்தது ஒரு பெண். அவள் பச்சைக் கரை போட்ட வெள்ளைப் புடவை உடுத்தியிருந்தாள். காதில் நவநாகரீகமான ஜிமிக்கி. சுருட்டைத் தலைமயிரை அழகாக வாரி இரட்டைப் பின்னல் போட்டுக் கொண்டிருந்தாள், கழுத்தில் நெக்லேஸ். நெற்றியில் நாசூக்கான சாந்துப் பொட்டு......!"




குடிசையை யடுத்த மைதானம். அந்த மைதானத்தில் இரண்டு சிறுவர்கள் காற்றாடி கட்டிப் பறக்க விட்டுக் கொண்டிருந்தனர். காற்றில் அந்தக் காற்றாடி ஊசலாடிக் கொண்டே மேலே மேலே சென்றது. அது உயரே செல்லச் செல்ல சிறுவர்களின் ஆனந்தமும் கரைபுரண் டோடியது.

"அண்ணே! கயிற்றை மெதுவாக விடு. கயிறு அறுந்து போய் விட்டால் பட்டம் எங்கேயாவது தொலை தூரத்தில் விழுந்து விடும். பிறகு அதைக் கண்டு பிடிப்பது கஷ்டந்தான்" என்று குப்பன் தன் கையிலிருந்த கொய்யாப் பழத்தை ருசித்துச் சாப்பிட்டவாறே எச்சரிக்கை செய்தான்.

"கவலைப்படாதே, தம்பி! பெருங்காற்று அடித்தால்தான் பட்டம் எங்கேயாவது தொலை தூரத்தில் போய் விழுந்துவிடும். நான் மிகுந்த ஜாக்கிரதையுடன் தான் நூலை மெதுவாக விடுகிறேன். பட்டம் அறுந்து விடாது" என்று பதிலளித்தான் சுப்பன்.

"அண்ணே! கொய்யாப் பழம் எவ்வளவு ருசியா யிருக்கிறது, தெரியுமா? பட்டத்தை என் கையில் கொடுத்துவிட்டு நீ ஒன்று சாப்பிட்டுப் பாரேன்" என்றான் குப்பன்.

"இரு! பட்டம் பறக்கவிட்டு முடிந்த பிறகு வந்து உன்னிடம் கொய்யாப் பழம் வாங்கிக் கொள்கிறேன்" என்று காற்றாடியைப் பறக்க விட்டவாறே பதில் கூறினான் சுப்பன்.

இச்சமயத்தில் ஒரு முரட்டுப் பையன் அவர்களை நெருங்கி, "தம்பி! என்னிடம் பட்டத்தைக் கொடு. நான் எவ்வளவு தூரம் பறக்க விடுகிறேன், பார்" என்றான்.

"வேண்டாம்! நானே பட்டத்தைப் பறக்க விட்டுக் கொள்கிறேன்! நீ பேசாமல் உன் வேலையைக் கவனித்துக் கொண்டு போ!" என்று கூறினான் சுப்பன்.

குப்பன் கையிலிருக்கும் கொய்யாப் பழங்களைக் கண்டதும் அந்த முரட்டுப் பையன் சுப்பனிடமிருந்து அவனிடம் வந்து, "சின்னத் தம்பி! உன் கையிலிருக்கும் கொய்யாப் பழங்களில் எனக்கு ஒன்று கொடு!" என்று அதிகாரத் தோரணையில் கேட்டான்.

"இந்தா, சாப்பிடு!" என்று கூறிக் குப்பன் தன் கையிலிருந்த கொய்யாப் பழங்களில் ஒன்றைக் கொடுத்தான். அந்த முரட்டுப் பையன் அதைச் சாப்பிட்டு விட்டு மறுபடியும், "என்ன தம்பி? ஒரே ஒரு வாய்க்குக் கூடக் காணாத சின்னப் பழத்தைக் கொடுத்திருக்கிறாயே? இன்னும் இரண்டு பழங்கள் கொடு!" என்று அதட்டிக் கேட்டான். முரட்டுப் பையனின் பேராசையைக் கண்டு கோபமடைந்த குப்பன், "ஏதோ கேட்கிறாயே என்பதற்காக ஒரு கொய்யாப் பழம் கொடுத்தேன். அது போதாதென்று, இன்னும் கேட்கிறாயே? என் அண்ணனுக்கு வேண்டாமா?" என்று கேட்டான்.

"என்ன? தரமாட்டாயா? இப்பொழுது என்ன செய்கிறேன், பார்!" என்று கூறிவிட்டு முரட்டுப் பையன் அவன் கையிலிருந்த கொய்யாப் பழங்களைப் பிடுங்க முயன்றான்.

உடனே குப்பன் முரட்டுப் பையனின் பலாத்காரத்தைக் கண்டு சினமடைந்து, "சூரா! சூரா!" என்று உரக்கக் கூவினான். அடுத்த கணம் ஒரு நாய் நாலு கால் பாய்ச்சலில் ஓடி வந்தது. குப்பன் அதனிடம், "சூ! சூ!!" என்று கூறி முரட்டுப் பையனின் பக்கம் கையைக் காட்டினான். அவ்வளவுதான்; நாய் முரட்டுப் பையனின் மேல் பாய்ந்தது. "பாருங்கள்! என்னை நாயை விட்டா கடிக்கச் சொல்கிறீர்கள்? உங்களை என்ன செய்கிறேன், பார்!" என்று கறுவிக் கொண்டே ஓடினான். ஆனால் குப்பனோ, சுப்பனோ அதற்குச் சிறிதும் அஞ்சவில்லை.

மறுநாள்காலை சுப்பனும் குப்பனும் எழுந்தபோது அவர்கள் குடிசையின் முகப்பில் செருகி யிருந்த காற்றாடியைக் காணவில்லை. அதைத் தேடி அவர்கள் தோட்டத்துக்கு வந்தபொழுது அங்கே அவர்களுடைய காற்றாடி சுக்கு நூறாகக் கிழிந்து கிடந்தது. காற்றாடியின் பரிதாப நிலையைக் கண்டதும் அவர்களுக்குத் துக்கம் பீறிக் கொண்டு வந்தது.

"தம்பி! அந்த முரட்டுப் பையன் தான் இதைக் கிழித் தெறிந்திருக்க வேண்டும். நம் மீது அவன் பழி தீர்த்துக் கொண்டு விட்டான்" என்றான் சுப்பன்.



"அப்பாவிடம் காசு வாங்கி, வேறு பட்டம் வாங்கலாமா?" என்றான் குப்பன்.

"நம்ம அப்பா ஏழை. முதலில் ஒரு பட்டம் வாங்கிக் கொடுக்கவே சங்கடப்பட்டார்."

"அப்படியானால் என்ன செய்வது? இனி மேல் நாம் பட்டம் பறக்கவிட முடியாதா?"

"கவலைப்படாதே, தம்பி! நான் எப்படியாவது பணம் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன். பிறகு பட்டத்துக்கு வேண்டிய வர்ணத்தாளும், நூலும் வாங்கலாம்" என்று சமாதானப் படுத்தினான் சுப்பன்.

அன்று மாலை நாலு மணியிருக்கும். சுப்பன் காசு சம்பாதிப்பதற்காக நகரத்துக்குச் சென்றான்.

பஸ்ஸிலிருந்து இறங்கிய ஒரு பெரியவர் கனத்த பெட்டியைத் தூக்கிக் கொண்டு சென்றார். சுப்பன் மகிழ்ச்சியுடன் அந்தப் பெரியவரிடம் ஓடி, "ஐயா! நான் உங்கள் பெட்டியைத் தூக்கி வருகிறேன் நீங்கள் விரும்பிய காசு எனக்குக் கொடுங்கள் போதும்!" என்றான்.

"தம்பி! இவ்வளவு பெரிய பெட்டியை உன்னால் தூக்க முடியாதே?" என்றார் அவர். ஆனால் சுப்பன் இடைவிடாது வற்புறுத்தவே அவர் அவனிடம் பெட்டியைக் கொடுத்தார்.

சுப்பன் கஷ்டப்பட்டுப் பெரிய பெட்டியைச் சுமக்க முடியாமல் சுமந்து சென்றான். அவர் தன் வீடு வந்ததும் அவன் கையில் எட்டணாவைக் கொடுத்தார். சுப்பன் மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு திரும்பினான்.

சுப்பனால் நடக்க முடியவில்லை. பெரிய பெட்டியைத் தூக்கிப் பழக்கமில்லாததால் அவன் கைகால்கள் சோர்ந்து விட்டன. அசந்து போய் ஒரு வீட்டின் திண்ணையில் சாய்ந்தான். அலுப்பினால் அவன் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டன.



வெகு நேரம் கழித்துத் துயிலெழுந்த பொழுது அவன் கண் முன்னே ஒரு எதிர்பாராத சம்பவம் நடந்து கொண்டிருந்தது.

சுப்பனின் காற்றாடியைச் சுக்கு நூறாகக் கிழித்த முரட்டுப் பையனை ஒரு மீசைக்காரர் தமது இரும்புக் கையால் பற்றிக் கரகர வென்று இழுத்துச் சென்றார். முரட்டுப் பையன் 'ஹோ' வென்று கதறியழுது கொண்டே சென்றான். தனக்குக் கெடுதல் செய்த போதிலும் அப்போது அவன் பட்ட பாடு சுப்பனின் மனத்தைப் பெரிதும் இளகச் செய்து விட்டது.

திண்ணையிலிருந்து எழுந்து சுப்பன் அந்த மீசைக்காரரிடம் ஓடிப் போய், "ஐயா! ஏன் இப்படிக் கருணையின்றி அவனை இழுத்துச் செல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"தம்பி துஷ்டனுக்குப் பரிந்து பேச வருகிறாயே? எங்கள் வீட்டின் மீது விளையாட்டாகக் கல் எறிந்து ஓட்டை உடைத்து விட்டான். இவனைத் தண்டிப்பதில் தவறென்ன?" என்றார் அந்த மீசைக்காரர்.

"ஐயா! சிறியோர் செய்த சிறு பிழையெல்லாம் பெரியோர் பொறுப்பது கடனல்லவா?" என்றான் சுப்பன்.

"தம்பி! இந்த முரட்டுப் பையனின் தந்தையிடம் இழுத்துச் சென்று உடைந்த ஓட்டின் கிரயத்தை வாங்கினால்தான் அவனை விடுவேன்" என்றார் மீசைக்காரர்.

"ஐயா! என்னிடம் எட்டணா இருக்கிறது. இந்தச் சிறிய தொகையைப் பெற்றுக் கொண்டு பெரிய மனசு செய்து அவனை விட்டு விடுங்கள்" என்று மன்றாடினான் சுப்பன்.

மீசைக்காரர் சுப்பனிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு முரட்டுப் பையனை விடுதலை செய்து விட்டார்.

'விரோதிக்கும் உதவி செய்ய நேர்ந்ததை' நினைத்துச் சுப்பன் மகிழ்ந்து வீடு திரும்பினான்.

மறுநாள் காலை. சுப்பனும் குப்பனும் தோட்டத்தில் செடிகளுக்குக் களை கொத்திக் கொண்டிருந்தார்கள். முரட்டுப் பையன் கையில் இரண்டு வர்ணக் காற்றாடிகளுடன் தோட்டத்தில் பிரவேசித்தான்.

சுப்பனின் அருகில் சென்று முரட்டுப் பையன், "உன்னுடைய பட்டத்தை நாசப் படுத்தி, உன்னைத் துன்புறுத்திய போதிலும், நேற்று நீ என்னைக் கொடிய ஆபத்திலிருந்து காப்பாற்றி உதவியதற்காக உனக்கும் உன் தம்பிக்கும் இவ்விரு காகிதப் பட்டங்களையும் கொடுக்கிறேன். இனி உங்களைச் சிறிதும் துன்புறுத்த மாட்டேன்" என்றான்.

சுப்பனும் குப்பனும் அப் பையன் கொடுத்த புதிய காற்றாடிகளை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டனர். அவனையும் தன் நண்பனாக ஏற்றுக் கொண்டனர்.

சுப்பனின் தயாளச் செய்கையால் அந்தப் பையனின் முரட்டுக் குணம் மறைந்துபோய் விட்டது. அவனைவிட நல்ல பையன் அந்த ஊரிலேயே கிடையாது என்று அப் பையன் இப்பொழுது பெயரெடுத்து விட்டான்.

# தமிழ்க் களஞ்சியம்






## 15. அடடா! வந்திருப்பார் முன்னமேயே!

அன்பு என்ன வேடிக்கைகள் எல்லாமோ பண்ணும். கண்ணும் பொத்தி விளையாடி விடும்.

ஒரு வீட்டில் தாயும் நாலு வயசுக் குழந்தையும் இருக்கிறார்கள். அவர்களோடு மற்ற குடும்பத்தினரும் விருந்தாளிகளும் இருக்கிறார்கள். தாய்க்கு எவ்வளவோ வேலை.

வீட்டை ஒழுங்காய் வைத்திருக்கிற வேலை; பசுக்களைப் பார்த்துக் கொள்ள வேண்டிய வேலை; சமையல் வேலை இவைகளோடு பரிமாறி உபசரிக்கிற வேலையும். இத்தனை வேலைக்குள் குழந்தையைக் கவனிக்க நேரம் இல்லை. மற்றவர்கள் காரியமாகப் போய்விட்டது அது.

இப்படி குழந்தையைப் பாராமலே ஒரு நாள் இரண்டு நாள் கழிந்துபோகிறதும் உண்டு.

இந்த நிலைமையில் தாயின் பாட்டி வந்தாள். நான்கு நாள் இருந்தாள். "குழந்தையை ஊருக்குக் கொண்டு போய்ச் சில நாள் கழித்து அனுப்புகிறேன்" என்று சொன்னாள் பாட்டி.

குழந்தையின் தாயும் சம்மதித்து ஊருக்கே அனுப்பி விட்டாள் குழந்தையைப் பாட்டியுடன். குழந்தை போன மறு நாளே தாய்க்குக் கஷ்டமாகப் போய் விட்டது. மனசெல்லாம குழந்தையுடனேயே போய் விட்டது—நிம்மதியில்லை. வீட்டு வேலையில் மனசு செல்ல வில்லை. சதா குழந்தையை எண்ணிக் கொண்டிருக்கும் போது, ஒரு நிலையில் எப்படியிருக்கும் மனசு.

ஆள் விட்டு விட்டாள் பாட்டிக்கு, குழந்தையைக் கொண்டு வந்து சேர்ப்பதற்காக.

குழந்தை வீட்டுக்கு வந்து விட்டது. ஆவி சேர்த்துக் கட்டி, முத்தமிட்டு, பரவசத்தில் மூழ்கி விட்டாள் தாய்—ஏதோ காணாமல் போன கைக் குழந்தையைக் கண்டெடுத்த மாதிரி.

அவ்வளவு தான்: அடுத்த நிமிஷமே குழந்தையைக் கவனிக்கிறது என்ற காரியம இல்லையென்று ஆய் விட்டது வீட்டு வேலை தான் வேண்டிய மட்டும் இருக்கிறதே! இரண்டு மூன்று நாள் குழந்தையைப் பாராமலே கழிந்து விட்டது.

நமக்கு வியப்பாய்த்தான் இருக்கிறது. பக்கத்தில் இருக்கும் போது கவனிக்கிறதில்லை குழந்தையை. அடுத்த ஊர் போய் விட்டால் அதுவே எண்ணம்; அதுவே

கவலை. அன்பின் வேடிக்கையும் விளையாட்டும் இது.

* * *

இதோடு இன்னொரு அனுபவத்தையும் பார்க்கலாம்.

கார்லைல் ஆசிரியர் ஆங்கில உலகில் புகழ் பெற்ற பேராசிரியர். பெரிய பெரிய ஆராய்ச்சி செய்து நூல்கள் எழுதி வைத்திருக்கிறார். இன்றைக்கும் அவைகளுக்குப் பெரு மதிப்பு. பெரும் பெரும் ஆராய்ச்சிகளில் ஈடுபட்ட நிலைத் தன்னுடைய நேரமெல்லாம் புஸ்தகங்களோடு தான் கழியும். வேறு ஒன்றிலும் செல்லுவதில்லை மனசு.

கார்லைல் ஆசிரியருடைய மனையாளும் கல்வி கற்றவள்தான். அவளோடு பேசுவதற்கு நேரம் இருப்பதில்லை ஆசிரியருக்கு.

கூட இருந்து சாப்பிடுகிற முறை உண்டே, அதுவும் கிடையாது. சாப்பாட்டைப் புஸ்தக அறையிலேயே கொண்டு வைத்து விட்டுப் போகும்படி சொல்லி விடுவார் — சௌகரியப்படும் போது சாப்பிடுவதற்காக.

இந்த முறையிலேயே நாட்கள், வாரங்கள், மாசங்கள் கழிந்தன.

மனையாளுக்கு உத்ஸாகம் இல்லாமல் மனம் கசந்து போய் விட்டது. அதன் மேல் "தாயின் ஊருக்குப் போய் ஒரு மாசம் இருந்து விட்டு வருகிறேன்" என்று சொன்னாள்.

"வாஸ்தவந்தான்; அப்படி ஒரு மாறுதல் உனக்கு வேண்டியதுதான்" என்று சொல்லி அனுப்பி விட்டார் மனையாளை.

மனையாள் தாயின் ஊருக்குப் போய் நாலு நாள் ஆய்விட்டது. இங்கே ஆசிரியருக்கு ஒரே நினைவாய்ப் போய்விட்டது மனையாள் மேல். படிக்க ஓடவில்லை; சாப்பாட்டிலும் ருசி இல்லை.

உடனே ஆள் அனுப்பினார் மனையாளுக்கு. "எனக்கு ஒன்றும் ஓடவில்லை. உடனே புறப்பட்டு வந்து விடு" என்பதாகச் சொல்லி மனையாள் திரும்பி வந்தாள். ஆசிரியர் மிக்க சந்தோஷத்தோடு வரவேற்றார். "இனிமேல் ஒழுங்காய் இருக்கிறேன். உறவாடுவதில் ஒரு குறையும் இருக்காது" என்று சொன்னார்.

மனையாளும் மனம் திரும்பி விட்டார் ஆசிரியர் என்று மிக்க உத்ஸாகத்தோடு ஒரே மேஜையில் இருவருமாக உட்கார்ந்து, காப்பி பலகாரம் சாப்பிட்டார்கள். கொஞ்ச நாழிகை பேசிக் கொண்டிருந்தார்கள். "புதிதாக ஒரு புஸ்தகம் வந்திருக்கிறது. அதைக் கொஞ்சம் பார்க்கிறேன்" என்று சொல்லிப் புஸ்தக அறைக்குப் போனார். மணி ஒன்றாய் விட்டது. மனையாள் வந்து கேட்டாள், "சாப்பிட வேண்டாமா?" என்று. "வேண்டியதுதான். இன்னும் கொஞ்சம் படிக்க வேண்டிய திருக்கிறது புஸ்தகத்தில். சாப்பாட்டை இங்கேயே கொண்டு வந்துவிடச் சொல்லு" என்று சொல்லி விட்டு, புஸ்தகம், மௌனம், அவர் மூன்று பேரும் ஒன்றாய் விட்டார்கள். மனையாள் பார்த்தாள்; பழைய சொக்கனே சொக்கன் என்றாய் விட்டது. ஆசிரியரைத் திருத்துகிற காரியம் முடியாத காரியம் என்று பட்டு விட்டது.

சாயங்காலமே புறப்பட்டுத் தாய் வீட்டுக்குப் போய் விட்டாள்.



பத்திரிகை ஆசிரியர் :—"இந்தக் கவிதை ரொம்ப உயர்தரமாக இருக்கிறது. இதை எங்கேயோ படித்த ஞாபகமா இருக்கிறது. இது நீர் எழுதியது தானா.........சந்தேகமாய் இருக்கிறது?

கவி ;—ஆம்! எழுதியது நான்தான். காப்பி இல்லை"

பத்திரிகை ஆசிரியர் :—மன்னிக்க வேண்டும். அமருங்கள் காளிதாஸரே! நீங்கள் இறந்து ரொம்ப யுகங்கள் ஆகி விட்டது என்று நினைத்தேன் இன்னும் உயிருடன் இருக்கிறீரா!

---

இந்த அனுபவங்களை வைத்துக் கொண்டு ஒரு பக்தருடைய அனுபவத்தைப் பார்க்கலாம்.

திருமழிசை ஆழ்வார் பெரிய பக்தர்.

திருமழிசையிலிருந்து காஞ்சிபுரத்துக்குப் போனார். காஞ்சிபுரத்திலுள்ள பெருமாள் சந்நிதிகளில் அப்படி அப்படியே ஈடுபட்டு உருகுகிறவர்.

தினம் தினம் ஊரகம் என்ற கோயிலுக்குப் போவார். அங்குள்ள பெருமாள் எழுந்து நிற்கிற திருக்கோலம். அந்தத் திருக்கோலத்தை அனுபவிப்பார். அடுத்தாற்போல் பாடகம் என்ற கோயிலுக்குப் போவார். அங்கே பெருமாள் உட்கார்ந்திருக்கிற திருக்கோலம். அதன் பிறகு திருவெஃகா என்ற கோயிலுக்குப் போவார். அங்கே பெருமாள் படுத்திருக்கிற திருக்கோலம். மூன்று திருக்கோலங்களையும் தத்துவப் பொருளோடு கலந்து அனுபவிப்பார் ஆழ்வார்.

ஆனாலும் சேவிக்கும்போது பலர் குறுக்கும் நெடுக்கும் ஊடாடிப் போவதும் சப்தம் போடுவதும் அவருடைய மனசைக் கொஞ்சம் கலைத்துத்தான் விடும். திருக்கோலங்கள் மனசில் அவ்வளவு தெளிவாய் நிற்பதில்லை. அவருக்கே பட்டது. இந்த திவ்ய திருக்கோலங்கள் மனதை விட்டுக் கழன்றல்லவா போகின்றன என்று நினைத்தார்.

நின்ற தெந்தை
ஊர கத்(து)
இருந்த தெந்தை
பாட கத்(து)
அன்றி வெஃக—
ணைக்கி டந்த(து)
யான் இலாத
போதெ லாம்.

வாஸ்தவந்தான். வெகு காலமாகப் பெருமான் ஊரகத்தில் நின்று கொண்டுதான் இருந்தார். பாடகத்தில் உட்கார்ந்து கொண்டுதான் இருந்தார். இல்லையென்று சொல்லவில்லை நான். ஆனால் இப்போது என்ன?

நின்ற தெந்தை
ஊர கத்(து),
இருந்த தெந்தை
பாட கத்(து),
அன்றி வெஃக
ணைக்கி டந்(து)
யான் இலாத
போதெ லாம்:
அன்று நான்பி
றக்க கில்லேன்
இன்று நான்பி
றந்த பின்
நின்ற தும்இ
ருந்த தும்கி
டந்த தும்என்
நெஞ்ச ளே.

[அன்று நான் பிறக்கவில்லை: நான் பிறந்த பிறகு பெருமாள் என் உள்ளத்துக்கு வந்து விட்டார்; அதற்கு முன் அந்தந்த கோயில்களில் இருந்தார். இருந்தால்த் தான் என்ன—முன்னமே நான் பிறந்திருந்தால்ப் போதும்: அப்போதே வந்திருப்பார் என் உள்ளத்துக்குள்ளே]

காஞ்சிபுரத்தை விட்டு திருமழிசைக்கு வந்தார் ஆழ்வார். இருபத்திநாலு மணி நேரமும், விழித்திருக்கும்போதும் தூங்கும்போதும் கனவிலும், அந்த மூன்று திருக்கோலங்களும் மனசிலேயே நிற்கின்றன. மனசை விட்டு அகல மாட்டேன் என்றன. பக்தி (அன்பு) என்றால் இதுதானே.

பக்தியும் ஹாஸ்யமும் அழகாய் வந்து விளையாடுகின்றன பாடலில்.

மிக அற்புதமான பக்திப் பாடல்.




எல்லோருக்கும் ஒரு தாய் இருப்பாள். அவள் நல்லதையும் கெட்டதையும் பார்த்துக் கொண்டு போவாள். தாயற்ற பிள்ளைகளான நாங்கள் இரண்டு தாய்மார்கள் நடுவே படாத தொல்லைப் பட்டோம். ஒரு தாயை இழந்து மறுபடியும் நாதியே அற்றுத் திரியும் மனிதர்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் என்னைப்போல் அதிகமானதொரு ஆதரவைக் கொண்டு கஷ்டப்பட்டவர்கள் இருக்க மாட்டார்கள் என்றே தோன்றுகிறது.

பெரியப்பா இல்லாத ஒரு பெரியம்மா இருந்தாள் எங்கள் வீட்டில். என் தகப்பனாரின் இளைய மனைவி எங்கள் சின்னம்மா ஒருத்தி இருந்தாள். இந்த இரண்டு அன்னைமார்கள் நடுவே நான் அவஸ்தைப் பட்டேன்.

“அடியே, குந்தளா! எப்பொழுது பார்த்தாலும் வாசலில் என்ன வேலை உனக்கு! சிறு பெண்களுக்கு இது ஒரு வழக்கம் நன்றாகப் படிந்தது!” என்று பெரியம்மா என்னைத் திட்டியபடியே இருப்பாள். பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வந்தாயிற்று என்றால் பிடித்தது சங்கடம். தலை பின்னி, முகம் கழுவிச் சற்று நேரம் வாசல் திண்ணையில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால் மாலைவேளை எவ்வளவு ரம்மியமாகப் போகும்! அந்த அம்சமே இந்த ரசனையற்ற மனிதர்களுக்குத் தெரியாது. என் வயதுப் பெண்கள், என்னோடு படிப்பவர்கள், என்னோடு விளையாடுபவர்கள் எல்லோரும் மாலை வேளையில் வாசல் திண்ணையில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்கள். நான் மட்டும் ஒரு நாள் கூடச் சேர்ந்தாற்போல் அரை மணி அங்கே உட்கார்ந்ததில்லை.

“என்ன, பெரியம்மா! நான் என்ன செய்து விட்டேன்! எப்பொழுது பார்த்தாலும் பின்னாலேயே சுற்றிச் சுற்றி வந்து இம்சை செய்கிறாயே!” என்று நான் ஒரு நாள் வாய்விட்டுக் கேட்டு விட்டேன்.

“எப்பொழுது பார்த்தாலுமா!” என்று கேட்டு விட்டுச் சிரித்துக் கொண்டு போய் விட்டாள் பெரியம்மா. அது ஒரு வழக்கம் அவளுக்கு. என்ன சொன்னாலும் பொருட் படுத்தாதவள் போல் சிரித்து மழுப்பி விடுவாள். இல்லாவிட்டால் அவள் இந்த வீட்டிலே அதிகாரம் செய்து கொண்டு கொலு வீற்றிருக்க முடியுமா! அவள் சிரிப்பு என் கோபத்தை மீண்டும் கிண்டிவிட்டது.

“இல்லாமல் என்னவாம்! காலையில் எழுந்தால் படுக்கும் வரையில் உன் தொல்லைதான் பெரிதாகப் போய்விட்டது!” என்று நான் அலுத்துக் கொண்டேன்.

“எப்பொழுது பார்த்தாலும் உனக்குத் தொல்லை கொடுக்கிறேனாக்கும்! ஹூம். உங்கள் அப்பாவை உனக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைக்கச் சொல். என் தொல்லை நீங்கி விடும்.”

அவள் பேச்சு என்னைச் சிறிது அடக்கியது. நானும் யோசித்துப் பார்த்தேன். எனக்கும் ஒரு கல்யாணமாகி ஒரு கணவனின் கையைப் பிடித்தால் பிறகு இவர்கள் கட்டுப்பாட்டுக்கு அடங்க வேண்டாம் அல்லவா! நான் என் புடவைத் தலைப்பை வீசித் தோளின்மேல் போட்டுக் கொண்டு, தலைப்பின் ஒரு மூலையைப் பல்லில் கடித்துக் கொண்டு தலை நிமிர்ந்து சினிமாப் பாட்டொன்றை முனகிக் கொண்டே வாசல் அறைக்குப் போனேன்.

“எச்சில் பண்ணாதே, அம்மா. உனக்கு வயசாகி விட்டது, பார்” என்று பெரியம்மா நயமாகச் சொல்லவும் எனக்குப் பிடிவாதம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. நான் நகத்தைக் கடித்துக் கொண்டே, ஓரக் கண்ணால் பெரியம்மாவைப் பார்த்தேன். அவள் பார்த்தும் பாராதது போல உள்ளே போய்விட்டாள்.

நான் சென்று என் அறையில் உட்கார்ந்து புத்தகத்தை எடுத்தேன். என் சின்னம்மா வந்தாள்.

“அவள்தான் நாள் முழுதும் ஏதோ சொல்லி விரட்டிக் கொண்டே இருக்கிறாள் என்றால், நீயும் என் அம்மா அதையே செய்கிறாய்! எச்சில் செய்வது அழகில்லை. நாகரிகமுமில்லை. சுகாதாரமுமில்லை. நீ படிக்கிற பெண். இது தெரிய வேண்டாமா உனக்கு!” என்றாள் சின்னம்மா.

அவள் என்னைவிட ஐந்து வயதுதான் பெரியவள். இதற்கே அவள் என்னைவிட ஐம்பது வயது மூத்தவள் போல் நடந்துகொள்வாள். என் அம்மா எவ்வளவோ சிறியவள் போல் விளையாடுவாள். இவள் அதற்கு நேர்மாறு. நான் முந்தானையைத் தொங்கவிட்டுக் கொள்கிறேனும். அவள் அதற்காகத் தலைப்பை மடித்துக் கட்டுவாள். நான் திலகமிடுகிறேன் என்று தான், பெரிய குங்குமம் இட்டுக் கொள்வாள். இதுபற்றிக் காரணம் யாராவது கேட்டால் "நன்றாக இருக்கிறது, கல்யாணத்திற்குப் பெண் நிற்கிறாள். இன்னும் இரண்டு வருஷம் போனால் நான் பாட்டியாகக் கூட ஆகி விடுவேனே!" என்று பதில் உரைப்பாள் அந்த இளம் பெண்—என் சிற்றன்னை. அதில் ஒரு பெருமை அவளுக்கு.

"குந்தளா, கோவிலுக்குப் போய் அர்ச்சனை செய்து கொண்டு வா" என்று கூறிப் பெரியம்மா ஒரு கைக் கூடையில் வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய் எல்லாவற்றையும் கொண்டு வந்து கூடத்து ஊஞ்சலில் வைத்தாள். வீட்டை விட்டு வெளியே போய்ச் சுதந்திரமாகச் சுற்றி விட்டு என் தோழிகளுடன் சிரித்துப் பேசி விட்டு வரலாம் என்று நினைத்ததும் எனக்கு மிகவும் சந்தோஷமாக ஆகிவிட்டது. முகத்தில் மாவு பூசி, புதிய விதமாக நெற்றிக்குத் திலகமிட்டு, செவிகளில் முத்துக் காதணிகள் அணிந்து, வெண்பட்டுப் புடவை உடுத்தி, நான் கோவிலுக்குப் போகத் தயாரானேன். என் பச்சை ரவிக்கையில் இருக்கும் ஜரிகைக் கொட்டடிகளும், நடு முதுகில் அலங்காரப் பித்தான்கள் வைத்துத் தைத்திருக்கும் பாணியும் தெரிவதற்காக முந்தானையை அழகாகக் கொசுவித் தோளின் ஒரு புறத்தில் ஒட்ட வைத்துக் கொண்டு கிளம்பினேன். பெரியம்மா அப்பொழுதுதான் ஏதோ வேலையாக முன் கட்டிற்கு வந்தாள். என்னைக் கண்டதும் அவள் அப்படியே நின்று விட்டாள்.



"நன்......றாக இருக்கிறது! கோவிலுக்குப் போக இதென்ன வேஷம், என்ன அலங்காரம்! குலுக்கென்ன, மினுக்கென்ன! உனக்கு எத்தனை நாட்கள் சொல்லியிருக்கிறேன்! அங்கே நாலு பேர் வருகிற இடம். ஒருவர் கண்போல் ஒருவருக்கு இராது. ஒருவர் மனம்போல் ஒருவருக்கு இராது. அங்கே தனியாகப் போகிற பெண் இப்படியா சினிமாக்காரிபோல அலங்காரம் பண்ணிக் கொண்டு கிளம்புவது! பெண் பார்க்க யாரோ அங்கே தயாராய்க் காத்துக் கொண்டு இருக்கிறாப் போல ஜொலித்து ஜொலித்து நடையைப் பார்! உள்ளே போய் முதலிலே அந்த ரவிக்கையைக் கழற்றி வை. சாதாரணத் தோய்த்த புடவை உடுத்திக் கொண்டு போ. இல்லாவிட்டால் போக வேண்டாம். இன்னார் வீட்டுப் பெண்ணும். அவள் பதவிசாக, இருந்த இடம் தெரியாமல் வந்து விட்டுப் போனாளாம் என்று பெயர் எடுப்பார்களா, நடனமாடப் போகிறவளைப்போல் அலங்காரம் பண்ணிக் கொண்டு போவாளா! வீட்டில் இருக்கும்போது ஒரு நல்ல புடவை உடுத்திக் கொள் என்றால் உனக்கு வலிக்கிறது. ஊரார் கண்களிலே படுகிறதற்கு......"

பெரியம்மா என்னைப் பிடித்து என் அறைப் பக்கமாக மெதுவாக உந்தித் தள்ளினாள். நான் தட்டாமாலை ஆடுவதுபோல் ஒரு தடவை சுழன்று அங்கேயே நின்றேன்.

"போதும், அத்தோடு நிறுத்துங்கள்! நானும் தான் பொறுத்துக்கொண்டே பார்க்கிறேன். அந்தக் குழந்தையை ஏன் வதைத்த வண்ணமாக இருக்கிறீர்கள்! பெற்ற தாய் இருந்தால் அப்படிச் சொல்லுவீர்களா!" என்று எங்கிருந்தோ சீறிக் கொண்டே ஓடி வந்தாள் சின்னம்மா.

"போதுமடி உன் சமர்த்து. பெற்றவள் இருந்தால் மட்டும் என்ன செய்து விடுவாளாம்! அவள் பெற்றாளே தவிர நான்தானே இவளை வளர்த்தேன்! பேசாமல் இரு. யார் என்ன சொல்லி விட்டார்கள்! நீதான் இருக்கிறாயே தாயார் இடத்தில் — நான் 'இல்லை' என்றேனா!" என்றாள் பெரியம்மா.

"ஆமாம். ஆமாம். என்னை நீங்கள் இடித்து ஒன்றும் காட்ட வேண்டாம். ஆயிரம் தடவை சொன்னாலும் நான் அவள் தாயார்தான். அவளுடைய சுக துக்கத்திற்குப் பாடுபடுபவள்தான். என்றைக்கு இருந்தாலும் நீங்கள் உங்கள் பிள்ளையிடம் போக வேண்டியவர்தானே!"

"சரி, சரி. நீயே உன் பெண்ணை அழகாக வளர்த்துக் கொள். நானா வேண்டாம் என்கிறேன்! நல்லதற்குத்தான் சொல்வார்கள் உற்றார். கெட்டு விடச் சொல்ல மாட்டேன் நான். நானே கல்யாணத்திற்கு நிற்கும் பெண் இந்தமாதிரி கண்ணைப் பறிக்கிற அலங்காரம் செய்து கொண்டு வெளியே தனியாகப் போவது உசிதமா என்று நீயே யோசித்துப் பார்த்துச் சொல்." என்று கூறிவிட்டு என் பெரியம்மா உள்ளே போய் விட்டாள்.

இந்தப் பேச்செல்லாம் நடந்த பிறகு என் ஆடை அலங்காரத்தில் சலிப்புத் தட்டி விட்டது. பேசாமல் என் அறைக்குச் சென்று ஜன்னலில் உட்கார்ந்து கொண்டேன். என் கண்களில் நீர் ததும்பிற்று. மனத்தில் கசப்பு மேலோங்கியது. கன்னங்களில் நீர் வழிய நான் தெருவைப் பார்த்து

உட்கார்ந்துகொண் டிருந்தேன். எதிர் வீட்டில் என் தோழிகள் சீதாவும் கீதாவும் வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு ஏதோ பேசிப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் ரகசியத்தை நானும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று என் உள்ளத்தில் அவாவும் ஏக்கமும் குடி கொண்டன. அப்பொழுது அப்பா வெளியிலிருந்து உள்ளே வந்தார். நான் உட்கார்ந்திருந்த ஜன்னலைத் தாண்டும்போது என் முகத்தைப் பார்த்து விட்டு அவர் நெற்றி சுருக்க மிட்டது. நான் எழுந்து கூடத்திற்கு வந்து விட்டேன்.

முற்றத்தில் இரண்டு கால்களையும் விட்டுக் கொண்டு, மோவாயை ஒரு கையால் தாங்கியபடி எங்கோ தியானமாக உட்கார்ந்திருந்தாள் என் சின்னம்மா.

அப்பா அவளைப் பார்த்தார். என்னைப் பார்த்தார். எனக்கு ஏனோ பயமாக இருந்தது. ஆகையால் நான் கவனியாதவள் போல் அவருக்குக் கை கால் அலம்பச் செம்பில் தண்ணீர் எடுத்து வைத்து விட்டு என் அறைக்குள் விரைந்தேன்.

"மன்னி எங்கே!" என்று அப்பா கேட்டவுடன் தான் சின்னம்மா தன் சிந்தனை கலைந்து எழுந்தாள். அவள் கண்கள் கலங்கி யிருந்தன.

"அவள் எங்கே போனாளோ, யார் கண்டது!" என்று அசட்டையாகப்பதிலளித்தாள் சின்னம்மா.

"என்ன வந்துவிட்டது உங்களுக் கெல்லாம்!" என்று கேட்டு விட்டு "மன்னி, மன்னி!" என்று அழைத்தார் அப்பா.

அப்போதுதான் பெரியம்மா கையில் காப்பியுடன் சாவதானமாக நடந்து வந்தாள்.

"இவர்களுக்கு என்ன வந்துவிட்டது இன்றைக்கு! பெண் என்னவோ வாசல் ஜன்னலில் உட்கார்ந்து கண்ணீர் வடித்துத் தெருவில் நடக்கும் மனிதர்களின் அநுதாபத்தைக் கொக்கி போட்டு இழுக்கிறாள். இவள்—சின்னம்மாக்காரி என்னவோ உலகமே அழிந்து அவள் தலைமேலேயே விழுந்து விட்டது போல் உட்கார்ந்திருக்கிறாள்! நீ இருந்துமா இப்படிச் சச்சரவுகள் வர விட்டாய், மன்னி!" என்று சலுகையுடன் அதட்டிக் கேட்டார் அப்பா.

"நீ நினைக்கிறபடி ஒன்றும் இல்லையே, அப்பா" என்று மெதுவாகக் கூறித் தன் வழக்கமான சிரிப்பைச் சிரித்தாள் பெரியம்மா. பிறகு எங்கள் இருவரையும் தன்னைப் போலவே போலி மகிழ்ச்சி காட்டும்படி சைகை காட்டினாள். நான் முகத்தைத் தோளில் இடித்துக் கொண்டு என் அறைக்குத் திரும்பி வந்துவிட்டேன். சின்னம்மா கல்லை சினத்தில் இருப்பதற்கு அடையாளமாக முகத்தை மிகக் கடுமையாக வைத்துக் கொண்டு எழுந்து அப்பால் போய்விட்டாள்.

அப்பா எங்கள் இருவரையும் பார்த்தார். பெரியம்மாவைப் பார்த்தார். "என்ன நடந்தது! சொல்லுங்கள்!" என்று இடிக் குரலில் கேட்டார்.

பெரியம்மா முகம் சலிப்பிலும் சப்பிட்டுத் தென்பட்டது. "என்னவோ, அப்பா! ஒன்றும் பிரமாதம் நடந்து விடவில்லை. உன் பெண்ணைப் பகட்டாக அலங்காரம் பண்ணிக்கொண்டு தனியாகக் கோவிலுக்குப் போகக்கூடாது என்றேன். பெற்ற தாய் இல்லையென்று நான் உன் பெண்ணைப் படாத பாடு படுத்தி, சொல்லாத சொல் சொல்லி விட்டேன் என்று பெற்ற தாய்க்குப் பதிலாக வந்திருக்கும் உன் பெண்டாட்டி சொல்கிறாள். இரண்டுமாக நான் ஏதோ விபரீதமாகப் பேசி விட்டது போல் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறதுகள், அசட்டுப் பெண்கள். நீதான் ஒரு மாப்பிள்ளையைத் தேடி, சீக்கிரமாக இவளைப் பிடித்துக் கொடுத்து விடேன். நான் கவலையற்று வடக்கே போய் விடுவேன்" என்றாள் பெரியம்மா, சிரிப்பு, சலிப்பு, சந்தோஷம், துக்கம் எல்லாம் கலந்த குரலில்.

அப்பா பல்லை நற நற வென்று கடித்தார். தலையில் ஓங்கி நான்கு அடி அடித்துக் கொண்டார். நான் ஏனோ அவரைக் கண்டு ஏளனமாக உதட்டைப் பிதுக்கினேன் அதை அவர் பார்த்து விட்டார். என்னை நெருங்கி வந்து கன்னத்தில் பளார், பளார் என்று இரண்டு வைத்தார். நான் எதிர்பாராத இந்தத் தாக்குதலில் குன்றி, சுருண்டு கீழே விழுந்தேன். சின்னம்மா ஆவேசம் கொண்டவள் போல் துள்ளி எழுந்து வந்தாள்.

"குழந்தையை ஏன் அடிக்கிறீர்கள்! அவள் என்ன தப்பு செய்துவிட்டாள்! வேண்டாதவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டு விட்டுக் குழந்தையை வதைப்பதா! யாராவது சிரிக்கப் போகிறார்கள்!" என்றாள் சின்னம்மா.



"நான் வேண்டாதவளாகி விட்டேன், அப்பா. நாளைக்கே நீ என் பிள்ளை குமாருவுக்குக் கடிதம் எழுதிப் போட்டு விடு. நான் போகிறேன். இந்தப் பெண் கல்யாணத்தை முடித்து விட்டுப் போகலாம் என்று சபலப்பட்டுக் கொண்டு இருந்து விட்டேன். இவளும் சின்னவளாயிற்றே — அநுபவம் போதாதே — என்றுதான் நான் இங்கு இருந்து விட்டேன். உன் குடும்பத்தில் கஷ்டத்தை உண்டாக்க நான் விரும்பவில்லை, அப்பா" என்று பெரியம்மாவும் வழக்கமில்லாத ஆக்ரோஷத்துடன் கூறினாள்.

"சரி, சரி. இந்தப் பீடைகளுடன் சேர்ந்து, உன் மூளைகூடக் குழம்பிவிட்டதா, மன்னி! என் வாழ்நாளில் என் வீட்டில் இப்படி நடக்கும் என்று நான் நினைக்கவில்லை. என் தலைவிதி!" என்று தகப்பனார் நொந்துகொண்டு வெளியே போனார்.

சின்னம்மா பெரியம்மாவைச் சுட்டு விடுபவள் போல் பார்த்தாள். "எனக்காக—என் அறியாத்தனத்தைக் காப்பாற்றுவதற்காக, என்னைக் கௌரவிப்பதற்காக என்று சொல்லிவிட்டு, இங்கு இருந்து அதிகாரம் பண்ண வேண்டியதில்லை. நீங்கள் போகலாம்" என்றாள் அவள்.

பெரியம்மா பேசாமல் உள்ளே போய்விட்டாள். நான் என் அறைக்குள் போய்ப் படுத்துக் கொண்டேன். அன்று இரவு ஒன்பது மணியாகியும் என் தகப்பனார் வீடு திரும்பவில்லை. அப்பொழுது எல்லோருக்கும் கவலையாகவே இருந்தது. என் பெரியம்மா வாசலில் உட்கார்ந்து கொண்டு தெருவையே நோக்கிக் கொண்டு ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தாள்.

நான் உறங்கி விட்டேன். அப்பா எப்பொழுது வந்தார், என்ன நடந்தது என்பது ஒன்றும் எனக்குத் தெரியாது. பெரியம்மாவின் பேரில் துவேஷமும், அப்பாவின் பேரில் கோபமும் முதல் நாள் சச்சரவினால் ஏற்பட்ட வெட்கமும் என்னைப் பலவாறு துன்புறுத்தின. நான் தூங்கிய முகத்துடனே எழுந்து வந்தேன். அன்று யார் முகத்திலும் தெளிவு என்பது இல்லாமல் போய்விட்டது. வீட்டில் அசாதாரண மௌனம் குடிகொண்டது. அப்படியே பிற்பகல் வரை சென்று விட்டது.

பிற்பகல் தபாலில் ஒரு கடிதம் வந்தது. அதுதான் பரபரப்பையும் பழைய கலகலப்பையும் உண்டுபண்ணிற்று. யாரோ என்னைப் 'பெண் பார்க்க' வருவதாகச் செய்தி வந்திருந்தது. மாப்பிள்ளை வீட்டினர் இன்னமும் இரண்டு மணி நேரத்தில் வரப்போகிறார்கள் என்று தெரிந்ததும் எல்லோரும் புதியதோர் உற்சாகம் பெற்று வேலை செய்தனர். என் பெரியம்மாவின் வாடிய முகம் புத்தொளி பெற்றது. அவள் பழைய சுச்சரிப்பைத் தொடங்கியதே அவளுடைய மன நிலை பழையபடி ஆகிவிட்டது, முன்னாள் சம்பவத்தை அவள் அறவே மறந்துவிட்டாள் என்று தெரிவித்தது. எனக்குத் தலை பின்னி விடுவேன் என்றாள். எந்தப் புடவை உடுத்த வேண்டுமென்று ஆக்ஞாபித்தாள். முதல் நாள் கோவிலுக்குப் போகும்போது எந்த அலங்காரத்தை வேண்டாமென்று கோபித்துக் கொண்டாளோ, அதே அலங்காரத்தை இப்பொழுது செய்தே தீரவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். எனக்கு மட்டும் உற்சாகம் பிறக்கவில்லை. இன்று வருகிறவர்களுக்கு என்னைப் பிடித்து, மணந்து கொண்டு இந்த வீட்டையும் இந்த அம்மைமார்களின் தொல்லையையும் விட்டு அழைத்துப் போய்விட வேண்டும் என்று நான் கடவுளைப் பிரார்த்தித்தவாறு இருந்தேன்.

குறித்த நேரத்தில் அவர்கள் வந்தனர். மாப்பிள்ளையின் அழகையும் கம்பீரத்தையும் கண்டதும் என் உள்ளம் பூரித்தது. என் முகத்தில் அக்கணமே கல்யாணக் களை பரவிக் கொண்டது. மாமியார், நாத்தனாராக வரப்போகிறவர்களை ஒரு முறை கண்ணெடுத்துப் பார்த்தேன். பரீட்சையில் தேறிவிட்டேன் என்று அறிந்து கொண்டு பெருமிதம் அடைந்தேன்.

என் கல்யாண ஏற்பாடுகள் விறுவிறுப்பாக நடந்தன. திருமண தினத்தன்று என் மனம் ஆனந்தத்தின் எல்லையையே எட்டிவிட்டது. மாலை கச்சேரி சமயம், என் கணவர் மெதுவாக என் செவியில் படும்படி, தம்முடன் உடனே வர வேண்டும் என்று என்னை அழைத்தபோது என் செவிகளில் தேன் பாய்ந்தது.

பெரியம்மாவுக்கும் மற்றவர்களுக்கும் என்னை அவ்வளவு சீக்கிரம் அனுப்புவதில் இஷ்டமில்லை.

"குழந்தை, என் இஷ்டம் பூர்த்தியாகி விட்டது. இனி நிம்மதியாக உன் அண்ணாவிடம் போய் விடுவேன்" என்று கூறிக் கண்ணீர் உகுத்தாள் பெரியம்மா.

என் மனம் கல்லாக நின்றது. அவளை விட்டுப் பிரிய வேண்டுமே என்று எனக்குச் சிறிதும் தோன்றவில்லை. அதைவிட, சுதந்திரம் பெற்று விட்டோம் என்ற மகிழ்ச்சியே மேலோங்கியது.

புக்ககத்தில் எல்லோரும் என்னிடம் சில நாட்கள் வரை எவ்வளவோ அன்பாக இருந்தனர். வீட்டின் மாட்டுப் பெண் என்ற பதவி எனக்குப் பிடித்தது. என் நடையிலும் பேச்சிலும் அதிகாரம் ஒலித்தது. என் இஷ்டம் போல் அலங்கரித்துக் கொண்டேன். பெரியம்மாவின் நச்சரிப்பு என் பிராணனை எடுக்கவில்லை.

ஒரு நாள் நான் கூடத்தைத் தாண்டி முன் பக்கமிருந்த எங்கள் படுக்கை யறைக்குச் சென்று கொண்டிருந்தேன். முந்தானையை அழகாகக் கொசுவி முதுகைப் போர்த்தாமல் கை வழியாக முன் பக்கம் கொண்டு வந்து கையின் மீது புரள விட்டுக் கொண்டு நிமிர்ந்த நடையுடன் சினிமாப் பாட்டு ஒன்றை முனகிக்கொண்டே போய்க் கொண்டிருந்தேன். கூடத்தை அடுத்த தாழ்வாரத்தில் என் மாமியார், நாத்தனார் மற்றும் சிநேகிதர்கள் சிலர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நான் அப்பால் சென்றவுடனே 'கொல்' என்ற சிரிப்பு கேட்டது. அது என்னைக் குறித்துத்தான் இருக்கும் என்று தோன்றவும் நான் கதவின் மறைவில் நின்று கவனித்தேன்.

“இதே நாடகம்தான்! பொழுது விடிந்தால், பொழுது போனால், சினிமாக்காரி மாதிரி அலங்காரம், மினுக்கு, தளுக்கு. அடக்கம், நாணம் என்பது அவள் இருக்கும் ஊரிலேயே இல்லை. நம் தலைவிதி. அவன் தன் தங்கைகளை அதட்டி அதட்டிக் கொல்லுவான். அவனுக்கு இந்தப் பெண்டாட்டி வந்து வாய்த்திருக்கிறாள். தாயில்லாத பெண்ணைச் செய்து கொண்டால் வேறு எப்படி இருக்கும்! நம் தலைவிதி” என்று என் மாமியார் கூறிக் கொண்டிருந்தாள். வந்தவர்கள் சூள் கொட்டி விட்டு ஏதோ சொன்னார்கள். அது மட்டும் என் செவியில் விழவில்லை. ஆனால் “பெரியம்மாகூட” என்று மட்டும் கேட்டது.

‘ஓகோ, சரிதான். இந்தப் பெரியம்மாவின் வேலைதான் இது. அங்கே வருத்திக் குலைத்ததும் இல்லாமல் இங்கும் நம் பெயரை மாசுபடுத்த வந்து விட்டாள். மாமியாரோடு குசுகுசுவென்று பேசினதெல்லாம் இதுதானா! அடி, பாதகி!' என்று நான் நினைத்துக் கொண்டேன். என் மனத்தில் வேதனை மிகுந்தது.

அன்று முதல் நான் மற்றவர்களுடன் கலகலப்பாகப் பேசுவதை விட்டேன். வேலை செய்த நேரம் தவிர என் அறையிலேயே அடைந்து கிடந்தேன். ஒரு நாள் பொழுது போகாததால் ஜன்னலில் உட்கார்ந்து கொண்டு தெரு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். என் கணவர் வந்தார். நான் எழுந்து அவர் கழற்றிய உடைகளை வாங்கத் தயாராக நின்றேன். அவர் முகம் எப்பொழுதும் போல் மலர்ந்திராமல் கடு கடுப்பாக இருந்தது.

“ஜன்னலில் என்ன உட்காரல்! அலங்காரம் பண்ணிக் கொண்டு கொலு வீற்றிருப்பது......”

“நான் என்ன தப்பு செய்தேன் என்று கோபிக்கிறீர்கள்! எல்லா வீட்டிலும் எல்லோரும் உட்காருகிறார்கள்” என்று நான் இடைமறித்துக் கூறினேன்.

“ஓகோ, அடக்கமற்ற தோற்றத்துடன் இருந்தது பெண்மைத்தனம் என்று நினைத்தேன். பேச்சும் வளர்கிறதா! சட், வாயை மூடு! ஊரில் பலபேர் பலவிதமாக இருப்பார்கள். என் மனைவி அப்படியிருக்க நான் விரும்பவில்லை. தெரிகிறதா! அதற்கு இஷ்டமிருந்தால் இங்கே இரு. இல்லாவிட்டால் உன் பிறந்த வீட்டைப் பார்த்து நட. தெரிகிறதா!” என்று அவர் மிக்க கோபத்துடன்



கூறியதும், நான் பயந்து, அவரை நிமிர்ந்து பார்க்க முயன்றேன். தலையை உயர்த்திய போது என் நாத்திமார் இருவரும், மாமியாரும் நின்று வேடிக்கை பார்த்து ஏளனமாகச் சிரிப்பது தெரிந்தது. என் உடல் வெட்கத்தால் குன்றியது. என் கணவர் வெளியே போய் விட்டார். நான் சிலைபோல் நின்று கொண்டிருந்தேன்.

“பார்த்தாயா, தங்கைகளை அடக்கிக்கொண்டே இருந்தாயே!” என்று அவர்கள் கூறிச் சிரித்ததும், அதைத் தொடர்ந்து அவர் ஏதோ முணுமுணுத்து விட்டு வாசற் கதவைப் ‘படார்’ என்று இடி முழக்கம்போல் சாத்தியதும் கேட்டன. பிறகு நாத்தியும் மாமியாரும் அப்பால் அகன்றதும் கேட்டது.

நான் ஓடிப்போய்ப் படுக்கையில் குப்புற விழுந்து தேம்பித் தேம்பி அழுதேன். அழுது கொண்டே இருந்தேன். இரவு வேலைகள் தம்பாட்டில் நடந்து வந்தன. கணவர் வந்ததும் சாப்பாடு முடிந்தது. நான் தலை நிமிரவில்லை. உடல் அசைக்கவில்லை. என் நாத்தி என்னை உணவருந்த அழைத்தாள். நான் தூங்குவதுபோல் பாசாங்கு செய்தேன். அப்படியே உறங்கி விட்டிருக்க வேண்டும்.

இரவு வெகுநேரம் கழித்து என் கணவர் கை என்மீது அன்போடு, பரிவோடு பட்டது. விழித்துக் கொண்டேன்.

“என்மீது உனக்குக் கோபமா!” என்று அவர் கேட்டதும், மறந்திருந்த என் துயரம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

“நான் செய்தது தவறானால் என்னை மன்னித்து விடுங்கள். நான் ஏதோ விளையாட்டுத்தனமாக உட்கார்ந்து விட்டேன். இனிமேல் அப்படிச் செய்யமாட்டேன். நீங்கள்தான் எனக்கு எல்லாவற்றையும் சொல்ல வேண்டும். எனக்கு யார் இருக்கிறார்கள்! அவர்கள் கூறுவது போல் தாயற்றவள் நான். அங்கே பெரியம்மா ஒருத்தி இப்படித்தான் என்னை வருத்துவாள். அவள் கோள் சொல்லித்தான் உங்கள் தாயாருக்கும் என் மீது வெறுப்பு தட்டியிருக்கிறது” என்று நான்



என்னையும் மறந்து என் கணவரின் காலில் மிகவும் தைரியம் கொண்டு பேசினேன்.

அவர் என் நிலைக்கு மிகவும் பச்சாதாபப்பட்டார். "இனி நீ பிறந்தகமே போகவேண்டாம். இங்கேயே இரு. உன் கஷ்டம் எனக்குத் தெரியாது. தெரிந்த பிறகு இனியும் என் மனைவியைப் பெரியம்மைகளும் சிற்றன்னைகளும் வாட்டுவதற்கு இடம் கொடுப்பேனா! என் தாயாரும் தங்கைகளும் இனி வாயாடமாட்டார்கள், பார்" என்று அவர் ஆறுதல் கூறியதும் என் மனம் தேவலோகத்தையே எட்டியது போல் பேரானந்தம் கொண்டது.

"நீங்கள்தான் எனக்கு உலகில் எல்லாம்!" என்று மீண்டும் ஒரு முறை கூறிவிட்டு நான் நிம்மதியாக உறங்கிவிட்டேன்.

என் கணவர் தம் வாக்குப்படியே என்னைப் பிறந்தகம் அனுப்பவே யில்லை. என் தகப்பனார் பலமுறை கடிதம் போட்டார், வந்து அழைத்தார். ஆனால் ஏதோ சாக்குச் சொல்லி என்னை என் கணவர் நிறுத்திவிட்டார். பெரியம்மா ஒரு முறை வந்து பார்த்துவிட்டுப் போனாள். ஆனால் என் மாமியார் முதற் கொண்டு என்வரையில் யாரும் அவளிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. அவள் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் திரும்பிப் போய்விட்டாள்.

மாதங்கள் சென்றன. அப்பாவிடமிருந்து கடிதமும் குறைவாகவே வரத் தொடங்கியது. ஒரு மாத காலமாகக் கடிதமே இல்லை. என் மனம் தவித்தது. பிறகு தீபாவளிக்கு மூன் வாரம் இருக்கும்போது ஒரு நாள் அப்பாவும் சின்னம்மாவும் வந்திறங்கினர். என் மனம் அளவுகடந்த சந்தோஷத்தால் துள்ளிற்று.

"ஏன், அப்பா! நீங்கள் கடிதமே போடவில்லையே!" என்று நான் கண்களில் நீர் ததும்பக் கேட்டேன்.

"நீயும் போடவில்லையே, அம்மா! அதுதான் நாங்களே புறப்பட்டு வந்தோம். தலை தீபாவளியாயிற்றே! நேரில் அழைத்து விட்டு, உன்னையும் கையோடு கூட்டிக் கொண்டு போகலாம் என்று நினைத்து வந்தோம்" என்றார் அப்பா.

"அங்கே எங்கே அப்பா அனுப்பப் போகிறார்கள்!" என்று கூறியபோது என் குரலில் ஏக்கம் தொனித்தது எனக்கே வியப்பா யிருந்தது.

"ஏன், அம்மா!" என்று சாந்தமாகவே கேட்டார் தகப்பனார்.

"எல்லாம் பெரியம்மா செய்த வேலை" என்று தொடங்கி நான் பிறந்தகத்தில் அவளிடம் பட்ட தொல்லையையும், அதனால் பிறகு புக்ககத்தில் பட்ட துயரத்தையும் விவரித்தேன்.

"பெற்ற தாய் இருந்தால் அப்படிச் செய்திருக்க மாட்டாள் என்று உன் அபிப்பிராயமா? ஹூம்!" என்று கேட்டார் அப்பா அமைதியாக.

"சந்தேகமில்லாமல்! உங்கள் மன்னி குழந்தையைப் படுத்தியதைக் கண்டவள் நான் சொல்லுகிறேன்!" என்று சின்னம்மாவும் என் பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தாள். அப்பொழுது அப்பா எங்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு ஒரு தினுசாகச் சிரித்துக் கொண்டார்.

"அவ்வளவுதான், நீங்கள் மன்னியை அறிந்து கொண்ட லட்சணம்!" என்றார் அவர்.

அன்று அப்பா எங்களைத் தலை தீபாவளிக்காக அழைத்தபோது நான் கூறியபடியே என் கணவர் போக மறுத்து விட்டார்.

"பெரியம்மா இப்பொழுது வீட்டில் இல்லை. அவள் பின்னையிடம் போய் விட்டாள்" என்று சின்னம்மா கூறினள். அதை நான் கூறின பிறகே என் கணவர் தீபாவளிக்குப் போகச் சம்மதித்தார்.

நாங்கள் எல்லோரும் பிறகு வருவதாகக் கூறவும் அப்பாவும் சின்னம்மாவும் ஊருக்குப் போய் விட்டார்கள்.

நாங்கள் தீபாவளிக்குப் போய் இறங்கினோம். சின்னம்மா எங்களை வாசலில் வந்து வரவேற்க வில்லை என்று என் மாமியாருக்குக் குறை வந்து விட்டது. நாங்கள் வீட்டினுள் நுழைந்து கூடத்திற்குச் சென்ற பிறகுதான் சின்னம்மா ஓடோடியும் வந்து எங்களை உபசரித்தாள்.

"வாருங்கள், வாருங்கள் !"

"நாங்கள் நான்கு மணி வண்டிக்கு வருவதாக எழுதி யிருந்தோமே !" என்று என் மாமியார் இடக்காகப் பேசினள்.

"தெரியுமே—வண்டி அனுப்பி யிருந்தோமே ! இவள் அப்பாகூட வந்தாரே !" என்று வெகுளியாகக் கேட்டாள் சின்னம்மா. நான் ஜாடை காட்டவும் பேச்சை நிறுத்திக் கொண்டாள். பிறகு எங்களை உட்காரச் சொல்லி விட்டு உள்ளே சென்று காப்பி பலகாரங்கள் கொண்டு வரச் சொல்ல எழுந்தாள். நானும் அவளுடன் உள்ளே போகப் போனேன்.

"அடியே, நீ ஒன்றும் அங்கே போய் 'என் மாமியாருக்கு இது வேண்டும், அது வேண்டும்' என்று சொல்லி எனக்குக் கெட்ட பெயர் வாங்கிக் கொடுக்க வேண்டாம். வருகிறபோது கிடைத்த உபசார பலமே போதும் !" என்று எச்சரித்து என்னை உட்கார வைத்து விட்டார் என் மாமியார்

நாங்கள் இருந்த இரண்டு நாட்களும் சின்னம்மா எவ்வளவோ செய்தும், தெரியாத்தனத்தினலும், அனுபவக் குறைவினலும் செய்த சிறு சிறு தப்புகளை என் மாமியார் மலையாகப் பாவித்துக் கடும் கோபத்துடன் ஊர் திரும்பினள்.

"தாயில்லாப் பெண்ணைக் கட்டிக் கொண்டால் இப்படித்தான். கல்யாணத்தின்போது என்னவோ பிரமாதமாக இருந்ததே உபசரணை என்று பார்த்தால், அது வெறும் மூதல் பகட்டு என்று இப்பொழுதல்லவா தெரிகிறது ! நம் கழுத்தில் இந்தப் பெண்ணைக் கட்டித் துரத்தி விடச் செய்த சூழ்ச்சி !" என்று என் மாமியார் கூறிக்கொண்டே இருந்தார். அப்பொழுது எல்லாம் பெரியம்மாவின் ஏற்பாடு என்று எனக்கு ஞாபகம் வந்தது.

"வேண்டாம் என்றல் கேட்கவில்லை" என்று என் கணவர் வேறு என்னைச் சதா கோபித்துக் கொண்டே இருந்தார். இனி பிறந்தகத்துப் பேச்சு எடுக்க வழியில்லை என்று நான் அறிந்து கொண்டேன். இவர்கள் செய்த அட்டகாசத்தில் அப்பாவுக்கும் கொஞ்சம் மனவருத்தம்.

"மன்னி இருந்திருந்தால் இப்படியெல்லாம் நடந்தே யிராது. அம்மாவும் பெண்ணும் அவளை வேண்டாம் என்று ஒதுக்கி விட்டார்கள். சிரமப் படுங்கள் !" என்று வேறு அவர் கறுவினர்.

**நா**ன் புக்ககம் வந்து ஆறுமாதம் ஆகி விட்டது. அமைதியாக வாழ்க்கை நடந்துவந்தது. ஆனல் விதியின் கொடுமைதானே என்னவோ, எனக்கு மசக்கைத் தொந்தரவு ஆரம்பித்தது.

சந்தோஷமாக இருந்து, நாலும் கேட்டு, புசித்து, பூண்டு ஆனந்திக்க வேண்டிய காலம் வந்தும் என் உள்ளத்தில் தெம்பே இல்லை. என் மாமியார் மீண்டும் 'தாயில்லாப் பெண்' என்ற பல்லவியை ராகத்தோடும் தாளத்தோடும் விஸ்தரிக்க ஆரம்பித்து விட்டாள். வேளைக்கு வயிற்றுக்குச் சாப்பிடாமல் என் உடல் களைத்தது, உள்ளம் நைந்தது. அந்தச் சமயத்தில் கடமை வழுவாமல் என் அப்பா கடிதம் எழுதிப் போட்டார். பழம், பாக்கு வெற்றிலையுடன் சின்னம்மா வந்து அழைத்தாள். மறுபடியும் பழைய பிகுவும், சச்சரவும் தொடங்கின.

நான் மீண்டும் என் கணவரிடம் மன்றாடினேன். "இங்கே இருந்தால் என்னல் வீட்டில் உள்ளவர்களுக்கு உபயோகமில்லை. கொஞ்சம் கூட வேலை செய்ய முடியவில்லை. இதமிருக்கிறதோ இல்லையோ அங்கே பேசாமல் படுத்துக் கொண்டிருக்கலாம்," என்று நான் சொல்லவும் அவர் என்னை அனுப்பினர் அரை மனத்துடன்.

நாங்கள் எங்கள் வீட்டில் கால் வைத்ததுமே, அப்பா என்னைத் தன் அறைக்குள் அவசர அவசரமாக அழைத்தார்.

"என்ன, அப்பா !" என்று கேட்டேன் நான் வியப்புடன்.

"என்னையே என் மன்னிதான் வளர்த்தாள் என்று சொல்ல வேண்டும். உன் அம்மாவிடம் அவளுக்கு அபார ஆசை. அவளுக்கும் மன்னிக்கும் ஆழ்ந்த தோழமை. அவள் உன்மீது அளவற்ற பிரேமை வைத்திருக்கிறள். நீ கர்ப்பமாக இருக்கிறய் என்று தெரிந்ததும் உடனே புறப்பட்டு வருவதாகத் தந்தி கொடுத்திருக்கிறள்......" அப்பா மிகவும் வருத்தத்தோடும் பயத்தோடும் பேசினர்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. என் கணவருக்குத் தெரிந்தால் என்ன சொல்வாரோ என்று



**"என்ன டீ பார்ட்டீங்க. கூப்பிடறவங்கதான வருங்களா? நான் தெரியாமல் சுவர் ஏறிக் குதித்து உள்ளே வந்து விட்டேன், வாங்க, போய் சாப்பிடலாம... அது சரிங்க, நீங்க எப்படி உள்ளே வந்தீங்க?"**

**"ஐயையோ! நான் எப்படி வந்தேனா? நான்தான் இந்த பார்டி கொடுக்கிறேன்!"**

---

நினைத்துக் கவலைப் பட்டுக்கொண்டே நான் அப்பால் அகன்றுவிட்டேன்.

நாட்கள் சென்றன. பிறந்தகத்திற்கு வந்து விட்டோம் என்று எனக்குச் சலுகை கொண்டாடத் தோன்றியது. குளிக்காமல் பன்னிரண்டு மணி வரையில் படுத்து உறங்கினேன். 'பசிக்கிறதே, உடனே ஒன்றும் கொடுக்க ஆளே இல்லையா!' என்று இரைந்தேன். கொடுத்ததை வேண்டாம் என்று மறுத்தேன். கொடுக்காததை ஏன் கொடுக்கவில்லை என்று கண்ணீர் சிந்தினேன். எனக்கே தெரிந்தது. ஆயினும் என் சிணுங்கலை என்னாலேயே அடக்க முடியவில்லை. ஏதோ விவரிக்கத் தெரியாத ஆதரவைக்கேட்டது என் மனம். உருவமற்ற சலுகையை நாடிற்று.

சின்னம்மாவும் தனக்குத் தெரிந்த மட்டில் ஆதரவு காட்டினாள், பணிவிடைகள் செய்தாள். ஆயினும் என்னிடமிருந்து திருப்தியைக் காண வில்லை. சலித்துவிட்டது அவளுக்கும். ஒருநாள் அப்பாவிடம் அவள் கோபமாகக் கூறிக் கொண்டிருந்தது கேட்டது.

"உங்கள் பெண்ணைத் திருப்தி செய்யப் பிரமதேவன் தான் வரவேண்டும். என்ன செய்தாலும் அவள் மனம் குளிரக்காணோம். நானும் அவளுடன் சேர்ந்து கொண்டு மன்னியை அனுப்பி விட்டேனே, முட்டாள்! அவள் தெய்வமல்லவா!" என்றாள் சின்னம்மா.

"அவள்தான் இன்னும் அரை மணியில் வந்து விடுவாளே. வண்டி போயிருக்கிறது!" என்று சாந்தமாகவே பதில் சொன்னார் அப்பா.

அதேபோல் சற்று நேரத்திற்கெல்லாம் வண்டி வந்து நின்றது. பெரியம்மா வந்து இறங்கினாள். அப்பாவும் சின்னம்மாவும் அவளை உற்சாகத்துடன் வரவேற்றனர். நான் மட்டும் ஏனோ கண்களை இறுக மூடிக்கொண்டு கூடத்திலேயே படுத்திருந்தேன்.

அவர்கள் பேச்சை யெல்லாம் கொஞ்சமும் சட்டை செய்யாமல் பெரியம்மா உள்ளே வந்தாள்.

"குழந்தை! குழந்தை எங்கே!" என்று ஆர்வத்தோடு கேட்டுக்கொண்டே வந்தாள் அவள். என் அருகில் வந்து என்னைத் தொட்டதும் நான் கண்ணைத் திறந்தேன்.

"அம்மாடி! குழந்தை!" என்று என்னைத் தழுவிக் கொண்டாள் பெரியம்மா. பக்கத்திலிருந்த மூட்டையை அவிழ்த்துக்கொண்டே பேசலானாள்.

"வடக்கேதான் எத்தனைவிதத் தித்திப்புப் பட்சணங்கள் செய்கிறார்கள்! பால்கோவா வாங்கிக் கொண்டு வந்தான் உன் அண்ணா!" என்று பேசிக்கொண்டே மூட்டையின் முடிச்சை அவிழ்க்க முடியாமல் திண்டாடினாள் அவள்.

"அதெல்லாம் கிடக்கட்டும். எனக்குப் பால் கோவாவும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம், காலை நீட்டு, உன் மடியில் படுத்துக்கொள்ள வேண்டும்போல்......"

"இருக்கிறது" என்று பூர்த்தி செய்யக்கூட முடியவில்லை என்றால். துக்கம் என் நெஞ்சை அடைத்தது. நான் பேசாமல் பெரியம்மாவின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு படுத்துக் கொண்டேன். இப்பொழுது நினைத்தால் எனக்கே வெட்கமாயிருக்கிறது. குழந்தை மாதிரி தேம்பித் தேம்பி 'ஓ' வென்று அழுது விட்டேன்.

"ஏன் அம்மா, குந்தளா! ஏன் அழுகிறாய்! கர்ப்பமாயிருக்கும் போது கண்ணீர் விட்டுக் கலங்கலாமா, அம்மா! நான் இருக்கும்போது நீ அழலாமா, அம்மா! எனக்குச் சதா உன் நினைவுதான். தினம் ஒரு தடவை உன் அண்ணாவிடம் உன்னைப் பற்றிச் சொல்லுவேன். அவன் கூடக் கேலியாகச் சொல்லுவான், "அம்மா, உன் குந்தளா இப்பொழுது வேறொருவனுக்கு உடைமை ஆகிவிட்டாள். நீ நினைத்த போதெல்லாம் அவளைப் பார்க்க முடியாது. அவள் கணவனின் உத்தரவு பெற்றுக் கொண்டுதான் அவளைப் பார்க்க முடியும்!" என்று.

இப்படிப் பெரியம்மா வழக்கம் போல் கல கலப்பாகப் பேச ஆரம்பித்ததைக் கேட்டதும் என் மனசில் இருந்த ஏக்கம் சிறிது குறைந்த மாதிரி இருந்தது.

"பார், பெரியம்மா, அங்கே அவர்கள் எல்லோரும் 'தாயில்லாப் பெண், தாயில்லாப் பெண்' என்று என்னைப் பழிக்கிறார்கள்!" என்று குழந்தை போல் நான் புகார் கூறினேன்.

"அவர்கள் கிடக்கிறார்கள். எல்லோருக்கும் ஒரு தாய். எனக்கு இரண்டு தாய்மார் என்று நீ சொல்வதுதானே!" என்றாள் பெரியம்மா.

நான் ஏதோ சொல்ல வாயெடுத்தேன். ஆனால் அதற்குள் அப்பா அங்கு வந்தார்.

"என்ன, பெரியம்மாவைக் கண்டதும் செல்லம் கொஞ்சுகிறாளோ பெண்!" என்று அப்பா கேட்டபோது அவர் குரலில் வாஞ்சை ஒரு மாற்று குறைவாக இருப்பதுபோல் பட்டது எனக்கு. வெட்கத்துடன் நான் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டேன். பழைய நினைவுகளெல்லாம் வந்து என் மனசைக் குழப்ப ஆரம்பித்தன. ஓரக்கண்ணால் சின்னம்மாவைப் பார்த்தேன். அவளும் என்னைப் போலவே தவிப்புடன் நாணிய முகத்தைச் சிரமப்பட்டு மறைக்க முயன்று கொண்டிருந்தாள். ஆனால் பெரியம்மா இதையெல்லாம் கவனித்ததாகவே தெரியவில்லை. என்னோடு உற்சாகமாக ஏதேதோ பேச ஆரம்பித்து விட்டாள்.

# கோலினாஸ்

# இயற்கையின் அற்புதப் பச்சை க்ளோரோபில் சேர்ந்தது

## ...உங்கள் பல் சுத்திகரிப்பில் இதுவரை ஏற்படாத மாபெரும் அபிவிருத்தி!

செடிகொடிகளை பசுமையுடன் வைத்திருக்கும் பொருளாகிய இயற்கையின் சிருஷ்டி க்ளோரோபில் உதவியால் நாள் முழுதும் வாய் துர்நாற்றத்தை அகற்றுங்கள்....பல் சிதைவும் சாதாரண ஈறுக்கோளாறுகளும் ஏற்படாமல் தடுங்கள்!

உங்கள் பல் பராமரிப்புக்கு இதுவரை இல்லாத முறையில் மிகப் பயன்படக்கூடிய மார்க்கம் இதுவே, சந்தேகமில்லை. க்ளோரோபில் சேர்ந்த அற்புதமான கோலினாஸ் பல் சிதைவையும் கேடான கிருமிகளையும் கேடியாகத் தாக்குவது மட்டுமின்றி, வாய் துர்நாற்றத்தையும் நாள் முழுவதிலும் ஒழித்து விடுகிறது. இதற்குக் காரணம் இந்தப் பச்சை க்ளோரோபில் தான் — தாவரங்களை பசுமையுடன் வைத்திருக்க இயற்கையால் சிருஷ்டிக்கப்பட்ட அற்புத ரசாயனப் பொருள்!

க்ளோரோபில் சேர்ந்த கோலினாஸ் விசேஷ பலனளிப்பது தவிர, சிக்கனமானதுங்கூட—சாயில்லாத பிரஷ் மீது அரை அங்குலமே போதுமானது. பச்சை அட்டைப் பெட்டியில் எல்லா கடைகளிலும் கிடைக்கும். இன்றே வாங்கி, தந்த விஞ்ஞானத்தில் இதுவரை இல்லாத இம்மகோன்னத அபிவிருத்தியின் பயனை அடையுங்கள்!

புதிய பச்சை அட்டைப் பெட்டியை கவனியுங்கள்
ஸ்டாண்டர்ட் கோலினாஸ் (மஞ்சள் லேபில்) கூட கிடைக்கும்

**2000 அமெரிக்க பல் நோயாளிகள் க்ளோரோபிலின் குணநலன்களை நிரூபிக்கின்றனர்**

நான்கு வருட ஆராய்ச்சி மற்றும் சுமார் 2000 அமெரிக்க பல் நோயாளிகளைக்கொண்டு நடத்தப்பட்ட மிக விரிவான சோதனைகள்....இவைகளின் பயனும் நிரூபணமானது என்னவெனில், க்ளோரோபிலுடன் கூடிய டென்டல் க்ரீம்:—

- வழக்கமான சகல வகை ஈறுக் கோளாறுகளையும் குறைக்கிறது.
- நாள் பூராவும் வாயில் துர்நாற்றம் ஏற்படாமல் தடுக்கிறது.
- பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்துக் கட்டுகிறது.

உங்கள் பல் டாக்டர் இச்சோதனைகளைப்பற்றி அறிவார்....அவற்றின் பலன்களையும் ஊர்ஜிதம் செய்வார்.







'கோலினாஸ்'
புன்னகையில் ஆரோக்கியம் ததும்புகிறது!

இந்தியாவில் தயாரிப்பவர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிமிடெட், பம்பாய் 1. கிளைகள்: கல்கத்தா — மதராஸ்




அன்று அந்தப் பள்ளிக்கூடத்தில் ஆண்டு விழாவை யொட்டிப் பந்தயங்கள் நடத்துவதற்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. அப்பப்பா! பந்தயங்களில் தான் எத்தனை வகைகள்! நூறு கஜ ஓட்டப் பந்தயம், இருநூறு கஜ ஓட்டப் பந்தயம், மூன்று கால் ஓட்டம், எலுமிச்சம் பழம் பொறுக்குதல், விளக்கை அணையாமல் எடுத்துக் கொண்டு ஓடி வருதல், சைக்கிளை வேகமாக ஓட்டுதல், மெதுவாக ஓட்டுதல் என்று ஒரே பந்தய மயமாக இருந்தது!

அந்தப் பள்ளிக்கூடத்துப் பழைய மாணவர்கள் சங்கத்து அங்கத்தினர்கள் பெரிய பெரிய பதவியில் இருந்தார்கள். ஒருவர் ஜில்லாக் கலெக்டர் என்றால், இன்னொருவர் ஜில்லாக் கல்வி அதிகாரி. ஒருவர் ராமத்து இலாகா மேலதிகாரி என்றால் மற்றொருவர் சர்வ கலாசாலைப் பேராசிரியர். எல்லோரும் ஆண்டு விழாவை யொட்டித் தங்கள் சொந்த ஊருக்கு வந்திருந்தார்கள்.

அவர்கள் எல்லோரும் அன்று கலாசாலையில் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அங்கிருந்த பழைய மாணவர் ஒருவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. "நாமும் பழைய மாணவர்கள் சங்கத்துச் சார்பில் ஏதாவது ஒரு பந்தயம் நடத்தினால் என்ன?" என்று கேட்டார்.

"பேஷான யோசனை!" என்று அங்கு கூடியிருந்தவர்கள் அனைவருமே ஏக காலத்தில் ஆமோதித்தார்கள்.

"ஆமாம், நாம் என்ன பந்தயம் வைக்கலாம்?" என்று கேட்டார் ஒரு உற்சாகப் பேர்வழி.

"ஓட்டப் பந்தயமே வைத்தால் போயிற்று!" என்று ஒருவர் அபிப்பிராயம் கொடுத்தார்.

"ஓட்டப் பந்தயமா? ஓடும்பொழுது புல் தடுக்கினால் முதலில் நீயே கீழே விழுந்து விடுவாய், அப்பா! ஜாக்கிரதை!" என்று எச்சரித்தார் அருகில் இருந்த அவருடைய ஆப்த நண்பர்.

"அப்படியானால் 'டக் ஆப் வார்' கயிறு இழுக்கும் பந்தயம் வைப்போமா?" என்றார்.

"நன்றாயிருக்கிறது. நம்மைக் கட்டி இழுக்கவே நாலு பேர் வேண்டும் போலிருக்கிறது. நாம் கயிறு இழுக்கவாவதடா?" என்று கடிந்து கொண்டார் ஒரு நோஞ்சல் பேர்வழி.

"சரி, அப்படியானால் ஊசியில் நூல் கோக்கும் பந்தயம் வைத்தால் என்ன?"

"உனக்கு இன்னும் வெள்ளெழுத்து வரவில்லை என்ற தைரியத்தில் பேசுகிறாயோ?" - இப்படியாக எழுந்தது ஒரு ஆட்சேபக்குரல்.

"இப்படி எதற்கெடுத்தாலும் ஆட்சேபித்தால் யார்தான் என்ன செய்ய முடியும்? ஆட்சேபிக்கிறவர்கள் தான் அழகான பந்தயம் ஒன்றைச் சொல்லட்டுமே!" என்று சலிப்புடன் வந்தது இன்னொரு குரல்.

"நமக்கோ வயதாகிறது. நான் என்ன சொல்கிறேன் என்றால்...உட்கார்ந்த இடத்தில் உட்கார்ந்த படியே ஒரு பந்தயம் வைக்க வேண்டும். அதில் அதிக தேக சிரமம் இருக்கக் கூடாது. ஆனால் அந்தப் பந்தயம் சுலபமாகவும் முடிந்து விடக் கூடாது..."

"ஏதோ சட்டத்துக்கு விளக்கம் கூறுவது போலக் கூறிக் கொண்டு போகிறாயே தவிரப் பந்தயத்தைச் சொல்லக் காணோமே!"

"சொல்வதற்குள் அவசரப்பட்டால் நான் எப்படிச் சொல்லுவது?......நாக்குக்கு ருசியான நல்ல சாப்பாடு தயார் செய்ய வேண்டியது. எல்லோருக்கும் ஒரே அளவாக வைத்துச் சாப்பிடச் சொல்ல வேண்டியது. யார் முதலில் சாப்பிடுகிறார்களோ, அவர்களுக்கு ஒரு பரிசு கொடுத்து விட வேண்டியது ......"






**மனைவி :—மல் யுத்தம் நடக்கிறதாமே, அங்கே போய்விட்டு வரக் கூடாதோ? அங்கே வர ஜனங்களைப் பற்றி ஒரு ரஷ்யக்காரர் 'உலகத்தில் எங்குமே இல்லாத ரஸிகர்கள் இங்கு கூடியிருக்கிறார்கள்' என்று போற்றி இருக்கிறாரே! நீங்களும் போயிருந்தால் கூட்டத்தோடு கூட்டமாக உங்களுக்கும் நல்ல பெயர் வந்திருக்காதா!**

---

"பேஷான யோசனை! பரிசுமட்டும் அல்ல; 'சாப்பாட்டு ராமன்' என்ற பட்டமும் கொடுத்து விடவேண்டியது!" என்று ஆமோதித்தார் நப்பாசை கொண்ட நாராயணன்.

பந்தயம் என்றால் சுலபமாக முடிந்து விட்டால், அதை அப்புறம் பந்தயம் என்று எப்படிச் சொல்ல முடியும்? கொஞ்சம் கடுமையாக இருந்தால்தானே பந்தயத்தில் ஒரு சுவாரஸ்யம் தட்டும்?

ஆகவே, அந்தச் சாப்பாட்டுப் போட்டிக்கு, வறுத்த - ஆனால் தோல் உரிக்காத வேர்க் கடலை எட்டு, முந்திரிப் பருப்பு முப்பது, உருளைக் கிழங்கு வறுவல் எண்ணி இருபது, காசி ஹல்வா, காரத்துக்குக் காரா பூந்தி, பாதாம்கீர், ஊறுகாய்க்கு மாவடு என்று ஏற்பாடு ஆகியது.

அந்தச் சாப்பாட்டுப் போட்டியைப் பார்க்க ஊர் அடைத்து வந்திருந்தது. குறிப்பிட்ட நேரத்தில் கனகச்சிதமாகப் போட்டி ஆரம்பமாகியது. ஒருவர் முந்திரிப் பருப்பை மென்று தின்றார். இன்னொருவர் காசி அல்வாவை 'அபக்'கென்று ஒரே வாயில் விழுங்கினார். வேறு ஒருவர் பாதாம் கீரை ஒரே உறிஞ்சாக உறிஞ்சினார். ருசிகண்ட நாக்கு அல்லவா? ஆகவே, அவர் அவர்கள் ருசித்து ரசித்துச் சாப்பிட்டார்கள். ஆயினும் பந்தயத்தில் ஜயிக்க வேண்டுமே என்ற எண்ணம் அவர்களிடத்திலே ஒரு பரபரப்பை உண்டு பண்ணியிருந்தது. ஆகவே, அவர்களுடைய வாயும் கையும் வெகு மும்முரமாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. சிலருக்குச் சாப்பிடும் அவசரத்தில் விழியே பிதுங்கி விடும்போலிருந்தது. பந்தயத்தில் பரபரப்பையும் பற்பலவிதமான முக பாவங்களையும் கண்ட பார்வையாளர்களுக்குச் சிரிப்புப் பீறிட்டுக் கொண்டு வந்தது.

ஆனால் வலது கோடியில் உட்கார்ந்திருந்த ஒருவர் மட்டும் சாப்பாட்டில் கைவைக்காமல் வேர்க் கடலையின் தோலை உரிப்பதில் முனைந்திருந்தார். அவர் 'மசமச'வென்று வேர்க் கடலையின் தோலை உரித்துக் கொண்டிருப்பதைக் கண்ட அனைவருக்கும் 'இந்த அஸமஞ்சம் அனாவசியமாகப் போட்டியில் ஏன் கலந்து கொண்டது?' என்றே தோன்றியது.

எல்லோரும் 'பகாலா பாத்'தில் கையை வைக்கும் பொழுதுதான் அவருக்கு வேர்க் கடலை உரித்து முடிந்தது. மற்றவர்களுக்கெல்லாம் 'பகாலா பாத்'தை முடித்து விட்டால் எட்டே எட்டு வேர்க் கடலை மட்டுந்தான் பாக்கி. அப்படியிருக்கும் பொழுது அவராவது, ஜயிப்பதாவது? ஆகவே, ஜனங்கள் 'இந்தப் பித்தை யார் போட்டியில் கலந்து கொள்ளச் சொன்னார்கள்?' என்று பேசிக் கொண்டார்கள். அப்பொழுதுதான் அந்த அதிசயம் நடந்தது.

அட! இதென்ன! தட்டில் இருந்த எல்லா ஆகாரத்தையும் இந்தப் பித்து ஒன்றாகக் கிளறிக் கொண்டு விட்டதே! நிஜமாகவே, இதற்கு ஒரு மறை கொஞ்சம் லூஸாக இருக்குமோ?

இப்படி ஜனங்கள் நினைத்துக் கொண்டிருக்கும்பொழுதே இன்னொரு அதிசயமும் அவர்களுக்காகக் காத்துக் கிடந்தது! மூன்றே கவளத்தில் தட்டில் இருந்த அத்தனை ஆகாரமும் மறைந்து விட்டது!

அப்பொழுது பந்தயத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் அத்தனை பேரும் வேர்க் கடலையைப் பூமியில் அழுத்தி தெரித்துக் கொண்டிருந்தார்கள்.

கவளத்தை விழுங்கிய அந்த 'மசமச' ஆசாமி, "நிறுத்துங்கள்! நான் ஜயித்து விட்டேன்!" என்று கூவினார்.

காரியத்தில் கண்ணாயிருந்த அனைவரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள். தட்டுக் காலியாகக் கிடந்தது! மசமசவென்று கடலையை உரித்துக் கொண்டிருந்த நீ எப்படி அதற்குள் சாப்பிட்டாய்?" என்று கேட்டார் பக்கத்தில் இருந்தவர்.

"பந்தயத்தில் வெற்றிதானே அப்பா, முக்கியம்? உங்களைப்போல் ருசித்துச் சுவைத்து ஒவ்வொன்றாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தால் பந்தயத்தில் ஜயிக்க முடியுமா? ஆகவே, முதலில் கடலையை உரித்துக் கொண்டு எல்லாவற்றையும் கலந்து ஒரேயடியாக உள்ளே தள்ளி விட்டேன்!" என்றார் அவர்.

அந்த அசத்தாகத் தோன்றிய ஆசாமியின் சமத்து அப்பொழுதுதான் எல்லோருக்கும் தெரிந்தது. அடுத்த கணமே அவருக்குச் 'சாப்பாட்டு ராமன்' என்ற பட்டப் பெயரும் கரகோஷத்தினிடையே சூட்டப்பட்டது.




## 14. மறக்க முடியுமா?

வீரம்மா அதி வேகமாகக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னே வந்து தங்கத்திற்குப் பக்கத்தில் நின்று அவள் காதோடு என்னவோ சொல்லிவிட்டு யார் வரவையோ ஆவலோடு எதிர்பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டு நின்றாள்.

சில நிமிடங்கள் சென்றன. அங்குள்ளவர்கள் எல்லாரும் மேலே என்ன நடக்கப்போகிறது என்று தெரியாமல் வியப்போடு எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனால் திடீரென்று எல்லோரும் பதற்றமடையும் வண்ணம் ஒரு காரியம் நடந்தது. கூட்டத்திலிருந்த ஒருவன் ஏதோ வெறிபிடித்தவன் போலப் பாய்ந்து தங்கத்தின் கையைப் பற்றினான். தங்கம் வீறிட்டு அலறினாள். ஒரு கணத்தில் கூட்டத்தில் கலவரம் ஏற்பட்டது. எல்லோரும் ராணி உட்கார்ந்திருந்த மேடையை நோக்கிச் சென்றனர்.

தங்கத்திற்குப் பக்கத்திலே நின்று கொண்டிருந்த வீரம்மா, "அடே, பாவி! அவள் கையை விட்டு விடு!" என்று கதறினாள்.

சூன்யக்காரன்போலிருந்த அந்தக் குள்ளமான மனிதனை எல்லோரும் நன்கறிவார்கள். அவன் பெயர் சங்கன். அவன் அவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவனாயினும் அவர்களுடைய கட்டுப்பாட்டிற்கும் சட்ட திட்டத்திற்கும் அடங்கியவனல்ல. அவன் எந்தக் கூட்டத்தினரோடும் சேராமல் தனியாக எங்கெங்கோ சுற்றிக்கொண்டிருந்தான். சூதாடுவதும், கொள்ளையடிப்பதும் தான் அவன் தொழில். அவன் எவ்வளவோ தடவை சிறை சென்றிருக்கிறான். அவனுடைய குணமும் நடத்தையும் ஒருவருக்கும் பிடிக்காது. அவன் இந்த விருந்திற்கு வருவான் என்று ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. அவன் எங்கு இருக்கிறான் என்றுகூட ஒருவருக்கும் தெரியாது. ஆனால் அவன் எப்படியோ விருந்து நடக்கப்போவதை அறிந்து தன்னுடன் சில கூட்டாளிகளையும் அழைத்துக் கொண்டு அழையாத விருந்தாளியாக அங்கு வந்து சேர்ந்தான். அநேக வருடங்கள் சிறை வாசம் செய்த அவனுக்குக் கல்யாணத்திற்குகந்த வயதெல்லாம் தாண்டிவிட்டது. தனக்கு ஒரு மனைவியில்லாத குறை அவனுக்குப் பெரிதாக இருந்தது. ஆனால் அவனை விரும்பும் பெண்கள் ஒருவருமே இல்லை. அவனைக் கண்டாலே எந்தப் பெண்களுக்கும் மனத்தில் ஒருவிதமான பயமும் வெறுப்பும்தான் ஏற்படும். அவனுக்குத் தங்கத்தைப் பார்த்தவுடன் அவளைத் தனக்கு மனைவியாக்கிக் கொண்டுவிட வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஆகவே, அவன் பலாத்காரமான முயற்சியில் ஈடுபடத் துணிந்து விட்டான்.

அவன் சட்டென்று பாய்ந்து ராணியைத் தூக்கிக்கொண்டு போய் விடலாமென்று நினைத்தான். ஆனால் தன்னைச் சுற்றிலும் பெருங் கூட்டம் சூழ்ந்து கொண்டதைப் பார்த்ததும் அவர்களோடு போராடித் தங்கத்தை தூக்கிக் கொண்டுபோக யத்தனித்தான்.

"மரியாதையோடு அவள் கையை விட்டு விடு!" என்றாள் வீரம்மா.

சங்கனின் விகாரமான முகத்தில் கோபம் எழுந்தது. அவன் தன் வக்கிரமான சிறிய கண்களை உருட்டி விழித்தான். "நான் விடமாட்டேன். இவளுக்குத் தகுதியான புருஷன் நான்தான். இங்கே இருக்கிற மற்றவங்களெல்லாம் சோம்பேறிங்க, வீரமில்லாதவங்க!" என்றான்.

வீரம்மா தங்கத்தைப் பிடித்திருந்த அவனுடைய இரும்புக் கையை விலக்கப் பிரயத்தனப்பட்டாள். கோபத்தினால் அவள் முகம் சிவந்தது. உரத்த குரலில், "அவளுக்குத் தகுந்த புருஷனை அவள் முன்னமேயே பார்த்து வைத்திருக்கிறாள். என் பேரன் சிங்காரம்தான் இவள் புருஷன். அவன் இப்பொழுது இங்கே வந்தால் உன்னை மூட்டைப் பூச்சிமாதிரி தேய்த்து நசுக்கிவிடுவான்!" என்றாள்.

"ஹூம்! அப்படியா! வரட்டும், ஒரு கை பார்க்கிறேன். இவள் அவனைத்தான் கல்யாணம் செய்து கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறாள் என்றால் மற்றவர்களையும் கூப்பிட்டுப் பரிச விருந்து ஏன் வைக்கணும்! எங்களையெல்லாம் ஏமாற்றி அவமானப்படுத்தவா! அந்த வீரசிங்கம் சிங்காரம் இந்தச் சடங்கின் போது இல்லாமல் எங்கே போனான்! அவன் இந்தச் சமயத்திலே இங்கே இல்லாததினால் இவள் இனிமேல் அவனுக்குப் பெண்சாதி ஆக முடியாது" என்று ஆத்திரத்தோடு சொன்னான் சங்கன்.

அவனோடு வந்திருந்த சகபாடிகள் "ஆமாம், அதுதான் சரி!" என்றனர்.

சில விநாடிகளுக்குள் அந்தக் கூட்டத்தினரிடையே பெரும் குழப்பம் ஏற்பட்டது. யாரோ ஒருவன் தங்கத்தின் கையைப் பற்றி யிருந்த சங்கனின் கையை உதறித் தள்ளி அவன் முகத்தில் குத்தி அப்பால் தள்ளினான். சங்கன்மீது எவன் பாய்ந்து அடித்தானோ, அவன்மீது இருவர் பாய்ந்து அடித்தனர். அவ்வளவுதான். சிறிய சண்டை பெரிதாகியது. பாட்டும் ஆட்டமும் ஓய்ந்தன. சிறிது நேரத்திற்கு முன்னால் சந்தோஷத்தோடு இருந்தவர்களெல்லாம் இப்பொழுது ஒருவரை ஒருவர் தாக்கிச் சண்டை போட ஆரம்பித்தனர்.

தங்கத்திற்கு அங்கு நடந்திருக்கும் கலவரத்தைப் பற்றிக் கவலையே இல்லை. சங்கனின் முரட்டுப் பிடியிலிருந்து விடுதலையடைந்ததே அவளுக்குப் போதுமென்றாகி விட்டது. சங்கனை இரண்டு மூன்று வாலிபர்கள் மனம் போனபடி தாக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவளுக்கு அந்த இடத்தில் ஒரு கணம்கூட நிற்கப் பிரியமில்லை. சண்டையின் வேகத்தில் அவளை ஒருவரும் கவனிக்க வில்லை. ஆகவே, அவள் சட்டென்று இருளில் சென்று மறைந்து விட்டாள்.

அவள் அந்தக் குடிசைகள் நிறைந்த மைதானத்தைத் தாண்டி உயரமான ஏரிக் கரையின் ஒற்றையடிப் பாதையின் வழியாக அதிவேகமாக நடந்தாள். அவளுடைய கண்கள் பீதியினால் கலங்கி யிருந்தன. அந்தச் சமயத்தில் அவளுக்கு எதிரில் நடந்து வரும் மனிதனை அவள் கவனிக்க வில்லை. நிலவின் ஒளியில் எதிரே வருவோரைத் தெரிந்து கொள்வது கடினமில்லைதான். ஆயினும் அப்பொழுது அவளுக்கிருந்த பதற்றத்தில் எதிரில் வந்து கொண்டிருக்கும் மனிதனை அவள் கவனிக்க வில்லை. அவள் அருகே வந்தவன் சட்டென்று அவளுடைய கரத்தைப் பற்றிக் கொண்டான். அப்பொழுதும் அவளுக்குச் சங்கனின் கோரமான முகம்தான் நினைவிற்கு வந்தது. அவள் உடல் நடுங்கியது.



பிச்சைக்காரன் :— "கண் இரண்டும் பொட்டையுங்க. தருமம் கொடுங்க, சாமி!...... மனுஷன் பார்க்காமலே போகிறானே, ஒருவேளை அவன் நிலைக்குருடனோ, என்னவோ!

"என்ன, தங்கம்! எதற்காக இப்படிப் பயந்து ஓடிவருகிறாய்!" என்று கேட்டான். பயத்தினால் நா வறண்டு விட்ட அவளால் அவனுக்கு உடனே பதில் சொல்ல முடியவில்லை. கேட்டுக் கேட்டுப் பழகிய குரலா யிருக்கவே, தலை நிமிர்ந்து பார்த்தாள். அந்த இடத்தில் அந்தச் சமயம் எதிர்பாராத வண்ணம் தெய்வம் போல் தோன்றிய மனிதன் அவள் மனத்தைக் கவர்ந்த ஆனந்தன் தான் என்பது தெரிந்தது. அடுத்த கணம் அவளுடைய பயமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. அவள் மெதுவாக அவன் பிடியிலிருந்து விலகி அவனுடைய ஆர்வம் மிகுந்த முகத்தைப் பார்த்தாள். அவள் கண்களில் ஒரு வெட்கம் சூழ்ந்தது. "என்னை ஒருவரும் துன்பப் படுத்தாமல் பார்த்துக் கொள்கிறீர்களா......!" என்றாள்.

"நான் இருக்கும்போது உன்னை ஒருவரும் ஒன்றும் செய்துவிட முடியாது. நீ யாருக்காக இப்படிப் பயந்து ஓடி வருகிறாய்! உன்னை யாராவது துரத்திக் கொண்டு வருகிறார்களா!" என்று கேட்டான் ஆனந்தன் பதற்றத்துடன்.

"எங்கள் ஜனங்கள் எல்லோரும் அங்கே ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறாங்க......" என்றாள் ஒரு மேல் மூச்சுடன்.

"தெரிகிறது. இங்கே ஏதோ அமர்க்களமாய் இருக்கிறதைப் பார்த்துவிட்டுத் தானே நானும் வந்தேன்! ஏன் அவர்களுக்குள்ளே சண்டை...!"

"இன்று ஒரு பெரிய விருந்து வைத்தாங்க......"

"சண்டை செய்கிறதென்றால் உங்கள் ஜனங்கள் விருந்து வைத்துத்தான் சண்டை செய்வார்களா......!" என்று கேட்டான் ஆனந்தன்.

அதைக் கேட்ட தங்கம் 'களுக்'கென்று சிரித்து விட்டு, "இல்லை......எனக்காகத் தான் இன்று விருந்து வைத்தாங்க" என்றாள்.

"உனக்காகவா......!"

"ஆமாம். நான் அவர்கள் ராணியல்லவா! நான் வயது வந்த பெண்ணாகி விட்டேனாம். அதற்காக இன்று பரிச விருந்து வைத்தார்கள். இந்தச் சடங்கில் நான் எனக்குத் தகுந்த புருஷனைப் பார்த்துப் பொறுக்கி எடுக்கணுமாம்......இதற்குப் பல ஊர்களிலிருந்தும் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் வந்திருக்காங்க......" என்று சொல்லி நிறுத்தினாள்.

"ஓஹோ! அதனால்தான் நீ இன்று இப்படியெல்லாம் அலங்காரம் செய்து கொண்டிருக்கிறாயா! சரி, உனக்குத் தகுந்த புருஷனைப் பொறுக்கி எடுத்து விட்டாயா!" என்று கேட்டான் ஆனந்தன்.

"இல்லை. என் அத்தை வீரம்மாவுக்கு அவளுடைய பேரன் சிங்காரத்தை நான் கல்யாணம் செய்து கொள்ளவேணும் என்று ஆசை. சிங்காரம் வந்ததும் அவன் கழுத்தில் மாலையைப் போட்டு விடு என்று வீரம்மா என்னை வற்புறுத்தினாள். ஆனால் சிங்காரம் வரவே இல்லை. ஆனால் அதற்குள் சங்கன் என்னும் போக்கிரி பாய்ந்து வந்து முரட்டுத்தனமாக என் கையைப் பிடித்துக்

கொண்டான். உடனே சண்டை ஆரம்பமாயிடுச்சு. நான் அவர்களிடமிருந்து தப்பிச்சு ஓடி வந்துட்டேன்'' என்றாள் ஆயாசத்தோடு.

ஆனந்தன் ஒரு பெருமூச்சு விட்டான். ''ஹூம்... சரி. வீரம்மா சொன்னபடி அவள் பேரன் சிங்காரத்தைக் கல்யாணம் செய்து கொள்ள உனக்கு இஷ்டம்தானே!'' என்று கேட்டான் ஆனந்தன்.

அவள் அவனைப் பேதமை நிறைந்த கண்களோடு பார்த்தாள். அவளுடைய வார்த்தைகளில் ஒரு தடுமாற்றம் ஏற்பட்டது. ''எனக்கு ஆசை இல்லே......ஆனால் அவங்க சட்டதிட்டத்திற்கு உட்பட்டவள்தானே நான்......! சிங்காரத்துக்கும் என்னைக் கல்யாணம் செய்துகொள்ளுகிற ஆசை இல்லே. அப்படி இருந்தால் அவன் முக்கியமான சடங்கு நடக்கும்போது அங்கு இல்லாமல் இருப்பானா......!'' என்றாள்.

இதைக் கேட்டதும் ஆனந்தனுக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கி வந்தன. ''இதெல்லாம் பைத்தியக்காரத்தனமாகவும் மூடத்தனமாகவும் தானிருக்கிறது. உனக்குத் தகுதியான புருஷன் அந்தக் கூட்டத்தில் ஒருவருமே இல்லே. நீ உண்மையாகவே இந்த நாடோடிகளைச் சேர்ந்தவள் தானா என்று எனக்குச் சந்தேகம். ஆனால் கடவுளின் சிருஷ்டியில் அழகை அவன் வித்தியாசமான கண்களோடு இடம் பார்த்து வைப்பதில்லே. உண்மையாகத் தங்கம், நீ ரொம்ப அழகாய் இருக்கிறாய். என்னைப் போன்ற வாலிபனுக்கெல்லாம் உன் அழகு கொஞ்சம் மதிமயக்கத்தைத்தான் உண்டாக்கும்......'' என்றான்.

அவள் தலை குனிந்த வண்ணமே நின்று கொண்டிருந்தாள். சில நிமிஷ நேரம் அங்கு மௌனம் சூழ்ந்தது. ''எனக்கு எப்பொழுதும் நான் ஏதோ தனி வகையானவளாகத்தான் தோன்றுகிறது. என்னுடைய ஜனங்களும் நான் ஏதோ ஒரு தனிப் பிறவி என்றுதான் கருதுகிறார்கள். எனக்கு அவர்களுடைய வாழ்க்கையே பிடிக்கவில்லே. நான் என்னவோ இன்னொரு உலகத்திலிருந்து வந்தவள் போல்தானிருக்கிறேன். அவர்கள் எனக்காகச் சண்டை போட்டுக் கொண்டபொழுது இந்த ஜனங்களின் கண்ணில் படாமல் எங்காவது ஓடிப் போய் விட வேண்டும்போல்தான் எனக்குத் தோன்றியது......'' என்று சொல்லி மறுபடியும் அந்த குடிசைகள் உள்ள பக்கத்தைப் பார்த்து விட்டு, ''அவர்களுடைய சண்டை வெல்லாம் ஓய்ந்து விட்டது போலிருக்கிறது. அவர்கள் இனிமேல் என்னைத் தேடத் தலைப்பட்டு விடுவார்கள். ஆகையால் நான் இனிமேல் அங்கே போய்விட வேண்டும்'' என்றாள்.

ஆனந்தன் திடீரென்று அவள் சித்தம் மாறியதை எண்ணிச் சிரித்தான். அவன் அவள்மீது எல்லையற்ற காதல் கொண்டிருந்தான். ஆனால் அப்பொழுது அவன் அவளைத் தன்னோடு வந்துவிடு என்று சொல்லக் கூடிய நிலைமையில் இல்லே. அவளுடைய எதிர் கால வாழ்க்கையைத் தன்னுடைய வாழ்க்கையோடு பிணைத்துக் கொள்ளும் சரியான மார்க்கம் எதுவும் அவனுக்கு அப்பொழுது புலனாகவில்லே. ஆனால் தங்கத்தை விட்டுவிட அவன் மனம் இடங்கொடுக்கவில்லே. அவளுக்காக அவனால் என்ன செய்ய முடியும் என்பதைத்தான் அவன் யோசித்தான். அவளை அழைத்துக்கொண்டு எங்கே போவது! அவன் சிந்தனைக்கு எட்டிய வரையில் எத்தகைய தெளிவான வழியும் புலனாகவில்லே. ''நீ அங்கே திரும்பிப் போனால் உன்னை மறுபடியும் ஏதும் தொந்திரவு செய்ய மாட்டார்களா......!'' என்றான் அவளைப் பச்சாத்தாபத்தோடு பார்த்துக்கொண்டே.

''ஹூ ஹூம். என்னை ஏன் அவர்கள் தொந்திரவு செய்கிறார்கள்! அவர்கள் மூர்க்கத்தனமாக சண்டை போட்டபோது தான் எனக்கு பயமாய் இருந்தது. அவர்களெல்லாம் என்னிடம் மரியாதையும் பிரியமும் உள்ளவர்கள். நான் அவர்கள் ராணியல்லவா!'' என்றாள்.

''உன்னை அவர்கள் காணவிட்டால் என்ன செய்வார்கள்!''

''என்ன செய்வார்கள்! ஊரெல்லாம் தேடுவார்கள். நான்





சர்க்கஸ் மானேஜர் (நாற்காலிகள் செய்து கொடுத்த தச்சனைப் பார்த்து):—நீர் செய்து கொடுத்த நாற்காலிகளின் கால்கள் ஒன்றுவது சரியாயில்லை. அதன்மேல் உட்கார்ந்து ஆட்டம் பார்ப்பவர்கள் என்ன சொல்லுவார்கள்?

தச்சன்:—இது தெரியாதா? ஆட்டம் நல்ல ஆட்டமாக இருக்கிறது என்றுதான்!

அகப்படா விட்டால் வேறொரு பெண்ணைப் புது ராணியாக்குவார்கள். இல்லாவிட்டால் ஒரு ராஜாவை ஏற்படுத்துவார்கள். சரி, போகட்டுமா?" என்றாள் துடிப்புடன் தங்கம்.

"நீ போகிறாயா! அவர்கள் உன்னை ஏதாவது இம்சை செய்வார்களோ என்று எனக்குப் பயமாயிருக்கிறது" என்றான் ஆனந்தன்.

"நீங்க அப்படி நினைக்கிறது தப்பு. அவர்களோடு பழகினால்தான் அவர்களுடைய நல்ல குணம் தெரியும். அப்படி யாராவது ஏதாவது தகாத காரியம் செய்ய நினைத்தாலும் தாத்தா பெத்தண்ணன் அதைப் பார்த்து சகித்துக் கொண்டிருக்க மாட்டாரு. அவரு சொன்னபடிதான் எல்லோரும் கேட்கணும். அவருக்கு என்மேலே ரொம்ப விசுவாசம். நான் அந்தக் கூட்டத்தை விட்டு விலகி வேறு ஒருவரைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று சொன்னாலும் அவரு அனுமதிப்பாரு..." என்றாள்.

"அப்படியா! மிகவும் நல்லதாய்ப் போச்சு! அப்படியென்றால் நீ அந்தப் பெத்தண்ணனிடம் உன் மனத்திலுள்ளதை யெல்லாம் சொல்லி அவர்களை விட்டு விலகி வர ஏற்பாடு செய்தால் நான் உன்னை என்னோடு அழைத்துக் கொள்ள வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்வேன்" என்றான் ஆனந்தன்.

இதைக் கேட்டதும் தங்கம் பூரிப்படைந்தவளாய், "நிஜமாகவா! என்னைப்போலத் திசை தெரியாமலிருப்பவளுக்கு உங்கள் சிநேகிதம் கிடைத்ததே!" என்றாள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டே.

"நீ இனிமேல் துளிக்கூடப் பயப்பட வேண்டாம். உன்னை நான் மறக்க மாட்டேன். உன்னை நான் இந்தக் கூட்டத்தினரிடமிருந்து பிரித்து என்னுடையவளாக்கிக் கொள்ளும் வரையில் எனக்குத் தூக்கம் வராது" என்றான் ஆனந்தன்.

அவளைத் தனியாக அனுப்ப அவன் மனம் இடங்கொடுக்கவில்லை. அவளைப் பத்திரமாக அந்தக் குடிசைகள் இருக்கும் இடம் வரையிலாவது கொண்டு போய் விடவேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. அவர்களிருவரும் அந்த ஒற்றையடிப்பாதை வழியாக நடந்தனர். அவர்கள் அந்தக் குடிசைகளுக்குச் சமீபமாக வந்தபொழுது அமைதி சூழ்ந்திருந்தது. பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த விளக்குகளெல்லாம் எண்ணெய் வற்றிவிட்டதினால் அணைந்து விட்டன. அவர்களில் பலர் தூங்க ஆரம்பித்து விட்டனர். சிறிது நேரத்திற்கு முன்னால் சண்டையில் தீவிரமாக இருந்த அவர்கள் இப்பொழுது அமைதியாக இருந்தது நினைப்பதற்கே ஆச்சர்யமாயிருந்தது. அவர்கள் உயரமான ஏரிக்கரையிலிருந்து இறங்கி மைதானத்திற்கு வரும்போது அவர்களை நோக்கி யாரோ வருவதைக் கண்டு சற்றுத் திகைத்து நின்றனர். அந்த உருவம் அவர்கள் அருகில் வந்ததும் தங்கம் யாரென்பதைப் புரிந்து கொண்டு விட்டாள். "தாத்தா!" என்றாள் ஆவலோடு.

"ஆமாம்! நான்தானம்மா......உன்னை எங்கே யெல்லாம் தேடுவது! உன்னை யாரேனும் கலவரத்துக் கிடையே கடத்திக் கொண்டு போயிட்டாங்களோ என்று பயப்பட்டேன். நல்ல வேளை! சரி, உன்னோடு இன்னும் யாரு!" என்றான் பெத்தண்ணன்.

"நான் கலவர மேற்பட்டவுடனே பயந்து ஓடிட்டேன், தாத்தா!" என்றாள் தங்கம்.

"கலவரமெல்லாம் அடங்கிப் போச்சம்மா. எல்லோரும் மறுபடியும் ஒத்துமையாயிட்டாங்க. இதெல்லாம் அந்த முரடன் சங்கனாலே வந்தது. அவனுடைய முரட்டுத்தனத்துக்குத் தகுந்த வெகுமதியும் கிடைச்சது. போதும் போதுங்கிற வரையில் வாங்கிக்கிட்டு இருந்த இடம் தெரியாமல் ஓடிட்டான். நீ பயப்படாதே, தங்கம். நான் உன்னை அழைச்சுக்கிட்டுப் போய் உன் குடிசையிலே விட்டு விடுகிறேன். சத்தம் போடாமல் வா" என்றான் பெத்தண்ணன்.

"சரி! நீங்க இருக்கும்போது எனக்கென்ன பயம், தாத்தா......!" என்றாள் தங்கம்.

"என்னோடு சப்தம் போடாமல் மெதுவாக வந்துவிடு. எல்லோரும் நீ உன் குடிசையிலே படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பதாக நினைக்க வேண்டும். இல்லாவிட்டால் பெரிய வம்பாக முடியும்" என்று சொல்லி அவளைத் துரிதப் படுத்தினான்.

அவள் ஆனந்தனைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே பெத்தண்ணனோடு சென்றாள். மங்கிய நில வொளியில் அவர்கள் உருவம் நிழல் போலச் சென்று மறையும் வரையில் ஆனந்தன் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் திரும்ப மனமில்லாதவனாய் வீடு நோக்கி நடந்தான்.

## 15. இது என்ன பயங்கரம்?

அந்த மைதானத்திற்கு நெடுந்தூரத்தில் நிர்மானுஷ்யமான இடத்தில் வேறு இரு உள்ளங்கள் நிலவொளியில் இந்த உலகத்தையே மறந்த நிலையிலிருந்தன.

மாதவியும் சிங்காரமும் தங்கள் முதல் சந்திப்பிலேயே ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டு இயற்கையாக நட்புப் பாராட்டத் தொடங்கினர். தவிர்க்க முடியாத ஒரு சம்பந்தம் அவர்கள் இருவருக்கும் ஏற்பட்டது. இயற்கையாக எழுந்த காதலின் உணர்ச்சி வசப்பட்ட கூத்திற்கு அவர்கள் பலியாகி விட்டார்களென்றே சொல்ல வேண்டும்.

அவர்கள் சந்தடியை விட்டு விலகி வேறு ஒரு உலகத்திற்கே வந்து விட்டவர்கள் போல் ஒரு

அமைதியான இடத்தில் வந்து அமர்ந்தனர். நில வின் ஒளியில் நிழலோடு நிழல் ஒட்டிக் கலந்தாற் போல ஒருவர் அருகில் ஒருவர் உட்கார்ந்திருந்த னர். வெகு நேரம் வரையில் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணமே அமர்ந்திருந்தனர். எவ்வளவு நேரந்தான் அப்படி இருக்க முடியும்! மாதவி மெதுவாகப் பேச ஆரம்பித்தாள். "நீங்கள் அந்தக் கூட்டத்தை விட்டு விலகி வந்து விட்டீர் களே! இது அவர்களுக்குத் தெரிந்தால் என்ன செய்வார்கள்! நீங்கள் அந்த ராணியைக் கல்யா ணம் செய்து கொள்ள இஷ்டப்படவில்லையானால் என்ன செய்வார்கள்!" என்று கேட்டாள்.

சிங்காரத்தின் பிரகாசமான முகத்தில் சிறிது கவலைக்குறி தோன்றியது. ஆனால் அவன் மன உறுதி தளர்ந்தவனாகக் காணப்படவில்லை. "அவர்கள் என்ன செய்தாலும் நான் கவலைப் படப்போவதில்லை. நான் அந்தக் கூட்டத்தினரை விட்டு விலகிக் கொஞ்ச நாள் தனியாக இருக்கலா மென்று யோசிக்கிறேன். அவர்கள் அத்தனை பேரும் என்னை எதிர்த்தாலும் எனக்கு இந்த உல கத்திலே எப்படிப் பிழைக்க முடியுமென்று தெரி யும். நான் அவர்களை விடத் திடசாலி, கெட்டிக் காரன் என்று அவர்களுக்கே தெரியும்!" என்றான்.

அவன் கூறிய வார்த்தைகள் மாதவியின் மனத் தில், அவன் தனியாகக் காடு, மலை, ஆறு, வயல் வெளி இவைகளை யெல்லாம் தாண்டி ஒவ்வொரு ஊராகச் சென்று தகுந்த இடங்களில் தனியாக ஒரு குடிசையை அமைத்துத்தானே அடுப்புப் பற்ற வைத்துச் சமைத்துச் சாப்பிடுவதுபோலும், மற்ற நேரங்களில் ஊரில் வித்தைகள் செய்து காட்டிப் பணம் சம்பாதிப்பது போலும் பற்பல விதமான படங்களைப் பிடித்துக் காட்டின.

அவனோடு தன்னைப்போல் ஒரு பெண்ணின் துணையுமிருந்து விட்டால், அதைவிடச் சந்தோஷம் அப்புறம் வேறு என்ன வேண்டும் என்ற எண்ணம் எழவே, "நீங்கள் தனியாகவா ஊர் ஊராகச் சுற்றுவீர்கள்! ஏன், என்னையும் அழைத் துக் கொண்டு போங்களேன்!" என்றாள் ஆவ லோடு அவன் தோளில் சாய்ந்த வண்ணம்.

அவன் மெதுவாக அவள் நெற்றியில் சுருண்டு விழுந்து கிடந்த கேசத்தை ஒதுக்கி விட்டு, "நீயும் வருகிறாயா! நீ சாதாரண மனிதர் வீட்டுப் பெண்ணா! பட்டக்காரர் வீட்டுப் பேத்தியல்லவா! நீ என்னோடு வருகிறது என்பது முடிகிற காரியமா! உன்னைக் காணவிட்டால் உலகம் முழுவதும் சல் லடை போட்டுச் சலித்துத் தேடமாட்டார்களா! நீ என்னோடு இருப்பதை அவர்கள் கண்டு விட் டால் சாகிறவரையில் நான் ஜெயிலில் இருக் கணும், தெரியுமா!" என்றான்.

மாதவி தனக்கு எவ்விதமான ஆபத்து வருவதா யிருந்தாலும் சகித்துக் கொள்ளத் தயாரா யிருந்தாள். ஆனால் தன்னால் சிங்காரத்துக்கு வரக்கூடிய ஆபத்துக்களையும் அவள் உணரத் தான் வேண்டியிருந்தது. "அப்படியானால் நாம் என்ன செய்வது!" என்றாள் கவலையோடு.

"அதைத்தான் யோசிக்கிறேன். உன்னைப்போல ஒரு பணக்கார வீட்டு பெண் என்மேலே இச்சை வைப்பது ஒரு அதிர்ஷ்டமாயிருந்தாலும் பெரிய சோதனைதான். இது ரொம்பக் கடினமான காரியம். ஆனால் ஒருநாள் நானும் நீயும் ஒன்றாகி விடுவோம் என்கிற நம்பிக்கை எனக்கு ஏற்படு கிறது. இல்லாவிட்டால் நமக்குள் இந்த மாதிரி இவ்வளவு அன்பு விழக் காரணமே இல்லை.

இதைப் பற்றி எதுவும் அவசரமாக முடிவு செய்து விடக் கூடாது. யோசித்துத்தான் முடிவு செய்யணும்...'' என்றான்.

மாதவி அவனுக்கு எவ்விதமான பதிலும் சொல்லவில்லை. மௌனமாக உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது அவள் யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

மறுபடியும் சிங்காரம் பேசத் தொடங்கினான்: ''சரி! நீ கவலைப்படாதே. இனிமேல் இங்கே உட்கார்ந்திருப்பது பிசகு. நீ முதலில் வீட்டை விட்டு இந்த இரவில் வெளியில் வந்ததே தவறு. ஆனால் மனசிலே இருக்கும் இச்சையினாலே எந்தத் தவறையும் யோசிக்காமல் செய்துவிடத் தோணுது. நீ வீட்டிற்குப் போ, ஜாக்கிரதையாக. நான் என் குடிசைக்குப் போகிறேன். ஆனால் மறுபடியும் என்னைப் பார்க்க மறந்துவிடாதே...'' என்று சொல்லிவிட்டு எழுந்தான். அவளும் அவன் கையைப் பற்றிக் கொண்டு மெதுவாக எழுந்தாள்.

அவன் அவளைப் பார்த்துத் தலையை அசைத்து விட்டு நடந்தான். அவள் ஒன்றும் பதில் பேசாமல் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவனுடைய நிழல் மறையும் வரையில் அவன் சென்ற திசையையே பார்த்துக் கொண்டு சிலை போல் நின்றாள் மாதவி. அவளையறியாமல் இரு துளிக் கண்ணீர் கசிந்து வழிந்தது. அவள் சட்டென்று சுய உணர்வு அடைந்தவள் போல் அவசரமாகத் தன் வீட்டை நோக்கி நடந்தாள்.

அவள் ரஸ்தாவைக் குறுக்காகக் கடந்து தன் வீட்டுத் தோட்டத்தின் வாசற்படியை அடையயத்தனித்தபோது அங்கொரு மரத்தடியிலிருந்து ஒரு உருவம் பாய்ந்து அவள் எதிரில் வந்து கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. அவள் நடந்து வந்த வேகத்தினால் மேல் மூச்சு விட்டபடியே அந்த உருவத்தைப் பயத்தோடும் நடுக்கத்தோடும் உற்றுப் பார்த்தாள். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## விவசாயமும் காந்த சக்தியும்

''உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்!'' என்னும் கோஷம் வானளாவக் கேட்கிறது. இதைப்பற்றிப் பேசாத பிரசங்கி இல்லை. மேல் நாட்டு இயந்திர சாதனங்களையும், ரசாயன எருக்களையும் விவசாயத்தில் பயன் படுத்திப் பெரிய பண்ணையார்கள் உணவு உற்பத்திப் பெருக்கத்தில் ஈடுபடுகிறார்கள். ஆனால் நவீன சாதனங்களுக்காகப் பெரும் செலவு செய்து ஏழை விவசாயிகள் பயிர்த் தொழில் செய்ய முடியாதல்லவா! இயற்கையில் பிறந்து வளர்ந்து வரும் காந்த சக்தியை விவசாயத்துக்குப் பயன்படுத்தி அதன் மூலம் மகசூலை அதிகமாகப் பெருக்கலாம் என்று இந்த நூலாசிரியர் சொல்கிறார்.

மேற்படி காந்த சக்தியைப் பயன்படுத்தும் வழியையும் கூறுகிறார். நெல் சாகுபடி, கரும்பு சாகுபடி, காய் கறி, பழத் தோட்டங்கள் இவற்றுக்கெல்லாம் காந்த சக்தியைப் பயன்படுத்தினால் அபரிமிதமாகப் பலன் பெறலாம் என்று தமது பன்னிரண்டு வருஷ அநுபவத்துடன் கூறுகிறார்.

எழுதியவர்: ஆ. ரா. ஸ்ரீநிவாஸ ராவ், பிரசுரம், ஸ்ரீ குருநாடா ஏஜென்ஸீஸ், 7, வடக்குத் தெரு, ஸ்ரீ ராம் நகர், சென்னை-18; விலை: ரூ. 2-[illegible]-0.



அவன்:—டாக்டர் ஸார், அந்தப் பெரிய மனிதர் வீட்டு நாயின் காலைக் குணப்படுத்தினீர்களே, அதற்கு நல்ல 'பீஸ்' உங்களுக்குக் கிடைத்திருக்குமே!

டாக்டர்:— ஆமாம். அதற்கு என்ன இப்பொழுது?

அவன்:—ஒன்றும் இல்லை. நாயின் காலில் கல்லெறிந்து காயப்படுத்தியவன் என் மகன் தான்! அவனுக்கு ஏதாவது கொடுத்துக் கவனித்துக் கொள்ள வேண்டும்!

## விபரீத ஆசை

மனிதனுக்கு ஏற்படக் கூடிய ஆசைகளை நினைத்தால் அப்பப்பா எண்ணித் தொலையாது. அதனால்தான் நம் பெரியோர்களும் 'ஆசைக்கோர் அளவில்லை' என்று கூறி வந்தார்கள். ஆனால் இவர்கள் குறிப்பிட்டதெல்லாம் மனிதனுக்கு ஏற்படக்கூடிய சாதாரண ஆசைகளைப் பற்றித்தான். ஆனால் காலஞ்சென்ற 'புதுமைப்பித்தன்' பயங்கரச் சூழ்நிலையில், யமனுடைய ஆட்சி நடந்து கொண்டிருக்கும் வேளையில் ஒரு மனிதனுக்கு ஏற்பட்டதோர் பயங்கர ஆசையை, 'விபரீத ஆசை' என்ற கதையில் தமக்கே உரிய நடையில் தீட்டியிருக்கிறார். அதன் பயங்கரத்தைப் படித்துப் பார்த்துத்தான் உணர முடியும்.

எந்த விஷயத்தையும் புதுமைப்பித்தன் பார்க்கும் பார்வை தனியானதாக இருக்கும் என்று இலக்கிய ரஸிகர்கள் கூறுவார்கள். அந்த இலக்கணத்துக்கு ஒப்பவே இத்தொகுதியிலுள்ள ஒவ்வொரு கதையும் அமைந்திருக்கிறது.

பிரசுரம்: முல்லை வெளியீடு, சென்னை - 17 விலை: ரூ. 1—8—0

## காதல் மாயை

காதல், வறுமை, பாசம், தாய் அன்பு இப்படிப் பலதரப்பட்ட உணர்ச்சிகளைக் கொண்ட ஏழு கதைகள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன.

''உன் இன்பமே என் உயிர்; உன் வாழ்வே என் வையம்; உன் கனவே என் லட்சியம்; அதன் பலன் எனக்குக் காஞ்சனை கிட்டினாள்; ரகுவை நீ அடைந்தாய்!'' என்று ''காதல் மாயை'' என்னும் கதையில், மாமாவின் பெண் விமலாவுக்காக அவள் அத்தான் செய்யும் தியாகத்தைப் பற்றிக் கூறும்போது வருகிறது. மற்றக் கதைகளிலும் உணர்ச்சியூட்டும் கட்டங்கள் இருக்கின்றன.

ஆசிரியர்: எஸ். ஆறுமுகம்; பிரசுரம்: புதுமைப் பிரசுரம், பெண்ணாடம்: விலை: ரூ. 1—0—0.





## துரிதமாகத் தேர்வு பெறுகிறார்—

### டாக்டர்

# ஒவல்டினுக்கு

### உத்தரவு செய்ததுமுதல்!

நோய்க்குப் பிறகு தேறிவரும் காலத்தில் டாக்டர்களும் நர்ஸ்களும் ஆரோக்கியம் தரும் ஒவல்டினை சிபாரிசு செய்கின்றனர்! ஒவல்டினின் சத்துக்கள் ஆரோக்கியத்திற்கு மிக முக்கியமானவை என்று அவர்களுக்குத் தெரியும். அதில் பழுத்த பார்லி மால்ட், ஆடை நிரம்பிய பசும்பால், சிறந்த கொக்கோ, பி & டி விடமின்கள் ஆகியவை சேர்ந்து இருப்பதால் அது இன்றியமையாத உணவு பானமாகும். ஒவல்டின் லேபரட்டரிகளில், விஞ்ஞானிகள், ஒவல்டினின் பரிசுத்தத்திற்கு அதன் தயாரிப்பில் ஒவ்வொரு படியிலும் பரிசோதனை நடத்துகிறார்கள். எந்த நோயாளிக்கும் அவருடைய உணவுடன் ஒவல்டினையும் கொடுத்து வந்தால் தேர்வு துரிதப்படுவது திண்ணம்! நினைவிருக்கட்டும்— அது குடும்பத்தில் அனைவரின் ஆரோக்கியத்திற்கும் உகந்த பானம். ஒவல்டினையே கேளுங்கள்; போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

# ஒ வ ல் டி ன்



**நோய்க்குப் பிறகு தேர்வைத் துரிதப்படுத்துகிறது**

OV. 392



பிரபல ரொட்டி, மிட்டாய் வியாபாரியான ஸ்ரீ எஸ். முத்தியாலு நாயுடு அவர்கள் சென்ற 12-11-1952 அன்று காலை 11 மணிக்கு நெ. 7, மீனாக்ஷி கோவில் தெரு, கிராஸ், பெங்களூர் கண்டோன்மென்ட் தனது இல்லத்தில் தனது அருமை மனைவியையும் சென்ன கேசவலு, கருணா என்ற இரண்டு புதல்வர்களையும் புதல்விகள் மற்றும் பேரக் குழந்தைகள் யாவரையும் தவிக்க விட்டு இம் மண்ணுலகை நீத்தார்.

அன்னாரது ஆன்மா சாந்தி யடையுமாக!




பரிசுக் கதை: ரேமாண்ட் ஜெரோம் (பெல்ஜியம்)    மொழி பெயர்ப்பு: வாஞ்சி

அப்போது தூங்கிக் கொண்டிருந்த ராய் ஓர் இன்பக் கனவில் ஆழ்ந்திருந்தான். அவனுக்கு, தான் ஒரு பட்சியாக மாறிவிட்டது போல் தோன்றியது. ஆச்சரியகரமான இறகுகளுடன் அவன் வான வெளியில் யாதொரு கஷ்டமுமின்றி உல்லாசமாகப் பறந்து கொண்டிருந்தான்.

ஆஹா! நடப்பதற்கும் பறப்பதற்கும் எவ்வளவு வேற்றுமை!

ராய் அவ்விதம் கனவு காண்பது இது முதல் தடவை அல்ல. ஒவ்வொரு நாள் இரவும் அவனுக்கு அத்தகைய கனவு காண்பது வழக்கமாகி விட்டது.

அவனது அறைக்கு அருகில் உள்ள சினிமா சாலையிலிருந்து தோன்றித் தோன்றி மறையும் விசித்திரமான வர்ணங்களுடன் கூடிய வெளிச்சம் நாள் தவறாமல் அவனது அறைக்குள் அடிக்கும். அதுதான் ராயின் இன்பக் கனவுக்குக் காரணம்.

மேற்படி வெளிச்சத்தின் தோற்றம் ராயின் மனதில் ஒருவித பிரமையை உண்டாக்கி விட்டது. எனவே, அவன் சிற்சில சமயங்களில் பகல் நேரத்தில் கூட அவ்விதம் கனவு காண்பது உண்டு!

ரயிலில் போகும் போதும், மத்தியான வேளையில் 'டிபனு'க்காக ஹோட்டலில் காத்துக் கொண்டிருக்கும் போதும் ராய் கண்களை மூடிக் கொள்வான். அப்போது அவனுடைய தலைக்கு மேலே இரவில் தன் அறைக்குள் தோன்றுவது போல விசித்திரமான வர்ணஜால வெளிச்சம் தோன்றும்! அந்த வெளிச்சத்தில் அவன் ஒரு பட்சியாக மாறி வான வீதியில் ஆனந்தமாகப் பறந்து செல்வது போல் இன்பக் கனவு காண்பான்!

அன்றும் அவ்வாறே இன்பக் கனவில் ஆழ்ந்திருந்த ராய் கனவு கலைந்து திடீரென்று விழித்துக் கொண்டான். விழித்துக் கொள்ளாமல் எப்போதுமே அந்தக் கனவில் ஆழ்ந்திருக்கக் கூடாதா என்று அவன் மனம் ஏங்கியது.

அப்போது அவனால் எழுந்திருக்கவே முடியவில்லை. தான் குளிரில், அழுக்கடைந்த தரையில் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருப்பது அப்போது தான் அவனுக்குத் தெரிந்தது. இனம் தெரியாத பீதி அவன் மனத்தை ஆட்கொண்டது. தன் மனத்தில் ஏன் அப்படி பயம் உண்டாக வேண்டும் என்பது அவனுக்கே தெரியவில்லை.

அவன் தன்னைச் சுற்றிப் பார்த்துக் கொண்டான். அது தன் அறை இல்லை என்பதை அப்போதுதான் அவன் உணர்ந்தான். அவன் படுத்துக் கொண்டிருந்த அறையின் இரும்புக் கதவு வெளியே பூட்டப்பட்டிருந்தது.

ராய் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அப்போது தான் அவன், தன் உடைகளின் மேல் திட்டுத் திட்டாக இரத்தக் கறை படிந்திருப்பதைப் பார்த்தான்.

சினிமாப் படங்களிலோ, கதைப் புத்தகங்களிலோ இரத்தத்தைக் கண்டால் கூட அவனுக்கு வெறுப்பு ஏற்படும். கண்களை மூடிக் கொள்வான். அப்படியிருக்க அவன் மேலேயே இரத்தக் கறை படிந்திருப்பதைப் பார்க்க அவனால் சகிக்க முடியவில்லை.

அவ்வளவு இரத்தக் கறை உண்டாகும்படியான பயங்கரமான காயம் தனக்கு எப்போது ஏற்பட்டது என்பதை அவனால் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

ராய் திகிலுடன் தன் உடம்பு முழுவதையும் பார்த்துக் கொண்டான். தன் உடலி

லிருந்து அவ்வளவு உதிரம் வெளியாகியும், தான் உயிருடனிருப்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் வெகு நேரம் பிரமை பிடித்தவன்போல் அசைவற்று அப்படியே உட்கார்ந்திருந்தான்.

பிறகு அவன் தன் தேகத்தில் எங்கு காயம் ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்வதற்காகத் தன் அவயவங்களை எல்லாம் உற்றுக் கவனித்தான்.

முதலில் அவன் தன் கால்களை அசைத்துப் பார்த்தான். பிறகு கைகளை அசைத்தான். தலையில் எங்கேயாவது காயம் பட்டிருக்கிறதா என்று தடவிப் பார்த்துக் கொண்டான். ஆனால் ஓரிடத்திலும் ஒரு சிறிய காயம் கூட இருப்பதாகத் தெரியவில்லை.

இரத்தத்தில் நனைந்து கிடந்த தன்மேல் சட்டையை அவிழ்த்து அவன் அப்பால் போட்டான்.

மேல் சட்டையைப் போல் உள் சட்டையில் அதிகமாக இரத்தக்கறை இல்லை. அந்த உள் சட்டையை அவன் ஒரு கடையிலிருந்து கெட்டிக்காரத்தனமாக மிகக் குறைந்த விலைக்கு வாங்கியது அப்போது அவன் ஞாபகத்துக்கு வந்தது.

அந்தச் சமயத்தில், அவன் தான் எந்த இடத்தில் இருக்கிறோம் என்பதை ஆராய்வதற்கு முற்பட்டான்.

அப்போது அவன் இருந்த அறை சிறையில் இருக்கும் ஓர் அறையைப் போல் காற்றோட்டமில்லாமல் இருந்தது.

அது அவனது அறை இல்லை, நிச்சயம் தான்! ஆனால் அந்த அறைக்கு அவன் எப்போது, எப்படி வந்தான்? அப்போது நேரம் என்ன என்பதுகூட அவனுக்குத் தெரியவில்லை. தெரிந்தால் அல்லவா அவன் முதல் நாள் எந்நேரத்தில் அங்கு வந்தான் என்பதை ஞாபகப் படுத்திக் கொள்ள முடியும்?

அவனுக்கு அப்போது பசி தாங்க முடியவில்லை. அதே சமயம் திடீரென்று அவனுக்கு ஆலுவின் ஞாபகம் வந்தது.

* * *

ஆலு பிரான்ஸ் தேசத்தைச் சேர்ந்த பெண். ராயின் அருமைக் காதலி. ராய் அவளை இருதய பூர்வமாகக் காதலித்தது போல் அவளும் ராயைக் காதலித்தாள்.

ராய் நீக்ரோ சமூகத்தைச் சேர்ந்தவன். ஆலுவோ வெள்ளைப் பெண். அப்படியிருந்தும் அவ்விருவர் சம்பந்தப்பட்ட வரையில் மேற்படி நிறவேற்றுமை அவர்களுடைய காதலுக்கு இடையூறாக இருக்கவில்லை.

எனினும் வெள்ளையர் சமூகத்தின் வஞ்சத்துக்குப் பயந்து அவர்கள் தங்கள் காதலை இரகசியமாக வைத்துக்கொள்ள நேர்ந்தது.

ஆலு குடியிருந்த வீட்டின் சொந்தக்காரியைத் தவிர வேறு யாருக்கும் மேற்படி இரகசியம் தெரியாது. அவளை முழுதும் நம்பிவிடக் கூடாது என்பது ஆலுவுக்குத் தெரியும். இருந்தாலும் என்ன செய்வது? தன் இரகசியத்தை அவளுக்குத் தெரியாமல் மறைத்துவைக்க ஆலுவினால் முடியவில்லை. வீட்டுக்காரிக்குத் தெரியாமல் ராய் எப்படி ஆலுவை வந்து பார்க்க முடியும்?

ஆலுவைப் பற்றிய ஞாபகம் வந்ததும், தான் இருந்த பயங்கரமான நிலைமையை ராய் அடியோடு மறந்து விட்டான். ஆலுவைப் பற்றிய இன்ப எண்ணங்கள் அவனுக்குப் போதையைக் கொடுத்தன. எனவே, சிறிது நேரம் தன் பரிதாபமான நிலையை மறந்து பரவசமாக இருந்தான்.

அச்சமயம் அறைக்கு வெளியே இருந்து வந்த காலடிச் சப்தம் ராயின் சிந்தனையைக் கலைத்து அவனைத் திடுக்கிடச் செய்தது.

**அப்போது ராயின் அறைக்கு வெளியே மூன்று பேர் வந்து நின்றனர். அவர்களைக் கண்டதும் ராயின் நெஞ்சு அவனை யறியாமல் அடித்துக் கொள்ளத் தொடங்கியது.**

**அவர்கள் அவனையே வெறிக்கப் பார்த்தனர், கூண்டுக்குள் அடைபட்டிருக்கும் ஒரு கொடிய மிருகத்தைப் பார்ப்பது போல். அதைக் கண்டதும், ஏற்கெனவே ராயின் மனதில் ஏற்பட்டிருந்த பீதி இன்னும் அதிகமாகியது. அவன் தேகத்திலிருந்து வியர்வை பெருகத் தொடங்கியது.**



மூவரில் ஒருவன் ராய் இருந்த அறையின் இரும்புக் கதவின் பூட்டைச் சாவியினால் மெதுவாகத் திறந்தான்.

அப்போதுதான் அவன் யார் என்பது ராய்க்குத் தெரிந்தது. அவன் லூலுவின் சகோதரன். அவனை ராய் பல தடவை பார்த்திருக்கிறான். ஆனால் அவனுக்கு ராயைப் பற்றி அதிகம் எதுவும் தெரிந்திருக்க முடியாது.

ராயின் மனதில் உண்டான பீதியெல்லாம், லூலுவின் சகோதரனைக் கண்டதும் மறைந்து விட்டது.

ஏனெனில் தன் அருமை லூலுவின் சகோதரனால் தனக்கு எவ்விதத் தீங்கும் நேராது என்பது அவன் எண்ணம்.

ஆனால் மற்ற இருவரும் கால் சட்டைப் பைக்குள் கையை விட்டுக் கொண்டு நின்றது ராய்க்குப் பிடிக்கவில்லை. அந்தப் பைக்குள் இருப்பது என்ன என்பது அவனுக்குத் தெரியும். அவர்கள் கைத் துப்பாக்கிகளை எதற்காக வைத்துக் கொண்டு அப்படி மரம்போல் நிற்க வேண்டும்?

கதவு திறக்கப் பட்டதும் ராய் அவசரமாக வெளியே செல்லுவதற்கு எழுந்தான்.

"எங்கே எழுந்திருக்கிறாய்? கொலைகாரா! நீ எங்கள் கையிலிருந்து தப்பிவிட முடியாது" என்று சீறினான் லூலுவின் சகோதரன்.

கொலைகாரனா! யார் கொலைகாரன்?

ராய்க்கு ஒன்றுமே புரியவில்லை. லூலுவின் சகோதரன் தன்னைக் கொலைகாரன் என்று கூறுவதென்றால்......!

லூலுவுக்கோ அல்லது அவளுடைய சகோதரனுக்கோ தீங்கு விளைவிப்பதைக் காட்டிலும் ராய் தன் உயிரையே விட்டு விடுவான். அப்படியிருக்க, தன்னை ஏன் கொலைகாரன் என்று லூலுவின் சகோதரன் கூறுகிறான்?

"நீக்ரோப் பதரே! லூலுவுக்காக வஞ்சம் தீர்க்கவே நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். பாவம், லூலு! என்னிடம் அவள் ஒன்றும் சொல்லவில்லை. இருந்தாலும் உன் இரகசியம் எல்லாம் எனக்குத் தெரியும்" என்று கர்ஜித்தான் லூலுவின் சகோதரன்.

அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை.

அவன் கண்களிலிருந்து பெருக்கெடுத்த நீர் தாரை தாரையாக வழிந்தது.

ராயின் பிரமை முற்றிலும் நீங்கியது. முதல் நாள் நிகழ்ந்த சம்பவங்கள் எல்லாம்



அவனுக்கு அப்போது தெளிவாக ஞாபகத்துக்கு வரலாயின.

அவன் முதல் நாள் லூலுவைப் பார்ப்பதற்காக அவளுடைய அறைக்குச் சென்றபோது, அறைக்குள் யாரோ உரத்த குரலில் பேசியது கேட்டது.

"நீ ஒரு நீக்ரோ இளைஞனைக் காதலிப்பதாக நான் கேள்விப்பட்டேன். அது உண்மையா?"

"இல்லவே இல்லை. உன்னிடம் அவ்விதம் யாரோ கதை கட்டி விட்டிருக்கிறார்கள்"

"அது உண்மையாயின், நமது சமூகத்துக்கே இழிவான காரியத்தில் இறங்கியிருக்கும் உன்னை என்ன செய்வேன், தெரியுமா?"

"அது உண்மையல்ல. நீ என் அருகில் வந்தால் கூச்சலிடுவேன்" என்றாள் லூலு.

ராய் அதற்குமேல் வாசற்படியில் தயங்கி நிற்கவில்லை. லூலுவுக்கு ஏதாவது ஆபத்து நேருமோ என்று பயந்து, தாளிடாமல் மூடப் பட்டிருந்த கதவைத் திறந்து கொண்டு உள்ளே பாய்ந்து சென்றான்.

அவ்வளவுதான்! உள்ளே ஆக்ரோஷத்துடன் நின்று கொண்டிருந்த வெள்ளை இளைஞனுக்கு இதைவிட வேறு என்ன ருஜு வேண்டும்?

அவன் கண்மூடிக் கண் திறப்பதற்குள், அங்கு கிடந்த நாற்காலி யொன்றைத் தூக்கித் தன்

பலம் கொண்ட மட்டும் ஆலுவின் தலையை நோக்கி வீசி எறிந்தான். அடுத்த நிமிஷம் அங்கிருந்து ஓட்டம் பிடித்தான்.

'ஹா' என்று அலறிக்கொண்டு ஆலு கீழே விழுந்தாள். அவள் மண்டையிலிருந்து உதிரம் ஆறாகப் பெருகத் தொடங்கியது.

அந்தக் கோரமான காட்சியைக் கண்டு ராய் துடிதுடித்துப் போனான். அவனுக்கு அப்போது அந்த இளைஞனை விரட்டிச்செல்ல வேண்டும் என்று தோன்றவில்லை. அவன் ஆலுவை அந்த நிலைமையில் விட்டுச் செல்ல விரும்பாததே அதற்குக் காரணம்.

“என் அருமை ஆலு” என்று கூறிய வண்ணம் ராய் அவளைத் தூக்கினான்.

ஆலுவுக்குப் பிரக்ஞையில்லை. அப்படியே அவளைத் தூக்கிக் கொண்டு ராய் டாக்டர் வீட்டை நோக்கி வேகமாகச் சென்றான். அவன் கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது.

டாக்டரும் வெள்ளையர்தான். ஒரு நீக்ரோ வெள்ளைப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு வருவதை அவர் வெறுப்புடனும் ஆத்திரத்துடனும் பார்த்தார். அவரது சந்தேகப் பார்வை, “இந்தப் பெண்ணை ஏன் கொன்றாய்?” என்று கேட்பது போலிருந்தது.

பெண்ணைப் பரிசோதித்த டாக்டர், “இனி எதுவும் செய்வதற்கில்லை” என்றார். ராய் ஹோவென்று கதறினான்.

அவனைச் சிறிது நேரம் அடுத்த அறையில் உட்கார்ந்து கொண்டிருக்கும்படி கூறினார் டாக்டர். டாக்டர் அப்போது என்ன சொன்னாலும் “யாதொரு ஆட்சேபணையுமின்றிக் கேட்பதற்குத் தயாராக இருந்தான் ராய்.

அடுத்த அறையில் இருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த ராயின் கண்களுக்கு எதிரில் ஆலு புன்முறுவலுடன் நிற்பது போல் தோன்றியது. அடுத்த விநாடி அவனுக்கு இந்த உலகமே ‘கிர்’ என்று சுழல்வது போல் இருந்தது.

* * *

முதல்நாள் அதற்கு மேல் என்ன நடந்தது என்பது அவனுக்குச் சரிவர ஞாபகத்துக்கு வரவில்லை. எனினும் என்ன நடந்திருக்கக் கூடும் என்பதை அவன் ஒருவாறு ஊகித்துக் கொண்டான்.

அவன் அடைக்கப்பட்டிருந்த அறையின் கதவு திறக்கப்பட்டு, அவன் எதிரில் ஆலுவின் சகோதரன் நின்றது, அவன் ஊகித்தது முற்றிலும் சரி என்பதை நிரூபிப்பது போல் இருந்தது!

முதல்நாள் ஆலுவின் அறையில் நடந்த சம்பவத்தை விவரமாக அவளுடைய சகோதரனிடம் கூற ராய் விரும்பினான். எனினும் அவனால் பேச முடியவில்லை. அதையெல்லாம் சொல்லுவதற்கு இப்போது என்ன அவசரம் என்று தோன்றியது அவனுக்கு!

ஆலுவின் சகோதரன் உள்பட மூன்று வெள்ளை இளைஞர்களும் தங்களிடம் அகப்பட்டுக் கொண்ட ஒரு கொடிய மிருகத்தைப் பார்ப்பது போல் ராயைக் கண் கொட்டாமல் குரூரமாகப் பார்த்தனர். அவர்களுடைய முகத்தில் தென்பட்ட வெறியைக் கண்டு ராயின் தேகம் அவனை அறியாமலேயே நடுங்கியது. அச்சமயத்தில் அவனுக்கு எல்லாம் கனவு போல் தோன்றியது.

அப்போது ஆலுவின் சகோதரன் மற்றொருவன் கொடுத்த கைத் துப்பாக்கியை வாங்கிக் கொண்டான். அதற்குமேல் என்ன நடந்தது என்பது ராய்க்குத் தெரியாது.

அவர்கள் நின்று கொண்டிருந்த கட்டிடமே அதிரும்படியாக ஒரு சப்தம் கேட்டது. அந்தச் சப்தம் ராய்க்குத் தன் மண்டையில் ஏற்படுவது போலிருந்தது. அப்போது அவனுக்குத் தன்னை இருள் சூழ்ந்து கொள்வது போல் தோன்றியது.

வழக்கம்போல் ராய் அச்சமயத்தில் ஒரு கனவு கண்டான். தான் ஒரு பட்சியாக மாறி இறக்கைகளுடன் ஆனந்தமாக ஆகாயத்தில் பறப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. ஆலுவும் அவனுடன் சேர்ந்து பறப்பதைக் கண்டு அவனுடைய ஆனந்தம் பன்மடங்கு அதிகமாயிற்று.

எப்போதும் அத்தகைய இன்பக் கனவு முடிந்து ராய் விழித்துக் கொள்வது உண்டு. ஆனால் இந்தத் தடவை அவன் கனவு கலைந்து விழித்துக் கொள்ளவே இல்லை!

சேர்மாதேவி குருகுலத்தில் ஆசிரியராக இருந்தவரும் செட்டிநாட்டில் சிராவயல் காந்தி ஆசிரம ஸ்தாபகர்களில் ஒருவரும் தற்போது நாகர்கோவில் கல்கி, தினமணி, முதலிய பத்திரிகைகளின் ஏஜண்டுமான ஸ்ரீ கும்பலிங்கம் அவர்களின் புதல்வி செல்வி **கஸ்தூரிபாய்க்கும்** இரணியல் ஸ்ரீ பி. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் புதல்வன் செல்வன் **அருணாசலம் பிள்ளைக்கும் 14-11-52** அன்று இரணியலில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. காலை முகூர்த்தத்தின் போதும் மாலை நடைபெற்ற வரவேற்புக்கும் திருவிதாங்கூர் தமிழ்நாட்டிலிருந்தும் பல அன்பர்கள் வந்து கலந்து கொண்டனர். மணமக்களுக்கு நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. **வாழ்க கஸ்தூரிபாய் - அருணாசலம் பிள்ளை!**

# மலேரியா 15 வயதிற்குட்பட்ட குழந்தைகளைத் தீவிரமாகத் தாக்குகிறது

இவ்வாறுதான் மலேரியா நம் நாட்டிற்குக் கோரமான சேதத்தை நிரந்தரமாக விளைவித்துக் கொண்டிருக்கிறது.

குழந்தைகளின் வருங்கால ஆரோக்கியத்திற்கும் அறிவிற்கும் உறுதியான அஸ்திவாரம் அமைக்கப்படவேண்டிய இளம் பிராயத்தில் மலேரியா அவர்களுடைய ஆரோக்கியத்திற்கும் அறிவிற்கும் தீங்கிழைக்கிறது.

மலேரியாவிலிருந்து குழந்தைகளுக்கு வேண்டிய பாதுகாப்பை அளிக்காமலிருப்பது அவர்களுடைய வருங்கால க்ஷேமத்தையும், குடும்பத்தின் சுகத்தையும் தேசத்தின் நலனையும் புறக்கணிக்கும் பெரிய குற்றமாகும்.

உங்களுடைய குழந்தைகளை மலேரியாவிலிருந்து காப்பாற்ற அவர்களுக்கு 'பாலுட்ரின்' கொடுக்கும்படி வற்புறுத்துகிறோம்—நீங்களும் அப்பாதுகாப்பை அடையும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். 'பாலுட்ரினை' சிறு குழந்தைகளும் கர்ப்பவதியான ஸ்திரீகளும் யாதொரு தீங்குமின்றி ஒழுங்காக உட்கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:

முதலில் குளிர் [illegible] நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—<u>உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள்.</u> மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

## மலேரியாவை வீழ்த்துகிறது

### அளவுமுறை

சிகிச்சைக்கு: வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

பாதுகாப்பிற்கு: மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.







எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 77

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 43. திரிகோணாசனம்

**செய்யும் விதம் :** கால்களை அகல விரித்து முதல் சித்திரத்தில் உள்ளபடி நிற்கவும். இரண்டு கால்களுக்கு இடையில் அவரவர்களின் உயரத்துக்குத் தக்கபடி இரண்டடி முதல் மூன்றடி வரை, ஒரு குதிக்காலுக்கும் மற்றொரு குதிக்காலுக்கும் இடையில் இடைவெளி இருக்கலாம். அல்லது அவரவர்களின் கையளவுக்கு நான்கு சாண்கள் வரை இருக்கலாம். நேராய் நிமிர்ந்து நிற்கவும். இரு கைகளையும் தோள்களுக்கு நேராய்ப் பக்கவாட்டில் நீட்டவும். உள்ளங்கை தரையைப் பார்த்தாற் போல் வைத்துக் கொள்ளவும். முதல் சித்திரத்தைக் கவனிக்கவும். இப்பொழுது மூச்சை நன்றாய் இழுத்துக் கொள்ளவும். பின், மூச்சை இலேசாய் விட்டவாறே வலது கைப்பக்கம் இடுப்பை வளைத்துக் குனிந்து வலது கை விரல்களின் நுனி வலது காலின் கணுக்காலை ஒட்டினாற்போல் தரையைத் தொடவும். இடது கை நேராய் வளையாமல் இரண்டாவது சித்திரத்தில் உள்ளபடி இருக்க வேண்டும். தலையைத் திருப்பி இடது கை விரல்களின் நுனியைப் பார்க்கவும். இந்த நிலையில் ஏழு முதல் பத்து எண்ணும்வரை இருக்கலாம். கீழே குனிந்து கை விரலினால் தரையைத் தொடும்வரை மூச்சை விட்டுக்கொண்டே வந்து தொட வேண்டும். பின் அதே நிலையில் ஏழு அல்லது பத்து எண்ணும்வரை இருக்கும்போது இலேசாய் மூச்சை விடவும் இழுக்கவும் செய்யலாம். பின் மூச்சைத் தீர்க்கமாய் இழுத்தவாறே நேராய் நிமிர்ந்து பழையபடி முதல் சித்திர நிலைக்கு வரவும்.

கைகளைக் கீழே உடனே தொங்கப் போட்டு விடாமல் அப்படியே ஐந்து முதல் ஏழு எண்ணும் வரை நிற்கவும். பிறகு முன்போல் மூச்சை நன்கு இழுத்துக் கொண்டு, பின் மூச்சை விட்டுக் கொண்டே இடது கைப் பக்கம் இடுப்பை வளைத்துக் குனிந்து, இடது கைவிரல் நுனிகள் இடது காலின் கணுக்கால்களுக்கு ஒட்டினாற்போல் தரையில் படும்படி மூன்றாவது சித்திரத்திலுள்ளபடி செய்யவும். இந் நிலைக்கு வரும்வரை மூச்சை விட்டுக் கொண்டே வந்து இதே நிலையில் ஏழு அல்லது பத்து எண்ணும்வரை லேசாய் மூச்சை விட்டுக் கொண்டும் வாங்கிக் கொண்டும் இருக்கவும். பின் நன்றாய் மூச்சை இழுத்தவாறே நிமிர்ந்து பழையபடி முதல் சித்திர நிலைக்கு வரவும். இவ்வாறு இரண்டு பக்கங்களிலும் குனிந்து செய்தால் ஒரு திரிகோண ஆசனம் செய்ததாகும். இம்மாதிரி அவரவர்களுக்கு வேண்டிய அளவு மூன்று முதல் பத்து பன்னிரண்டு தடவைகள் வரை செய்யலாம். இந்த ஆசனம் செய்யும்போது முன் பக்கம் குனிந்து தரையைத் தொடாமல், சிறிது கவனம் வைத்துப் பக்கங்களிலேயே குனிந்து தரையைத் தொட முயற்சி செய்ய வேண்டும். முன் பக்கம் குனிந்தால் செய்வதற்கு இலேசாகவும் இருக்கும். ஆனால் எதிர்பார்த்த பலன் கிடைப்பதில் சிறிது குறையும். பக்கவாட்டில் சாய்ந்து தொடுவதில் சிறிது சிரமம் இருந்தாலும், தரையைக் கைவிரல்களால் தொட முடியாவிட்டாலும் பரவாயில்லை. முடிந்த அளவு பக்கத்தில் சாய்ந்து செய்தால் போதும். சிலருக்குத் தரை ஒரு சாண் உயரம்கூட இருக்கும். அதனால் பாதகமில்லை. ஆரம்பத்தில் சிலருக்கு அம்மாதிரி தான் செய்ய வரும். இருப்பினும் பலனில் குறைவு உண்டாகாது. செய்யச் செய்ய சில நாட்களில் தரையைத் தொட வரும். சிலர் தரையைத் தொட வேண்டுமென்று முழங்காலை மடித்துக் கொண்டு தொடுவார்கள். அவ்வாறு செய்யக் கூடாது. முழங்கால்களை மடிக்காமல் முடிந்த மட்டும் செய்வதுதான் நல்லது.

இந்த ஆசனத்தை வயதானவர்கள்கூடச் செய்யலாம். இது பார்க்க மிக இலேசாய், வெகு சாதாரணமாக இருந்தாலும் பலன் தருவதில் மிக உயர்ந்தது. ஆசனம் செய்வதற்குச் சோம்பல் இருக்கிறதென்றால் முதலில் ஐந்தாறு தடவை இந்த ஆசனத்தைச் செய்துவிட்டால் சோம்பல் எல்லாம் பறந்துவிடும். மற்ற ஆசனங்களையும் செய்ய வேண்டுமென்ற பிரியத்தை உண்டாக்கும். இதை எழுந்து நின்று செய்யக்கூட சக்தி யில்லாதவர்கள் படுத்தவாறேகூடச் செய்யலாம். இவ்வாறு ஓரிரு மாதங்கள் செய்து வந்தால் படுத்த படுக்கையாய் இருப்பவர்கள்கூட எழுந்து நிற்க, நடமாடச் சக்தி உண்டாகிவிடும் என்று யோக நூல் கூறுகிறது. இந்த ஆசனம் செய்வதால் அர்த்த திரிகோணாசனம் பூர்த்தியாகிறது. இது மிகச் சாதாரணமான திரிகோணாசனம். இதை அர்த்த திரிகோணாசனம் எனலாம். முழு திரிகோணாசனம் வேறு இருக்கிறது. அது இதைவிடச் சற்று கஷ்டமானது. முதல் அர்த்த திரிகோணாசனம் சரியாய்ச் செய்ய வந்த பின் இதைத் தொடர்ந்து செய்து வரலாம்.

முழு திரிகோணாசனம் செய்யும் விதம் :— முதலில் சொன்னபடி முதல் சித்திரத்திலுள்ளபடியே கைகளைப் பக்கங்களில் நீட்டிக் கால் இடைவெளி மூன்று அடி விட்டு நிற்கவும். மூச்சை நன்றாய் இழுத்துக் கொள்ளவும். கைகளைப்



பக்கங்களில் கீட்டியவாறே இடுப்பை இடதுபக்கம் திருப்பி வலது கை விரல்கள் இடது கணுக்கால் சமீபம் தரையைத் தொடவும். இடது கை மேல் தூக்கி நிமிர்த்தித் தலையைத் திருப்பி இடது கை நுனி விரல்களைப் பார்க்கவும். நான்காவது சித்திரத்தைக் கவனிக்கவும். இந்த நிலை வரும்போது மூச்சை விட வேண்டும். பின் இதே நிலையில் ஏழு அல்லது பத்து எண்ணும் வரை சாதாரணமாய் முடிந்தவரை இலேசாய் மூச்சை இழுத்துவிட்டுக் கொண்டு இருக்கவும். பிறகு மூச்சை இழுத்தவாறு நிமிர்ந்து முதல் சித்திர நிலைக்கு வரவும். பின் இடுப்பை மட்டும் வலது பக்கம் நன்றாய்த் திருப்பவும். பின் மூச்சை விட்டுக் கொண்டே குனிந்து இடது கை விரல்கள் வலது கணுக்காலின் சமீபம் தரையில் படத் தொடவும். இப்பொழுது மூச்சைப் பூராவும் விட்டு விடவும். வலது கை மேல் நோக்கித் தூக்கி யிருக்கத் தலையை வலது பக்கம் திருப்பி வலது கை நுனி விரல்களைப் பார்க்கவும். ஐந்தாவது சித்திரத்தைக் கவனிக்கவும். இந் நிலையில் ஏழு முதல் பத்து எண்ணும் வரை இருக்கலாம். இப்படி இருக்கும்போது இலேசாய் மூச்சை விட்டுக் கொண்டும் இழுத்துக் கொண்டு மிருக்கலாம். பின் மூச்சை இழுத்துக் கொண்டே நிமிர்ந்து பழையபடி முதல் சித்திர நிலைக்கு வரவும். கைகள் வளையாமல், கோணாமல் அப்படியே நேராய் வைத்துக் கொண்டு ஏழு முதல் பத்து விநாடி யிருக்கலாம். இவ்வாறு இரண்டு பக்கமும் செய்தால் ஒரு முழு திரிகோணாசனம் செய்த மாதிரி. இதை அவரவர்கள் இஷ்டப்படி மூன்றிலிருந்து ஆறு அல்லது ஒன்பது தடவை வரை தொடர்ச்சியாகச் செய்து வரலாம்.

பூராவும் படத்திலுள்ளபடியே செய்ய வந்த பின்தான் பலன் என்பதில்லை. அவர்களின் சரீரத்திற்குத் தக்கபடி முடிந்த அளவு பக்கங்களில் குனிந்தாலும், பூர்ண பலன் என்னவோ உண்டு. சிலர் ஒரு பக்கம் குனிந்து திரிகோணாசனம் செய்து விட்டு ஒன்றும் பாதியுமாய் நிமிர்ந்து மறு பக்கம் உடனே குனிந்து விடுவார்கள். நேராய் நிமிர்ந்து நிற்க மாட்டார்கள். அப்படிச் செய்யாமல் ஒவ்வொரு தடவை செய்தானதும் இரண்டாவது சித்திரத்தில் உள்ளபடி நேராய் நிமிர்ந்து ஆரம்ப நிலைக்கு வந்து முதுகை நன்றாய்ப் பின்னுக்கு நிமிர்த்தி நின்று ஏழு விநாடிகளுக்குப் பின்னர்தான் மறு பக்கமாகச் செய்ய வேண்டும்.

வழக்கமாய் ஆசனங்களைச் செய்து கொண்டு வரும் ஸ்திரீகள் கர்ப்பமானால், இரண்டு மாதங்கள் வரை இரண்டு வித திரிகோணாசனங்களும் செய்யலாம். பிறகு ஒரு மாதம் வரை முதலில் சொன்ன அர்த்த திரிகோணாசனம் மட்டும் செய்யலாம். கர்ப்பம் கொண்ட பெண்மணிகள் புதிதாய் ஆசனம் செய்ய வேண்டுமென்று விரும்பங் கொண்டால் முதலாவது முறை மட்டும் மூன்று மாதங்கள் வரை செய்யலாம். இரண்டாவது முறையின்படி முழு திரிகோணாசனம் செய்யவே கூடாது. வீட்டு விலக்கானவர்கள், விலக்காயிருக்கும் நாட்களில் எந்த ஆசனமும் செய்யக் கூடாது.

குடல் பிதுக்கமுள்ளவர்கள் இந்த ஆசனத்தைச் செய்யக் கூடாது. ஒரு சில வயிற்று ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் இதைச் செய்யக் கூடாது. அதை ஆசன ஆசிரியர்களின் ஆலோசனையின் பேரில்தான் முடிவு செய்ய வேண்டும்.

. . .

இந்த ஆசனங்கள் எல்லாம் எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் நமது முன்னோர்கள், முனிவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. அவர்கள் தங்கள் வாழ்நாளை எல்லாம் இதில் செலவழித்து இந்த அற்புதமான ஆசன வழியை வரையறுத்து வைத்திருக்கிறார்கள். இதை யாரோ இந்தக் காலத்தில் தாம்தான் கண்டு பிடித்து விட்டது போலப் பேசினால் அதெல்லாம் வெறும் ஏமாற்று வித்தை என்பதைத் தவிர வேறில்லை.

ஆசனங்கள் சிலருக்குப் படங்களில் உள்ளது போல சரியாக வராது. அதனால் அவர்கள் செய்து வரும் ஆசனங்கள் எல்லாம் தவறு என்பது இல்லை. அவரவர்கள் இயற்கை உடல் அமைப்புக்கு ஏற்றாற் போல்தான் அமையும். இயற்கையிலேயே முதுகு, கால், கை முதலியவைகள் சரியாக இல்லாமல் இருப்பவர்கள் ஆசனங்கள் போட்டால் அது சரியாக இருப்பதுபோல் பார்ப்பதற்குத் தோன்றாது. அதனால் அவர்கள் ஆசனம் போடுவது சரியில்லை என்பது இல்லை. எதற்கும் நம்பிக்கையும் விடா முயற்சியும் தான் தேவை. "நம்பினோர் கெடுவதில்லை. இது நான்கு மறை தீர்ப்பு" என்பது மகா கவி பாரதியாரின் திருவாக்கு. (தொடரும்)






**ப**ம்பரம் சுற்றுகிறது. அதைச் சுழல விட்ட சிறுவன், "உலகம் உருண்டை வடிவமானது" என்று பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுத்ததை நினைத்துக் கொண்டு, "உலகம் சுத்துது போய்!" என்று கத்துகிறான். பம்பர-உலகத்தை உள்ளங்கையில் ஏந்திக் கொண்டு ஆனந்தக் கூத்தாடுகிறான்.

பெரிய பையன் ஒருவன் பட்டம் விடுகிறான். மேலே மேலே அதைப் பறக்க விட்டு, நூலின் வழியாக மனத்தையும் பட்டத்துடன் பறக்க விடுகிறான். வெள்ளி மேகங்களுக்கும் தங்க மேகங்களுக்கு மிடையே தாவித் தாவி, அவை கணத்துக்குக் கணம் உருமாறுவதை வியந்து பார்த்து மகிழ்கிறான்.

மாணுக்கன் ஒருவன் பாடப் புத்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு அதைப் படிக்காமல் ஏதேதோ எண்ணுகிறான்: "நான் ஒரு கவியாக இருப்பேன்; அற்புதக் கவிதைகள் இயற்றி உலகத்தைப் பிரமிக்க வைப்பேன்... பிரபல பிரசங்கியாக இருப்பேன்; ஆயிரக் கணக்கான மக்கள் என் வாக்கு வன்மையைப் புகழ்வார்கள்...சிறந்த விஞ்ஞானியாய் இருப்பேன்; புதுப் புது மர்மங்களைக் கண்டு பிடித்து, மகா மேதாவி என்று பெயர் வாங்குவேன்...சர்க்கஸ்காரனாக இருப்பேன்; சிங்கத்தின் மீது சவாரி செய்வேன்; கரடியுடன் குஸ்தி போடுவேன்; உயர் உத்தியோகஸ்தனாய் இருப்பேன்; தாட்பூட் என்று அதிகாரம் செய்வேன்...பெரிய வர்த்தகனாய் இருப்பேன்; லட்சம் லட்சமாய்ச் சம்பாதித்து, ஆடம்பரமாய் வாழ்வேன்; ஆயிரம் ஆயிரமாய் நன்கொடை வழங்குவேன்; அடுக்கு மாளிகை கட்டுவேன்; காரில் விரைந்து செல்வேன்...

இன்னொருவன் ஒருவன், கற்பனைக் காதல்-உலகத்தில் எழில் மங்கையருடன் ஆடிப் பாடுகிறான்; சுந்தர வல்லிகளுடன் உல்லாசப் படகில் ஊர்ந்து செல்லுகிறான்; ஒய்யாரிகளுடன் வெண்ணிலவில் விளையாடுகிறான்.

குடும்பஸ்தன் ஒருவன், உழைத்துக் கொண்டும் மனைவி மக்களை ஆதரித்துக் கொண்டும் ஒரு காளைப்போல மறுகாளாக, அலுத்துச் சலித்துக் கொண்டு காலந் தள்ளுகிறான்.

மேலே சொன்ன சிறுவன் முதல் குடும்பஸ்தன் வரை எல்லோரும் ஒரே ஆள்தான். அந்த ஒரே ஆளும் நானேதான். ஏன், நீங்களாகவும் இருக்கலாம்!

வெவ்வேறு இயல்பான இப் பருவங்களைக் கடந்து, நாற்பதாவது வயதை அடைந்திருக்கிறேன். இளமையின் இறுதியையும் முதுமையின் துவக்கத்தையும் குறிப்பிடும் இந்தக் கட்டத்தை, ஒரு விசேஷமாகக் கொண்டாடினால் என்ன? நன்றாகக் கொண்டாடலாம்; ஆனால், அதற்கு வரும் உற்றார் உறவினர் கைத்தடி, கைவல்யம், ருத்ராக்ஷமாலை முதலியவற்றைப் பரிசாகக் கொடுப்பார்களோ என்னவோ என்று பயமாய் இருக்கிறது.

**எ**னக்கு நாற்பது வயது ஆகிறது என்பதை என்னை நேரில் பார்க்கிறவர்கள் ஒப்புக் கொள்வதில்லை. முப்பத்தைந்துதான் இருக்கும் என்று மதிப்பிடுகிறார்கள். ஆயினும், சமீபத்தில் ஒருவர், என் வயதை 'டாண்' என்று கணக்காக மதிப்பிட்டு விட்டார்.

அவர், கண் வைத்தியர். "புஸ்தகத்தை எட்டப் பிடித்துப் படிக்க வேண்டியதாய் இருக்கிறது; அப்போதும் சிரமமாய் இருக்கிறது" என்று அவரிடம் சொன்னேன்.

"சரிதான், உங்களுக்கு வெள்ளெழுத்து வந்து விட்டது; வயசு என்ன நாற்பதாகிறதா?" என்று பளிச்சென்று கேட்டார் அவர்.

"இட்டத்தட்ட ஆகிறது" என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினேன்.

"பரவாயில்லை, எனக்குந்தான் ஆகிறது" என்று அவர் என்னைத் தேற்றி, ஏ. பி. ஸி. படிக்கச் செய்து, சாளேசரக் கண்ணாடி ஒன்றை மாட்டி விட்டார். அதைப் போட்டுக் கொண்டு படித்துப் பார்த்தேன்; கொஞ்சம் கூடச் சிரமமின்றிப் படிக்க முடிந்தது.

அந்த சந்தோஷத்துடன் மூக்குக் கண்ணாடியும் முகமும் ஜம்மென்று இருக்கிறதா என்று பார்த்துக் கொள்வதற்காகப் பக்கத்திலிருந்த நிலைக் கண்ணாடியை நோக்கினேன். என்ன ஏமாற்றம்! என்னை எதிர் நோக்கிய முகம் கிழட்டு முகமாய் இருந்தது. நானே என் வயதை, அசல் வயதுடன் இன்னும் ஐந்து கூட்டி மதிப்பிடும்படியாய் இருந்தது.

"இது என்ன, மூக்குக் கண்ணாடியின் கோளாறு, நிலைக் கண்ணாடியின் கோளாறு அல்லது என் முகத்தின் கோளாறு?" என்று நான் கேட்டேன்.

"மூன்றும் அல்ல; உங்கள் மனக் கண்ணின் கோளாறுதான்" என்று அந்தக் கண் வைத்தியர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"உங்களுக்கென்றே 'யௌவன பிரேம்' ஒன்றைப் பொறுக்கிக் கொடுத்திருக்கிறேன்" என்று அவர் மேலும் சொல்லி என் மனக் கண்தான் கோளாறு என்பதைச் சிரமப்பட்டு நிரூபிக்க முயன்றார்.

'யௌவன பிரேம்' என்றதும் ஞாபகம் வந்தது. நான் பிடுக்கான வாலிபனாய் இருந்தபோது ஒரு நாடகத்தில் கிழட்டு வாத்தியாராய் நடிப்பதற்கென்று, பல இடங்களில் தேடி, கிழட்டு மூக்குக் கண்ணாடி ஒன்றை வாங்கினேன். அதைப் போட்டுக் கொண்டு ரொம்ப ரொம்ப ஆனந்தமாய் நடித்தேன். ஆனால் இப்போது அந்த நாடகத் தோற்றத்தில் பாதி நிஜத் தோற்றமாய் வந்திருப்பதை எண்ணி, ஆனந்தம் அடைய முடிகிறதா?

"வயோதிகம் வந்தால் என்ன? இன்னும் எவ்வளவோ வேடிக்கை இருக்கிறது!" என்று ஒரு புலவர் கூறுகிறார். ஆம், உண்மைதான்! எவ்வளவோ வேடிக்கை இருக்கத்தான் செய்கிறது! கால்களுக்கு உதவியாகக் கழி ஒன்றை ஊன்றிக்கொண்டு நடக்கலாம். பொக்கை வாயால் பேசலாம்; அல்லது பொய்ப் பல் வைத்துக்கொண்டு இளிக்கலாம். துண்டின்றியே தலையைத் துவட்டிக் கொள்ளலாம்; சீப்பின்றியே அதை வாரிக் கொள்ளலாம். கோமாளி மாதிரி உடை அணிந்து கொள்ளலாம். விதவிதமான மருந்துகளைச் சாப்பிடலாம். பென்ஷன் பணத்தைத் தடவித் தடவி எண்ணிப் பார்க்கலாம். "உங்களால் மூறுக்குத் தின்ன முடியுமோ?" என்று ஒரு பேத்தி கேட்பாள். "உங்கள் தலை ஏன் தாத்தா வழுக்கையாயிருக்கு?" என்று ஒரு பேரன் கேட்டு விட்டுச் சிரிப்பான்.

"ஆஹா இவர் என்ன அழகு.
என்ன ஒழுங்கு,
தலை மழுங்கு—பேஷ் பேஷ் பேஷ்!
தோந்தி சரிந்து
தந்தம் விழுந்து—பேஷ் பேஷ் பேஷ்!"

இந்தப் பாட்டு இருபது வருஷங்களுக்கு முன்னால் நாடகங்களில் பிரபலமாய் இருந்தது. தரை மகா ஜனங்கள் இதைக் கேட்டு விழுந்து விழுந்து சிரிப்பார்கள். அவர்களுக்கு மேலும் சிரிப்பு மூட்டுவதற்காக, நாடகக் கிழவன் வழுக்கைத் தலையை ஒரு தரம் தடவிப் பார்த்துக் கொள்வான்.

இந்த வழுக்கை இருக்கிறதே, இது ஆண்களுக்கென்றே பாரபட்சமாய், இயற்கை இழைக்கும் கொடுமையாகும். பெண்களுக்குத் தலை நரைக்கலாம்; அடர்த்தி குறைய



லாம். ஆயினும், சாதாரணமாய் அவர்களுக்கு ஆண்களின் தலையில் விழுவதுபோல் வழுக்கை விழுவதில்லை. ஆண் 'ஹார்மோன்'களின் செய்கையால் இந்த வழுக்கை விழுகிறது என்றும் இதற்கு நிவர்த்தியே கிடையாது என்றும் விஞ்ஞானிகள் நீண்ட காலமாக ஆராய்ந்து தெரிவித் திருக்கிறார்கள்.

** ** **

நாலைந்து வருஷங்களுக்கு முன்னால், என் நெற்றி அகலமாகத் துவங்கியது. அது பற்றி, முதலில் சந்தோஷப் பட்டேன், நம்மை எல்லோரும் பெரிய அறிவாளி என்று நினைத்துக் கொள்வார்கள் என்று! ஆனால், மேலும் மேலும் நெற்றி விசாலமடையவே, மிகவும் கவலைப் படலானேன்; அந்தக் கவலையினால், இன்னும் அதிகமாய் வழுக்கைபடரலாயிற்று. கொஞ்சமேனும் பாக்கி இருக்கிறவரை, கவலையும் இருந்து கொண்டுதான் இருக்கும். முழுதும் வழுக்கையாகி விட்டால், கவலைக்கே சிறிதும் இடமிராது!

ஹார்மோன்களின் விஷமத்தைக் கண்டு பிடித்த விஞ்ஞானிகள், நிச்சயம் வழுக்கைத் தலையர்களாய்த்தான் இருந்திருக்க வேண்டும். அடர்த்தித் தலையர்களான வாலிபர்கள், இப்படியெல்லாம் அரிய உண்மைகளைக் கண்டு பிடிக்க முடியுமா என்ன? இளைஞர்கள், பரட்டைத் தலையும் தானுமாய், ஓட்டப் பந்தயங்களில் ஜயிக்கலாம்; ஏரோப்ளேன் ஓட்டலாம்; வீரதீரச் செயல்கள் ஆற்றலாம். ஆயினும் என்ன? வழுக்கைத் தலையர்களைப் போல், மகா மேதாவிகளாய் இருக்க முடியுமா? இந்த உலகத்தை ஆளும் தலைவர்களைப் பாருங்கள்; அதாவது அவர்களுடைய தலைகளைப் பாருங்கள். அவற்றில் நூற்றுக்குத் தொண்ணூறு வழுக்கையாய் இருக்கும். அரசியல் மகாநாடுகளிலும் சர்வதேசக் கூட்டங்களிலும் கலந்து கொள்ளும் பிரதிநிதிகளின் படங்களைப் பாருங்கள். எல்லாம் வழுக்கை மயமாய் இருக்கும். தலைமை வகிப்பதற்கு, வழுக்கைத் தலை இன்றியமையாதது என்றே சொல்லலாம். இன்னும் இப்படி உலகத்து அறிஞர்களின் தலைகளை எல்லாம்,- வழுக்கைத் தலைகளைத்தான், உதாரணத்துக்கு எடுத்துக் காட்டலாம்.

வழுக்கை இல்லாவிட்டால் நரை! இவற்றில் எதைவிட' எது அழகானது? ஆம், எது அழகானது என்றுதான் கேட்கிறேன். இதற்குப் பதில் இரண்டும் அழகானவைதான் என்று சொல்லலாம். சந்தேகப்படுகிறவர்களுக்கு இரண்டே இரண்டு பெயர்களைத் தெரிவிக்கிறேன். ஒன்று, மகாத்மா காந்தி! இரண்டு, ரவீந்திரநாத டாகூர்! புகழ் சூடிய சிரசுக்கு, வழுக்கையும் அழகுதான்; நரையும் ஒரு தனி அழகுதான்.

மகாத்மா காந்தியும், கவி டாகூரும், முதுமையின் அழகுக்கு எடுத்துக் காட்டாய் இருந்தார்கள். உயர் புகழுக்கு ஏற்ற உத்தமர்களாய் இருந்தார்கள். ஆயினும் அவர்கள், புகழுக்காக முதுமைவரை காத்திருக்கவில்லை. எனக்கு இப்போது ஆகும் வயதுக்கு உள்ளாகவே, எவ்வளவோ நல்ல காரியங்களையும் இனிய காரியங்களையும் சாதித்து விட்டார்கள். இன்னும் பல பேர், நாற்பது வயதுக்குள் சாதித்துள்ளவற்றை, சோம்பேறியாகிய நான், சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு வாசித்திருக்கிறேன். "இந்த நாற்பது வயசுக்குள் எத்தனையோ நல்ல காரியங்களைச் செய்திருக்கலாமே" என்று எண்ணுகிறேன். "எத்தனையோ கெட்ட காரியங்களைச் செய்யாமல் இருந்திருக்கலாமே" என்றும் எண்ணி எண்ணி ஏங்குகிறேன்.

போன இளமை திரும்பாது. என்ன பாடு பட்டாலும் திரும்பி வரவே வராது. காலம் செய்யும் கோலத்தைத் தடுக்க முடியாது. உடல் வாடத்தான் செய்யும்; வலிமை குன்றத்தான் செய்யும். ஆயினும் கூட, உள்ளத்திலே சிறுவனாகவும் யுவனாகவும் இருக்கலாம் அல்லவா? அனுபவ விநோதங்களைப் பம்பரமாய்ச் சுழலவிட்டு வேடிக்கை பார்க்கலாம். சிந்தனைப் பட்டத்தைக் களங்கமற்ற வெளியில் பறக்க விட்டு, ஆனந்தம் அடையலாம். ஞான மாணாக்கனாய் இருந்து, மர்மக் கேள்விகளுக்கு விடை காண முயலலாம். பெண்ணாசையைப் புனித ஆசையாக மாற்றிக் கொண்டு ஆனந்தப்படலாம்.

## நடன அரங்கேற்றம்



சென்ற 14-ம் தேதி சென்னை ரஸிக ரஞ்சனி சபா ஹாலில் கொச்சி சகோதரிகளின் நடன அரங்கேற்றம் சிறப்பாக நடந்தேறியது. டாக்டர் கே. ஆர். நாராயணகிரி அவர்களின் புதல்விகளான குமாரி சரோஜா, குமாரி சகுந்தலாவின் மேற்படி அரங்கேற்றத்துக்கு நீதிபதி ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள். நடனமாடிய கொச்சி சகோதரிகளையும் அவர்களுக்கு நடனம் கற்றுக் கொடுத்த நடன ஆசிரியர் நாட்டிய கலாகேசரி வழுவூர் ஸ்ரீ ராமய்யாப்பிள்ளை அவர்களையும் பாராட்டிப் பேசினார்.



பண்டிகை காலங்களிலும்
மற்ற எல்லா சமயங்களிலும்

# துஷார்

வனஸ்பதி

இருமுறை சுத்தம் செய்யப்பட்டு பக்குவம்
செய்த மேன்மையான சமையல் சாதனம்

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட். கர்நூல்

# 'SCISSORS'



1900



1925



1952




மூன்று தலைமுறைகளாகப் பிரசித்தி பெற்றவை

5½ அணாவுக்கு 10
உள்நாட்டு வரி சரிப்படுத்
தலுக் குட்பட்டது

---

## தவணைச் சலுகையில்

### உங்கள் புதிய சைக்கிளை வாங்குங்கள்



ரூ. 1,96,000/- மதிப்புள்ள சைக்கிள்கள் இதுவரை டெலிவரி செய்யப்பட்டுள்ளது. இறுதியான விலைக் குறைவு இது தான். சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள்.

ஒரு அரிய சலுகை. 25% முன்னதாக செலுத்தி பாக்கித் தொகையை ஆறு மாத தவணைகளில் செலுத்த வேண்டும். இங்கிலீஷ் சைக்கிள்கள் ரூ. 195/-, ஹிந்த் 155/-, ஹெர்குலஸ் ரூ. 245/-, பி. எஸ். ஏ. ரூ. 265/-, பிலிப்ஸ் ரூ. 235/-, ராலே கின் ரூ. 300/- டைனமோ செட் 30/- நிபந்தனைகளின்படி உடனடியான டெலிவரி. புத்தம் புதிய சரக்குகள். ஒரிஜினல் பாகங்கள். டன்லப் டயர்கள், சீட்டுக்கு உத்திரவாதம். முழு விலாசத்துடன் அருகாமையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பெயரையும் குறிப்பிட்டு உடனே எழுதுங்கள்.

## உங்கள் குழந்தைக்கு ஓர் புதிய டிரைசைகிள்




வெகு சுலபமாக ஓடும். உறுதியாக அமைக்கப்பட்டது. விலை ரூ. 25/-லிருந்து ரூ. 15/-க்குக் குறைக்கப்பட்டுள்ளது. உங்கள் முழு விலாசத்துடன் அருகாமையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பெயரை எழுதி உடனடியாக ஆர்டர் செய்யுங்கள்

MIDLAND TRADING CO., LTD., POST BOX 1987, BOMBAY-1

# திருமணப் பரிசு

## எம். எஸ். மணி

எப்போதும் உல்லாஸ நவினங்களையும் பயங்கர நாவல்களையுமே படித்து வந்த நித்திய விநாயகம் தனக்கு மணமானவுடன் மண வாழ்க்கையின் தத்துவத்தை விளக்குவதாகக் கூறப்படும் புத்தகங்களையே அதிகமாகப் படிக்க ஆரம்பித்தான். மாயக் கொலைகளின் மர்மங்களில் மூழ்கியிருந்த நித்திய விநாயகத்துக்கு வாழ்வின் தொல்லைகளை நிவர்த்திக்கும் புத்தகங்களில் திடீரென்று ருசி பிறந்ததற்குக் காரணமும் ஒரு புத்தகம் தான். மணப் பந்தலில் மனைவியின் கையைப் பிடித்துக் கொண்டிருந்த நித்திய விநாயகத்துக்குச் சில நண்பர்களிடமிருந்து விதவிதமான திருமணப் பரிசுகள் வந்தன. அவைகளில் அப் புத்தகமும் ஒன்று. ஒரு புத்திசாலி நண்பர் தம் சாதுர்யத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதற்குப் பதிலாக மறைப்பாக, "மனைவியுடன் காலக்ஷேபம் செய்வதெப்படி?" என்ற புத்தகத்தைத் தன் ஆசிச் செய்தியுடன் திருமணப் பரிசாக நித்திய விநாயகத்திடம் அளித்தார். கல்யாண காரியங்கள் முடிந்தவுடனேயே முதல் காரியமாகப் பரிசாக வந்த புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தான் நித்தியவிநாயகம்.

"புதிதாக மணம் புரிந்து கொண்ட ஒவ்வொரு நவயுக இளைஞனின் சிந்தனையைக் கிளறும் தூண்டுகோலாக இப்புத்தகம் அமையும்" என்று கலியுகக் கிளர்ச்சி எழுத்தாளரும் இப் புத்தகத்தின் ஆசிரியருமான 'உண்மைச் சொல்லி' முகவுரையில் 'நம்பி'யிருந்தபடி இப் புத்தகமும் நித்திய விநாயகத்தின் மூளையை அடியோடு கலக்க ஆரம்பித்தது.

"அடாடா! குடும்ப வாழ்க்கை என்பது இவ்வளவு பயங்கரமானதா? மனைவி எனப்படுபவள் இவ்வளவு ஆபத்தானவளா? மனைவியுடன் வாழ்க்கையைத் தள்ளுவது சாதாரணமானதென்று எண்ணியிருந்தேனே! யுத்தத்தில் எதிரிகளைச் சமாளிக்கக் கைக் கொள்ளும் பலவித உபாயங்களைப் போலல்லவா மனைவியையும் சமாளிக்க வழிகள் இதில் விவரிக்கப் பட்டிருக்கின்றன! ஆஹா! இப் புத்தகத்தை நான் படிக்க நேரிடாவிட்டால் என் கதி என்னவாகியிருக்கும்? இதைப் பரிசாக அளித்த என் தோழன் முடியழகனுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!" என்று ஏங்கினான் நித்திய விநாயகம், "இவ்வளவு ஆபத்தைக் கொடுக்கும் கல்யாணத்தை ஏன் செய்து கொண்டோம்?" என்று கூட எண்ணிப் பயப்படத் தோன்றியது அவனுக்கு.

"புது மனைவியென்பவள் ஒரு இந்திர ஜாலம். அந்த மாயையில் அகப்பட்டுக் கொண்டவன் புதுக் கணவன். அந்த ஜாலத்தின் கோலத்துக்குள் புகுந்து பெண்மையின் ஓலத்தை ஒடுக்க வேண்டும்; சீலத்தை உபயோகித்து ஓலத்தை வெல்ல வேண்டும்" என்று புத்தகாசிரியர் ஓரிடத்தில் வேகத்துடன் விளக்கியிருந்ததை நித்திய விநாயகம் படித்த போது அவன் உடம்பு வியப்பால் சொட்டச் சொட்ட வியர்த்தது.

"மனைவி என்பவள் வீட்டத்தில் வலை விரித்துக் கொண்டிருக்கும் சிலந்தியைப் போன்றவள். அந்த வலையை யறியாமல் அதற்குள் அகப்பட்டுக் கொள்ளும் ஈயே கணவன். அப்படியிருந்தும் தன்னையும் விடுவித்துக் கொண்டு சிலந்தியையும் அடக்க வேண்டும்!" என்று 'உண்மைச் சொல்லி' மற்றோரிடத்தில் உபமானத்துடன் கூறியிருந்ததைப் படித்தபோது நித்திய விநாயகத்தின் உடல் பயத்தால் சிலிர்த்தது.

இது போன்ற அநேக ஆபத்துக்களிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் குடும்ப வாழ்க்கையில் வெற்றிக் கொள்ளவும் தான் எப்படி மனைவியிடம் நடந்து கொள்ள வேண்டுமென்று ஆசிரியர் விவரித்த வழிகளை மறுபடியும் மறுபடியும் மனப்பாடம் செய்து கொண்டான் நித்திய விநாயகம். மேலும் புதிய கிளர்ச்சி எழுத்தாளர் நவயுக இளைஞர்களின் நன்மைக்காக அடுத்தாற் போல எழுதப் போகும், "மனைவியா? மாதவியா?" "வாழத் தெரியாத மனைவி", "எதிர்த்துப் பேசாத மடந்தை" ஆகிய புத்தகங்களுக்கும் உடனே 'ஆர்டர்' கொடுத்து வரவழைத்து விடுவதென்றும் தீர்மானித்தான்.

மணமான மூன்றாம் வாரம். அன்றுதான் நித்திய விநாயகத்துடன் மனைவி நடத்திய

---



டிரைவர் (கான்ஸ்டபின் கையைக் காட்டி நிறுத்தியதைப் பார்த்து):—நான் காரை வேகமாக ஓட்டவில்லையே! பத்து மைல் வேகத்தில் தானே ஓட்டிப் போனேன்?

கான்ஸ்டபிள்:— அதற்காக நான் உன் வண்டியை நிறுத்தவில்லை. என் கோட்டுப் பொத்தானைச் சுத்தம் செய்யணும். கொஞ்சம் பெட்ரோல் கொடு, அப்பா!



சென்னை ரசிக ரஞ்சனி சபா மண்டபத்தில் கைத்தொழில் மந்திரி கனம் டாக்டர் வி. கிருஷ்ணராவ் அவர்களின் தலைமையில் குமாரி ரமணியின் நடன அரங்கேற்றம் சென்ற 12ந் தேதி நடைபெற்றது. கனம் மந்திரி அவர்கள், காரைக்குடி ஸ்ரீ எஸ். பி. தியாகராஜன் சேர்வையின் புதல்வி, குமாரி ரமணியின் நடனத்தைப் பாராட்டி எதிர் காலத்தில் நடனக் கலையில் மேன்மையுற ஆசி கூறினார். குமாரி ரமணிக்கு இவ்வளவு திறமையாக நடனம் கற்றுக் கொடுத்த நாட்டிய கலா கேசரி வழுவூர் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளையை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினார்.

சத்திய சுந்தரியை அவன் வீட்டில் கொண்டு வந்து விடப் போகிறார்கள். சாதாரணமாக இளைஞர்கள் இந்த நாளை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் நம் நித்தியவிநாயகமும் மற்ற இளைஞர்களும் ஒன்று? முற்போக்குடைய மூளையும் அதைக் காலத்தின் வேகத்தில் இயக்கும் சக்தியையுமுடைய நவயுக வாலிபன், சிந்தனைச் செல்வனல்லவா நம் கதாநாயகன்!

"மனைவி ஒரு இந்திரஜாலம்; மனைவி ஒரு சிலந்தியைப் போன்றவள். அவள் வந்தவுடனேயே தன் வலையை வீசுவாள். அதற்கு நாம் இடம் கொடுக்கக் கூடாது. அவளுடைய ஒவ்வொரு செய்கைக்கும், ஒவ்வொரு சலனத்துக்கும் தக்கவாறு நாம் நடந்து சரியானபடி பதில் கொடுக்க வேண்டும்" என்றெல்லாம் அவன் மனதில் போராட்டம் எழுந்தது. அதனால் நித்திய விநாயகம் அந்த நாளை அதிக ஜாக்கிரதையுடனும் ஆழ்ந்த சிந்தனையுடனும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

• • •

நித்திய விநாயகத்துக்குத் தோழர்கள் இருந்தது போலச் சத்திய சுந்தரிக்கும் தோழியர்கள் இருக்கத்தான் செய்தார்கள். அவர்கள் அவளுக்கு மணப் பந்தலில் பரிசுகள் கொடுக்கா விட்டாலும் மணமான மறுநாள் தனித் தனியாகப் பரிசுகள் கொடுக்கத்தான் செய்தார்கள். அப்படி வந்த பரிசுப் பொருள்களிலும் ஒரு புத்தகம் இருந்தது. பயங்கர அட்டையுடன் விளங்கிய அந்த முக்கால் ரூபாய் புத்தகத்தின் பெயர் "கணவனுடன் காலந் தள்ளுவதெப்படி?" என்பது தான். புத்தக ஆசிரியையான "மெய் சொல்லாள்" ஆரம்பத்திலேயே ஒரு பயங்கர எச்சரிக்கையை விட்டிருந்தது சத்திய சுந்தரியின் மூளையைக் கலக்கியது.

"கணவன் ஒரு விரோதகன். பெண்மையின் உண்மையை அண்மையில் நிறுத்தி அவமானப் படுத்துவதற்கு அருகில் நிற்பவன் தான் கணவன் என்கிற ஆண் பிள்ளை!" என்ற வார்த்தைகளின் அர்த்தம் சத்திய சுந்தரிக்கு விளங்காவிடினும் அவை ஏதோ பயங்கரமான விஷயத்தை உணர்த்துகிறது என்பதை உணர்ந்து கொண்டாள் அவள்.

"அடாடா! கணவன் என்பவன் இவ்வளவு பொல்லாதவனா? குடும்பம் என்பது இவ்வளவு பெரிய காட்டுப் பாதையா? யுத்தத்தில் எதிரிகளை வெல்லக் கைக் கொள்ளும் முறைகளைப் போலல்லவா இதில் கணவனைச் சமாளித்து வழிக்குக் கொண்டு வர வழிகள் கூறப்பட்டிருக்கின்றன! இப் புத்தகத்தை நான் படிக்க நேரிடா விட்டால் என் கதி என்னவாக இருக்கும்? கணவன் என்ற பிராணி என்னை அடக்கி என் உரிமையை மடக்கி மீளாச் சிறையிலல்லவா தள்ளி யிருப்பான்? இதைப் பரிசாக அளித்த என் தோழி இயற்கைக் கண்ணிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்று அங்கலாய்த்தாள் சத்தியசுந்தரி. "இவ்வளவு ஆபத்தைக் கொடுக்கக் கூடிய கல்யாணத்தை ஏன் செய்து கொண்டோம்" என்று கூடத் தோன்றியது அவளுக்கு.

"புதுக் கணவன் என்பவன் பூனை உருவத்தில் வரும் ஒரு யானை. அந்த யானையை ஒரு பானையில் பிடித்து மடக்கி ஒரு ஏணையில் மாட்ட வேண்டும்; சாணையில் தீட்ட வேண்டும்" என்று ஓரிடத்தில் புத்தகாசிரியை விளக்கியிருந்ததைச் சத்திய சுந்தரி படித்த போது அர்த்தம் புரியாமல் தவித்தாள். அவள் உடம்பு வியர்த்தது.

"கணவன் என்பவன் காட்டில் வலை விரித்துக் கொண்டிருக்கும் ஒரு வேடன் போன்றவன். அந்த வலையை யறியாமல் அதற்குள் அகப்பட்டுக் கொள்ளும் புறாவே மனைவி. அப்படி யிருந்தும் தன்னை விடுவித்துக் கொண்டு வேடனையும் அடக்க வேண்டும்" என்று 'மெய் சொல்லாள்' மற்றோரிடத்தில் விளக்கியிருந்த போது சத்திய சுந்தரிக்கு உடம்பு நடுங்கியது. ஆனால் கேவலம் ஒரு புறா தன்னையும் விடுவித்துக் கொண்டு வேடனையும் எப்படியடக்கும் என்ற புதுமை வழி அவளுக்கு விளங்கவில்லை. ஆனாலும் புத்தக ஆசிரியை கூறியபடி எதிர்பாராத ஆபத்துகளிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் குடும்ப வாழ்க்கையில் வெற்றி கொள்ளவும் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தாற்போலச் சுயமூளையை உபயோகிக்கத் தீர்மானித்தாள் சத்திய சுந்தரி. மேலும் புது யுகக் கிளர்ச்சி எழுத்தாளிகள் நவயுகப் பெண்களின் நன்

மைக்காக அடுத்தாற்போல எழுதப்போகும், "கணவனு? காதகனு?", "வாழத் தெரியாத கணவன்", "மாஜி கணவனின் மாயப் போர்" முதலிய புத்தகங்களுக்கு உடனே ஆர்டர் கொடுப்பதென்று தீர்மானித்தாள்.

மணமான மூன்றும் வாரம். அன்று தான் சத்தியசுந்தரியைக் கணவன் வீட்டுக்கு அவள் பெற்றோர்கள் கொண்டுவிடப் போகிறார்கள். எல்லா பெண்களும் வெட்கத்துடன் எதிர்பார்க்கும் இந்த நாளை சத்தியசுந்தரி வேதனையுடன் எதிர்நோக்கினாள். "புத்தகத்தில் கண்டபடி கணவன் கட்டாயம் இருப்பானே! அவனுடன் நம் போராட்டம் எப்படி முடியுமோ?" என்று எண்ணிக் கலங்கினாள்.

* * *

அன்று இரவு விருந்து சாப்பிட்டான பிறகு சத்தியசுந்தரியின் கையில் ஒரு செம்பு பாலைக் கொடுத்து மேலே அனுப்பினார்கள். மெத்தை யறையில் உட்கார்ந்து கொண்டிருந்த நித்திய விநாயகத்தின் கண்கள் விட்டத்திலுள்ள ஒரு சிலந்திக் கூட்டையே நோக்கிக் கொண்டிருந்தது. சத்திய சுந்தரி நடந்துவந்த சப்தம்கூட அவனுக்குக் காதில் விழவில்லை. பயத்துடன் மெதுவாக வந்த சத்திய சுந்தரி தன் கணவனைக் கடைக் கண்ணால் பார்த்தாள். அவளுக்குக் கலவரம் உண்டாயிற்று. புத்தகத்தில் விவரித்த மனிதன் போலவே தன் கணவ னிருக்கிறானே என்ற பிரமை அவளுக்கு உண்டாயிற்று. சத்தம் செய்தால் எங்கே வேடன் புறாவைக் கொல்லுவது போலக் கொன்று விடுவானோ என்ற பயமுண்டாகவே சத்தடி செய்யாமல் அறையிலிருந்த அலமாரியியைத் திறந்து மெதுவாகத் தான் கொண்டு வந்த பால் செம்பை வைத்தாள்.

அப்படிச் செம்பை வைத்தவள் திடீரென்று பாம்பைப் பார்த்தவள் போன்று திடுக்கிட்டாள். அப்படி அவள் திடுக்கிட்டதற்குக் காரணம் ஒரு புத்தகம்தான். அப்புத்தகத்தின் சில பக்கங்களையே மேலெழுந்தவாரியாகப் புரட்டிப் பார்த்தாள். அவள் மூச்சே நின்றுவிடும் போலாய் விட்டது. உடனே ஒரு சந்தேகம் உண்டாயிற்று. முதல் பக்கத்தை மறுபடியும் திருப்பினாள். "பலாச்சுளைப் பதிப்பகம்" வெளியீடு என்றிருந்தது. மேல் கொண்டெழுந்த சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள அறையின் மூலையில் காலையிலேயே கொண்டு வைக்கப்பட்ட தன் பெட்டியை நோக்கிப் போனாள். பெட்டியின் பூட்டுத் திறந்திருந்ததைப் பார்த்து இரண்டாவது தடவையாகத் திடுக்கிட்டாள். பூட்டை எடுத்துப் பெட்டியைத் திறந்தபோது மூன்றும் தடவையாகத் திடுக்கிட்டாள். காரணம் பெட்டியில் அவள் வைத்திருந்த "கணவனுடன் காலந் தள்ளுவதெப்படி?" என்ற புத்தகம் காணப்படவில்லை! இம்மாதிரி வியப்பிலும் திகைப்பிலும் அடிபட்டுச் சத்திய சுந்தரி ஒரு கணம் உணர்விழந்திருந்தபோது மெதுவாக ஒரு கை அவள் தோளின் மீது விழுந்தது.

"சத்திய சுந்தரி! என்னை மன்னிப்பாயா?" என்ற வார்த்தை அவள் காதுகளுக்கு அமிர்தமாக இருந்தது. "இந்த 'உண்மைக் கொல்லி' யினால் என் வாழ்க்கையையும் உன் வாழ்க்கையையும் பாழாக்க விருந்தேன். அதே படத்தால் தான் உன் பெட்டியை நான் மறு சாவி போட்டுத் திறந்து சோதனை போட்ட போது நீ வைத்திருந்த புத்தகம் கண்ணில் பட்டது. ஆனால் அப் புத்தகமும் "பலாச்சுளைப் பதிப்பகம்"தான் வெளியிட்டது என்பதைப் பார்த்தபோது என் மனம் நிம்மதியடைந்தது. உபயோக மில்லாத புத்தகங்களினால் எவ்வளவு தீங்கு நேரிடும் என்பதை இன்று தான் உணர்ந்தேன்!" என்று கூறினான் நித்திய விநாயகம்.

"என்னையும் நீங்கள் மன்னிக்க வேண்டும்! நானும் அந்த 'மெய்சொல்லாள்' எழுதியதை நம்பி சென்ற மூன்று வாரங்களாக நிம்மதியிழந்திருந்தேன். அன்பு வடிவமாக உங்களையெண்ணுவதற்குப் பதிலாகச் சந்தேகம் கொண்டேன். என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும்!" என்று உணர்ச்சி ததும்பக் கூறினாள் சத்திய சுந்தரி.

"உன்னையும் என்னையும் பிரிக்க நினைத்த அந்த 'உண்மைக் கொல்லி'யையும் 'மெய்

சொல்லானை'யும் இதோ ஒழித்து விடுகிறேன் பார்!" என்று சொல்லிக் கொண்டே திருமணப் பரிசுகளான அவ்விரு புத்தகங்களையும் நாலாக மடித்து எட்டாகக் கிழித்துக் காற்றில் பறக்கவிட்டான் நித்திய விநாயகம்.

"நமக்குத் திருமணப் பரிசுகளாக இப்புத்தகங்களைக் கொடுத்த நம் நண்பர்களுக்கு உயரிய கற்பனைகளையும் மானிட சமூகத்தை உயர்த்தும் நோக்கத்துடன் அறிஞர்கள் எழுதிய புத்தகங்களையும் பதிலுக்குப் பரிசாக அனுப்ப வேண்டும்!" என்று சத்திய சுந்தரி தீர்மானித்ததை நித்திய விநாயகம் முழு மனதுடன் ஆமோதித்தான்.

"ஆனால் இதோடு விடக் கூடாது. நம் போன்ற புதுத் தம்பதிகள் கிளர்ச்சி செய்தால்தான் மேற்கொண்டு யுவர்களும் யுவதிகளும் இம் மாய வலையில் விழ மாட்டார்கள்" என்று ஏககாலத்தில் வந்த வார்த்தைகள் இருவருக்கும் உண்மையாகப் பட்டன.

ஆனால் மறுநாளே திருமணத்தின் போது நித்திய விநாயகம் ஆர்டர் கொடுத்த மற்ற மூன்று புத்தகங்களும் தபாலில் வந்தன. அதே போல் சத்திய சுந்தரி ஆர்டர் கொடுத்திருந்த மூன்று புத்தகங்களையும் அவன் வீட்டார் அவனிடம் கொடுத்துவிட்டுச் சென்றார்கள். வேடிக்கையுடன் தம்பதிகள் இருவரும் தத்தம் பார்சல்களைப் பிரித்தபோது மற்றொரு வேடிக்கை காத்திருந்தது. 'எமது புதிய வெளியீடுகள்' என்ற லிஸ்டில் "உன்மைக் கொல்லி'க்கு ஒரு சாட்டை" என்ற புத்தகமும், "'மெய் சொல்லா'னுக்கு ஒரு மறுப்பு" என்ற புத்தகமும் இடம் பெற்று அவர்கள் கண்ணைப் பறித்தன.

"ஆஹா! 'பலாச்சுளைப் பதிப்பக'த்தாரின் மூளையே மூளை!" என்று சத்திய சுந்தரியும் நித்திய விநாயகமும் வியந்தார்கள். பாவம், அவர்களுக்கு அந்த எல்லாப் புத்தகங்களில் காணப்படும் பல பெயர்களுடைய மூளையும் ஒருவருடையதே என்ற விஷயம் தெரியாது!

# ✿ அசடு வழிந்தது!

**கடகம்**

தீபாவளிக்கு ஒரு வாரம் இருந்தது. அன்று காலை பத்து மணியிருக்கும். நான் என் நண்பர் கந்தையாப் பிள்ளை வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து, அவருடன் பேசிக் கொண்டிருந்தேன். அவர் ஒரு மாதமாகவே ஊரில் இல்லை. வெளியூர்களுக்குப் போய்விட்டு முதல் நாள் இரவுதான் திரும்பினார். அவர் தம் பிரயாண அனுபவங்களை என்னிடம் சொல்லிக் கொண்டே வந்தார்.

அப்பொழுது தபால்காரர் அங்கு வந்தார். ஒரு கடிதத்தை அவரிடம் கொடுத்தார்.

"உங்களுக்கு ஒரு மணியார்டரும் வந்திருக்குங்க" என்றார் தொடர்ந்து.

"எனக்கா மணியார்டர்? எனக்குப் பணம் அனுப்புகிறவர்களும் இருக்கிறார்களா?" என்றார் அவர் ஆச்சரியத்தோடு.

"தீபாவளி சமயம், பாருங்கள்! உங்களுக்கு தீபாவளிப் பரிசாக அனுப்பி யிருப்பார்கள்" என்று கூறி நான் சிரித்தேன்.

"போமய்யா, இந்த வயசில் தான் எனக்கு தீபாவளி வரிசைப் பணம் வரப் போகிறதா?" என்றார் அவர். அவருக்கு வயது ஐம்பது.

தபால்காரர் பத்து ரூபாய் பணத்தையும், மணியார்டர் பாரத்தையும் எடுத்து அவர் முன்னால் வைத்தார்.

"பணம் யார் அனுப்பி யிருப்பார்கள்?" என்றறியக் கந்தையாப் பிள்ளை மணியார்டர் பாரத்தை வாங்கிப் பார்த்தார். அடுத்த கணம் அவர் முகத்தில் அசடு வழிந்தது. நான் ஒன்றும் புரியாமல் உட்கார்ந்திருந்தேன்.

அவர் கையெழுத்துப் போட்டு, பணத்தைப் பெற்றுக் கொண்டார். தபால்காரர் அங்கிருந்து போய் விட்டார்.

"இந்தத் தீபாவளிப் பரிசு எங்கிருந்து வந்திருக்கிறது?" என்று என்னால் கேட்காமல் இருக்க முடியவில்லை.

"என்னய்யா நீர் ஒன்று. எனக்கு வரிசைப் பணம் வந்து விட்டதாகக் குதிக்கிறீர்!" என்றார் அவர் சற்றுக் கோபத்தோடு.

"எனக்குத் தெரியாமல் என்றால், எங்கிருந்து பணம் வந்திருக்கிறது என்று சொன்னால், தெரிந்து கொள்கிறேன்" என்றேன்.

"உமக்குத் தெரியாத ரகசியம் என்னிடம் உண்டா? நேற்று கடலூரிலிருந்தேன் மாயவரத்திலிருக்கும் என் மாப்பிள்ளைக்கு, தீபாவளி வரிசைப் பணமாக இருக்கட்டும் என்று பத்து ரூபாய் அனுப்பினேன். மணியார்டர் பாரத்தில், பணம் பெற்றுக் கொள்பவர் விலாசம் எழுத வேண்டிய இடத்தில், அனுப்பியவர் விலாசத்தையும், அனுப்பியவர் விலாசம் எழுத வேண்டிய இடத்தில் பெற்றுக் கொள்பவர் விலாசத்தையும் தவறுதலாக எழுதி விட்டிருக்கிறேன். இரண்டு விலாசங்களும் வெளியூராக இருந்திருந்தால், மணியார்டர் குமாஸ்தாவும் இதைத் தவறு என்று நினைத்திருக்க முடியாது. கடையில் மணியார்டர் என்னையே துரத்திக் கொண்டு வந்து விட்டது" என்று கூறி அசடுக் கொண்டார்.

"அப்படிச் சொல்லுங்கள். இது சிங்களாகப் பார்த்து. உங்களுக்கு அனுப்பிக் கொண்ட தீபாவளிப் பரிசு தான்!" என்று நானும் விழுந்து விழுந்து சிரித்தேன்.

வாசனை இல்லை





கசப்பில்லை

SWASTIK







மிகச் சிறந்தது - இது ஒரு ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் தயாரிப்பு

SOM 193

# தேர்தல் விநோதம்!

**கோமதி சாமிநாதன்**

பிள்ளையார் அச்சக மானேஜர் பிரமநாயகம் பிரமித்தே போனார்! தன் எதிரிலே உட்கார்ந்திருப்பவருக்குப் பைத்தியமோ என்று கூட அவருக்குச் சந்தேகம் ஏற்பட ஆரம்பித்தது. ஆனால் ஆசாமி ரொம்ப நவநாகரிகமாக உடையணிந்திருந்த பாணியிலிருந்தும், அவர் சட்டைப் பையிலிருந்து மின்னிக் கொண்டிருந்த தங்க பார்க்கர் பேனா, கண்களை அலங்கரித்துக் கொண்டிருந்த ரோல்டுகோல்டு பிரேம் கண்ணாடி, ஆங்காங்கு அவர் தமிழ்ப் பேச்சுக்கு அழகு கொடுத்துக் கொண்டிருந்த ஆங்கிலப் பதங்கள், இவைகளிலிருந்தும் அந்த அங்கவஸ்திர ஆசாமி சுவாதீனமான மனிதர் என்று ஊகித்தார் பிரமநாயகம். ஆனால், அந்த ஆசாமி, அச்சடிப்பதற்காகக் கொண்டு வந்த விஷயம் மாத்திரம் அவரை ஆச்சர்யக் கடலுக்குள் அழுத்திக் கொண்டிருந்தது.

"என்ன சார்! சுவர் ஒட்டி விளம்பர அளவில் நீங்கள் அச்சு அடிக்கச் சொல்லும் விஷயம் அரைகுறையாகவும் பூர்ண அர்த்தம் தொனிக்காமலும் இருக்கிறதே! 'என்று மனப்பால் குடிக்காதீர்கள்' 'என்று பகற்கனவு காணாதீர்கள்' 'என்று நினைத்து ஏமாறாதீர்கள்' 'என்று எதிர் பார்த்து மோசம் போகாதீர்கள்' இந்த தினுசில் ரகத்துக்கு இருநூறு விதம் எண்ணூறு கேட்கிறீர்கள். அச்சு அடித்துக் கொடுப்பதில் ஒன்றும் ஆட்சேபணையில்லை!...ஆனால் விஷயம் என்னவோ மிக வேடிக்கையாகவும் புரியாமலும் இருக்கிறதே! என்னுடைய இருபத்து ஐந்து வருஷ அனுபவத்தில் இந்த மாதிரியான வேலைகளை நான் வாங்கினதே இல்லை..."

பிரமநாயகத்தின் பேச்சை முடிக்க விடவில்லை அந்தக் கண்ணாடிக்காரர். "சார்! இதைப் பற்றி உங்களுக்குச் சொல்லப் போனால் என் குடும்ப ரகசியத்தையெல்லாம் உங்களிடம் சொல்ல வேண்டி வரும்!...... பரவாயில்லை! என் சம்சாரம் இருக்கிறாளே, அவளும் அவள் குழந்தைகளும் வீட்டில் என்னைப் பெட்டிப் பாம்பாக வைத்திருக்கிறார்கள். இன்று சினிமாவுக்குப் போக வேண்டும் என்று உத்தரவு போட்டால், நான் காரியாலயத்துக்கு லீவு போட்டு விட்டாவது அவர்களைச் சினிமாவுக்குக் கூட்டிப் போக வேண்டும்! டிராமாவா, சங்கீதக் கச்சேரியா, அதே போலத்தான்!...இந்த மாதிரி பரிதாபகரமான நிலைமையிலிருந்து விடுபட மனோதத்துவ டாக்டர் ஒருவர்தான் இந்த அருமையான யோசனையைச் சொன்னார்.

"ஐயோ பாவம்! உங்கள் பாடு ரொம்பவும் திண்டாட்டம் தான் போலிருக்கிறது" என்றார் பிரமநாயகம் இடையிலே.

"கேளுங்கள்! என் மனைவி, 'இன்று சினிமாவுக்குப் போக வேண்டும்' என்று சொன்னவுடன், கொட்டை எழுத்துக்களில் அச்சடிக்கப்பட்டிருக்கும் 'என்று மனப்பால் குடிக்காதீர்கள்' என்ற ஒரு காகிதத்தை அவள் கண்களில் தட்டுப்படும் படியாகப் பிடிக்க வேண்டும். வாயால் சொல்லும் படியான



தமிழ் ஆஸ்தான கவிஞர் ஸ்ரீ வெ. ராமலிங்கம் பிள்ளையின் மகன் செல்வன் பாலசுப்ரமணியனுக்கும் கவிஞரின் மைத்துனன் ஸ்ரீ ஏ. சோமசுந்தரம் அவர்களின் மகள் செல்வி சுகுணாவுக்கும் சென்ற 7-11-52 அன்று நாமக்கல்லில் கவிஞர் இல்லத்தில் திருமணம் சிறப்புற நடைபெற்றது. ராஜாஜி, விந்தியப் பிரதேச கவர்னர், சென்னை மந்திரிகள், டில்லி மந்திரிகள் முதலியோரிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்தன. அன்று மாலை ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரியின் இன்னிசையும் சிறப்புற நிகழ்ந்தது.

தைரியம் சமீப காலத்தில் வரும் என்று டாக்டர் நம்பவில்லை! அதனால்தான் இந்த மாதிரி யோசனை. 'இன்று புடவைக் கடைக்குப் போக வேண்டும்' என்றால், உடனே நான், 'என்று நினைத்து ஏமாறாதீர்கள்' என்ற வேறு காகிதத்தைத் தூக்கிக் காண்பித்துக் கொண்டே கண்களை இறுக்கி மூடிக் கொள்வேன்! அவள் முக பாவத்தைப் பார்ப்பதாலோ, அவளுடன் பேச ஆரம்பிப்பதாலோ என் மனோ தைரியம் போய்விடும் என்பதற்காகத்தான் கண்களை மூடிக் கொள்ளச் சொல்லியிருக்கிறார். பலவித காரியங்களுக்கு விதம் விதமான பதில்கள்! புரிந்ததா? இந்த ரகசியத்தை மனதிற்குள் வைத்துக் கொள்ளுங்கள்" என்றார் கண்ணாடிக்காரர்.

"சரியான டாக்டரிட்டேதான் போயிருக்கிறீர்கள்! உலகத்திலே நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது வீடுகளிலே இப்படித்தான் இருக்கிறது! இப்போது புரிந்தது சார் உங்கள் ஆர்டர் விஷயம்! நாளை சாயங்காலமே வந்து வாங்கிக் கொண்டு போங்கள்" என்றார் மானேஜர் பிரமநாயகம்.

"இந்தாருங்கள்! உங்கள் அச்சுக் கூலியை முன்னாலேயே பிடியுங்கள்! ஒரு வேளை இந்தப் பணத்தையும், என் சம்சாரம் பிடுங்கிக் கொண்டு விடுவாள்......சார்! இன்னொரு விஷயம்! கீழ் ஓரத்திலே 'பிள்ளையார் பிரஸ்ஸில் அச்சடிக்கப் பட்டது' என்றும் பெரிய எழுத்தில் போட்டு விடுங்கள். உங்கள் அச்சாபீசுக்கு விளம்பரமாகவும் இருக்கும். என் போன்றவர்கள் உடனே இங்கு வருவார்களல்லவா?" என்று சொல்லிக் கொண்டே ரூபாயைக் கொடுத்தார். பிறகு விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார் கண்ணாடிக்காரர்.

இரண்டு நாட்கள் கழித்து ஒரு நாள் காலையில் நகரத்தின் ஒரு பகுதியான யமப்பேட்டை அல்லோல கல்லோலப் பட்டது! ஜனங்களெல்லோரும் சுவர்களை அண்ணாந்து பார்த்துக்கொண்டே நின்று விட்டார்கள்! ஆச்சர்யத்தினால் மூக்கில் விரலை வைத்தார்கள். அருகில் போய்க் கவனித்து விட்டு வந்த நபர் ஒருவர் "நம் பேட்டையின் கௌன்ஸிலர் தேர்தலுக்கு நிற்கிறாரே விநாயக முதலியார் அவருக்கு விரோதமாகவே அவர் பிரஸ்ஸிலிருந்தே பிரசாரம் நடக்கிறது பார்த்தீரா? நேற்று எங்கள் வோட்டு ஸ்ரீமான் விநாயக முதலியாருக்கு என்று அல்லவா ஒட்டியிருந்தது. இன்று அதற்குத் தொடர்ச்சியாக நேர் விரோதமாகவல்லவா இருக்கிறது. சரிதான்! இது அந்த பிரமநாயகத்தின் வேலையாகவே கூட இருக்கலாம்! அவர்கள் அச்சாபீஸ் வேலைக்காரர்களே, முதலாளிக்கு விரோதமாகப் பிரசாரம் பண்ண ஆரம்பித்துவிட்டார்களா?......பிரஸ் முதலாளி விநாயக முதலியார் ஜயித்து விட்டாற்போல்தான்" என்றார் பிரசங்க பாணியில். இந்தப் பேச்சு காட்டுத்தீபோல் பேட்டை முழுவதும் பரவி விட்டது.

விநாயக முதலியார் மனைவிதான் முதன் முதலாக இந்த விஷயத்தை கணவனிடம் சொன்னாள். "கேட்டீங்களா அநியாயத்தை" என்றாள் நீட்டி முழக்கிக் கொண்டே!

"நம் வாசல் சுவரைப் போய்ப் பாருங்கள்! நம் மானம் போகுது" என்று கவலையோடு கூறினாள். முதலியாருக்கு ஒன்றும் புரியவில்லை. எதற்கும் போய்ப் பார்த்து விட்டு வந்து விடலாமே என்று கிளம்பினார்.

அடுத்த நிமிஷத்தில் நெருப்பை மிதித்தவர்போல் துள்ளிக் கொண்டு "அயோக்கியப் பசங்கள்! இது யாரு வேலை?" என்று பயங்கரமாக உறுமினார்.

"நான்தான் அப்போதே சொன்னேனே! எல்லோரையும்போல் 'தயவுசெய்து உங்கள் வோட்டை இன்னாருக்குப் போடுங்கள்' என்று நோட்டீஸ் அடிக்காமல், அப்படியே இந்தப் பேட்டை மக்கள் மனோபாவத்தைப் பிரதிபலிப்பது போலவே 'எங்கள் வோட்டு ஸ்ரீமான் ...... முதலியாருக்கே' என்று புது மாதிரியாக நோட்டீஸ் ஒட்டினீர்கள். யாரோ புத்திசாலி, தொடர்கதைபோலே இரண்டாம் பாகமாக ஒரு நோட்டீஸ் அடித்து நீங்கள் நோட்டீஸ் ஒட்டியிருக்கிற இடத்திலெல்லாம் தொடர்ச்சியாக ஒட்டி விட்டான்! அதிலும் வயிற்றெரிச்சல் உங்கள் அச்சாபீஸிலேயே அடித்திருக்கான் பாருங்கள்" என்று அங்கலாய்த்தாள் ஸ்ரீமதி விநாயக முதலியார்.

"எங்கள் வோட்டு ஸ்ரீமான் விநாயக முதலியாருக்கே என்று மனப்பால் குடிக்காதீர்கள்" "எங்கள் வோட்டு ஸ்ரீமான் விநாயக முதலியாருக்கே என்று பகற் கனவு காணாதீர்கள்", "எங்கள் வோட்டு ஸ்ரீமான் விநாயக முதலியாருக்கே என்று நினைத்து ஏமாறாதீர்கள்", "எங்கள் வோட்டு ஸ்ரீமான் விநாயக முதலியாருக்கே என்று எதிர்பார்த்து மோசம் போகாதீர்கள்" என்ற சுவரொட்டி விளம்பரங்கள் நகர சபைத் தேர்தல் முடிந்து வெகு நாட்கள் வரையிலும் கூட காட்சியளித்தன. தேர்தலில் அவைகள் முதலியாரை ஜயிக்க விடாமலும் செய்து விட்டன.

"அட பாவி! ஏதோ டாக்டர் சொன்னார், மனைவிக்குப் பயப்படுகிறேன் என்றெல்லாம் சொல்லி ஏமாற்றி இதற்கா நோட்டீஸ் அடித்துக் கொண்டு போனான். நம் முதலாளி நோட்டீஸ் ஒட்டின இடத்துக்குக் கீழே தொடர்ச்சியாக ஒட்டி, வோட்டுப் பெட்டியைக் காலியாகச் செய்து விட்டு அந்தக் கண்ணாடிக்காரன் அல்லவா ஜெயித்து விட்டான். இதற்குத்தானா அந்த வேஷம் போட்டான்! இதுவும் ஒரு தேர்தல் விநோதம் தான்!" என்று ஆச்சர்யக் கடலில் ஆழ்ந்திருந்தார் ஸ்ரீமான் பிரமநாயகம்! இப்பொழுதெல்லாம் சாதாரணமான கல்யாணப் பத்திரிகை அச்சடிக்க யாராவது வந்தால் கூட அவர் அவ்வளவு சுலபமாக நம்புவதில்லை!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road Kilpauk Madras

''சரும அழகைப்பெற நான்

# லக்ஸ் டாய்லட் சோப்பையே

நம்பியிருக்கிறேன்''

என்று சொல்கிறார்

மாதுரி தேவி




இனிய மணத்துடன் கூடிய
இந்த வெண்மையானதும் சுத்த
மானதுமான சோப் உங்கள் சருமத்தை
வசீகரமாகச்செய்யும்!

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 336-X30 TM

**REGD. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*

# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது.

- சமையலுக்கு எல்லாவற்றையும் விடச் சிறந்தது
- சக்திக்கு எல்லாவற்றையும் விடச் சிறந்தது

டால்டா உணவுக்குச் சிறந்த ருசியைத்தருகிறது. மேலும் டாக்டர்கள் உங்களுக்குத் தேவை என்று கூறும் சக்திதரும் கொழுப்பை உங்களுக்குக்கிடைக்கச் செய்கிறது. பிரத்தியேகமான சீல் செய்த டின்னில் அடைத்திருப்பதால் டால்டா உங்களுக்கு புதிதாகவும், சுத்தமாகவும் கிடைக்கிறது. அன்றியும் கைபடாமல் தயாரிக்கப்பட்டது.

## ஒரு ஆதர்ச குடும்பஸ்திரீ எப்படிப்பட்டவள்?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது
என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள் :
தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா

தேவைக்குத் தகுந்தவாறு பல சைஸ்களில் கிடைக்கிறது

HVM. 185-50 TM